உ

கோரக்க மகரிஷி நாகார்ச்சுனுதி முனிவர்களுக்கு
திருவாய்மலர்ந்தருளிய மலைவளமென்னும்

# மலைவாகடம்.

மதுரை வடக்குப்பெருமாள் மேஸ்திரி வீதி
வெ. இரங்கசாமியாசாரி யவர்கள்
கொடுத்த ஏட்டுப் பிரதியின்படி

திருச்செந்தூர்,
மு. கணபதிசாமியா ரவர்களால்
பார்வையிடப்பெற்று


மதுரை புதுமண்டபம் புத்தகஷாப்,
இ. ராம.
குருசாமிக்கோனார் சன்
அவர்களால் தமது

மதுரை, வடக்குமாசிவீதி
குருசாமிக்கோனார் தெரு
ஸ்ரீராமச்சந்திர விலாசம் பிரஸில்
பதிப்பிக்கப் பெற்றது.


 1940. [விலை ரூ 2

உ

கடவுள் துணை.

# ரிஜிஸ்தர் அறிவிப்பு.

இதனால் சகல அச்சுக்கூடத் ததிபர்களுக்கும், புத்தக வியாபாரிகளுக்கும் இன்னு மற்றுமுள்ளவர்களுக்குந் தெரிவிப்பது யாதெனில்:—

இந்தக் கோரக்கர் மலைவளமென்னும் மலைவாகடம், ஓலை யேட்டுச்சுவடியா யிருந்ததை எனது தகப்பனார் மகா-ா-ஸ்ரீ இ. ராம. குருசாமிக் கோனாரவர்களால் போதுமான பணச் செலவில் ஷை சாஸ்திரத்தை வாங்கிச் சீர் திருத்தி எழுதி வைத்திருந்ததை இப்பொழுது என்னால் அச்சிட்டு (கவர்ன்மெண்ட்) சட்டப்படி ரிஜிஸ்டர் செய்திருப்பதால் இச்சாஸ்திரத்தைப் பிறர் எவ்விதத்திலும் அச்சிடக்கூடா தென்பதை இதன்மூலம் தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்படிக்கு.

குரு. இராமசாமிக் கோன்,

புத்தகஷாப், புதுமண்டபம், மதுரை.

உ

பரமபதிதுணை

# முகவுரை.

செந்தமிழ்த் திலகமாய் விளங்கும் நந்தமிழ் நாட்டில் நமக்காக நமது மூதாதைகளாகிய சித்த மகான்கள் மிகுந்த கருணையோடு எழுதி வைத்த நூற்கள் சிற்சிலரிடத்தில்தான் இருக்கிறது. அதனை விரும்பிக் கேட்போருக்குங் கொடுக்காமல் தானும் அதன் பொருளைத் தெரிந்து அநுபவிக்காமல் என்னிடம் ஏராளமான ஏட்டுச்சுவடிக ளிருக்கிறது என்னும் பெருமைபேசி சித்தமகான்கள் உலக மக்க ளனைவர்களுக்கும் பயன் படுமாறு பாடுபட்டு எழுதி வைத்த நூற் களைப் பலருக்கும் பயன்கிடைக்கும்படி வெளிப்படுத்த மன மில்லாமல் சுயநலங் கருதும் நம்தமிழ் மக்களுக்கிடையே சேற்றில் செந்தாமரை பூத்ததுபோல் சோமசுந்தரப் பெருமான் சர்வ மங்கள சொரூபமாய் வீற்றிருக்கும் மதுரைமா நகரின்கண் ஆயர்குல திலகமா யவதரித்த ஸ்ரீமான் இ. ராம. குருசாமிக்கோனாரவர்கள் தமிழ் மக்களுக்காகப் பரிந்து சித்தவைத்தியத்தை விருத்தி செய்யவேண்டு மெனும் பேறவாக் கொண்டு தமிழ் நாடெங்குஞ் சென்று ஓலைச்சுவடிகள் வைத்திருப்பவர் களுக்கு வேண்டும் உபகாரஞ் செய்து அவர்கள் கேட்டபடி பொருள் கொடுத்து ஏராளமான ஓலைச் சுவடிகளைச் சேகரித்து அதில் சில சாஸ் திரங்களைத் தமது அச்சியந்திரசாலையில் அச்சிட்டுப் புத்தக ரூபமாக்கி வெளியிட்டும் தமிழ் சித்த வைத்தியர்களுக்கு மூலிகை பாஷாணம் சத்துரு மித்துருச் சரக்குகளின் பரிபாஷைப் பெயர்கள் தெளிவாகத் தெரியும் பொருட்டு அநுதாபத்துடன் அநேக ஏட்டுச்சுவடிகளின் உதவியைக்கொண்டு சித்த வைத்திய அகராதியைஅச்சிட்டு வெளியாக் கியும் சென்னை மாகாண சித்த வைத்திய சங்க அமைச்சர்களால் சித்தர் நூல் "ஆராய்ச்சிப் புலவர்" என்ற பட்டமுந் தங்க மெடலும் பரிசுபெற்று ஆங்கீரச ௵ தை ௴ இருபத்தாறுந் தேதி மங்கள வாரத்தன்று சிவபெருமான் திருவடிக்காளாகிச் சித்தர்களுடன் ஐக்கிய மாகக் கலந்து இந்நூலாசிரியராங் கோரக்க மகரிஷி குகைவாசஞ் செய்து வீற்றிருந்த தபோவனமென்னும் சதுரகிரிச் சார்பு மாவூற் றென்னுந் தலத்தில் சமாதியாகி யாவராலும் புகழப்பெற்றும் பூஜிக் கப்பெற்றும் விளங்குகிறார்: ஆதலால் செத்துஞ் சாகா நிலையை அடை ந்தவர்களுள் இவரும் ஒருவரே யாவர்.

இன்னவரின் அருந்தவப் புதல்வரான குரு. இராமசாமிக் கோனுரென்பவர் தமது பிதாவால் அச்சிட்டு வெளியாக்கிய நூல்களுடன் இன்னும் கைவசமுள்ள ஏனைய நூற்களை யெல்லாம் அச்சிட்டு வெளியாக்க எண்ணித் தமது பிதாவின் பெரும் புகழ் மங்காமல் விளங்கும்படியாக அகஸ்தியர் பரிபூரணம் 1200, கௌமதிநூல் 400, தர்க்க சாஸ்திரம் 300, பூஜாவிதி 200, ஜந்து சாஸ்திரம், யூகிமுனி கும்மி 1200, காகபுசண்டர் 1000, கொங்கணர் நடுக்காண்டம் 500 என்னுஞ் சில நூற்களை அச்சிட்டு வெளியாக்கி யுள்ளார். அதுவன்றி இப்போது கோரக்க மகரிஷி நாகார்ச்சுனுதி முனிவர்களுக்கு உபதேசித்த மலைவளம், மூலிகை, மகாமூலிகை, உதக மிருக்கு மிடங்களு மடங்கிய மலைவாகடமென்னும் இந்நூலை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறுர். இவ்வரிய நூல் உலகமாண்பர் யாவர்களுக்கு மிகுந்த பயனளிக்கும் ஆதலால் தமிழ் மக்களனைவர்களும் அவசியம் வாங்கி ஆராய்ச்சி செய்வாராயின் மிகுந்தபலனை அடைவார்களென்பதற் கையமே இல்லை.

புண்ணிய பூமியாகிய நந்தமிழ் நாட்டில் அனேக குடும்பங்களில் தந்தைசெய்த சற்கருமத்தைத் தனயனுஞ்செய்ததாகப் பார்ப்பதென்றல் சிறிது அபூர்வமாகத்தானிருக்குமென்பது எனது அபிப்பிராயம் ஆனல் நமது திருவாளர் குரு. இராமசாமிக் கோனுரவர்கள்

( திருக்குறள் ) மகன்றந்தைக்காற்று முதவி யிவன்றந்தை
என்னோற்றுன் கொல்லெனுஞ் சொல்

என்னுங் கருத்துக்கிணங்கத் தன் தந்தை புரிந்த உத்தமத் தொழிலையே தானுஞ் செய்வதற்குப் பேறவாக்கொண்டு தன் தந்தையால் வெளியிட்ட நூல்களுடன் கைவச மிருக்கும் ஏனைய நூற்களை யெல்லாம் முன்வந்து அச்சிட்டு வெளியிட்டுள்ளார் இத்துடன் இன்னும் அனேக நூற்களை வெளியிட வேண்டியதிருப்பதால் இவருக்கு நீண்ட ஆயுளும் அஷ்ட ஐஸ்வர்யமும் புத்ர சம்பத்தும் பெற்று நீடூழியாக வாழ வேண்டுமென்று எல்லாம் வல்ல இறைவ னடியைப் பிரார்த்திக்கின்றேன்.

இங்ஙனம்,

மூ. கணபதி சாமியார்

29—9—40 சித்த வைத்தியம், திருச்செந்தூர்.

# குறிப்புரை.

கோரக்கர் மலைவாகட மென்னும் இப்புத்தகத்தை ஆராய்சிசெய்யும் ஒவ்வொருவருக்குந் தெரிவிப்பது யாதெனில்,

மலைகளுக்குப் போக விருப்பமுள்ள யாவரும் குருபக்தி, தெய்வபக்தி, யுடையவராய்ப் பூசாக்கிரமப்படி தம்தம் இஷ்ட தெய்வத்தைப் பூசித்தும், தேவ ரிசி முனி சித்தர்களைத் துதித்தும், திரியாட்சரம், பஞ்சாட்சரம், அட்டாச்சர முதலிய மகா மந்திரங்களில் யாதேனுமொன்றைத் தியானித்தும் சுத்தியாய்ச் செல்லவேண்டும்.

இந்நூலிற் சொல்லியிருக்கும் உதகங்களைக் கோடை காலமாகிய பங்குனி, சித்திரை மாதங்களில் எடுக்க வேண்டுமென்று நூலிற் கூறியிருப்பதால் உதகமெடுக்கச் செல்பவர்கள் மது மாமிசங்களை நீக்கிவைத்து அதற்குரிய மந்திரங்களைப் பூசா நெய்வேத்தியத்துடன் பக்தியாகச் செபித்து முறைப்படி எடுப்பதே மிகுந்த பலனாகும்.

மூலிகை உதக முதலிய காரியங்களுக்காக மலைக்குப் போகிறவர்கள் தனியே போகாமல் உத்தம சீடர்கள் அல்லது உண்மைத் துணைவர்களுடன் சேர்ந்து போவதுதான் மிக்க நலமானது.

மலைகளிலிருக்குங் குகைக்குட் போக விருப்பமுள்ளவர் எவராயினும் அவர்கள் யோகாப்பியாச முள்ள புனிதராயிருந்தால் மாத்திரம் குகைக்குள் நுழைவதற்கு ஏதுவாகும்.

கற்பம், மருந்து, இவைகளுக்காக மூலிகைகளைப் பிடுங்கும்போது முதலில் அதற்குரிய சாப நிவிர்த்தி மந்திரங்களைச் செபித்து அந்த மூலிகைகளைப் பிடுங்கினால் காரிய சித்தி யடையலாகும்.

கற்பஞ் சாப்பிடச் சொல்லிய அளவுகளை மற்ற நூல்களில் கூறியிருப்பதையும் கவனித்து தற்கால அளவுக்குத் தக்கவாறும் அவரவர்கள் தேக நிலைமைக்கு யேற்றவாறும் கவனித்துச் செய்ய வேண்டும்.

கற்பஞ் சாப்பிடுகிறவர்கள் இதிற் கூறியிருக்கும் பத்தியங்களில் அணுவளவாவது தவறாமலும் தனக்கு உதவியான உத்தமச் சீடர்களையாவது உயிர்த் தோழர்களையாவது துணையாக வைத்துக் கொண்டும் சாப்பிடுவதே முக்கியமான காரியம்.

மலைக்குப் போய்த் தாங்கள் கோரிய காரியங்களை நிறைவேற்றிக் கீழே யிறங்கிச் சுமார் ஐந்து ஆறு நாட்கள் வரைக்கும் தாம் மலைமேல் சாப்பிட்ட சுனைத் தண்ணீரின் வேகம் நமது சரீரத்தி லிருக்கு மாதலால் மலையிலிருந்து கீழே யிறங்கி வந்த பின் பத்து நாட்கள் வரைக்கும் பத்தியமாக இலகுவில் சீரணிக்கக் கூடிய ஆகாராதிகளை உட்கொண்டு மிருக்க வேண்டியது.

இந்நூலிற் கூறியுள்ள ஒவ்வொரு கற்ப முறைகளுக்கும் அடியில் ( இதன் விபரங்களை இன்ன நூலிற் கூறி யிருக்கிறது ) என்று எழுதி யிருப்பதின் கருத்தாவது: என்னவென்றால் இந்நூலிற் கற்ப மூலிகை யென்று யிருப்பவைகளுக்கு மற்றச் சித்தர்களும் அக் கற்ப மூலிகைகளின் விபரங்களை அவரவர்கள் நூல்களிலுங் கூறியுள்ளதுந் தவிர அவர்கள் அநுபோக முறைகளையும் கவனித்து செய்வதற்கு இடமாகு மென்பதைக் குறிக்கப் பட்டுள்ளதே யாகும்.

இந்நூலைக் கோரக்க மகா முனிவர் நாகார்ச்சுனை முனிவர் களுக்கு உபதேசித்தா ரென்பதைக் கருவூராரும் வாதகாவியம் 700 ல் கூறியிருக்கிறார். பார்க்கவும்.

இந் நூலில் கூறியிருக்கும் மூலிகைகள் அநேகமாய் நாட்டிலும் முளைத்திருக்கக் காண்கிறோம். ஆனாலும் மலைகளில் பாசாணச் சரக்குக ளிருப்பதால் அவ்விடத்தில் முளைத்திருக்கும் மூலிகைகள் கார சாரமா யிருக்கு மென்பதற்கு ஆதாரமாக யாகோபு முனிவர் சுண்ணக் காண்டம் அறுநூறில் கூறியிருக்கிறார் பார்க்கவும்.

இதில் கண்டிருக்கும் மூலிகைகளைக் கொண்டு வர மலை களுக்குப் போக வேண்டுமானால் சேங்கொட்டை, தில்லை, தும்புலா, முதலிய மரங்கள் புட்பிக்கும் காலங்களிற் செல்லாமல் மற்ற காலங்களிற் போவது உசிதமாகும்.

இதன் மேலே கண்ட குறிப்புரையி லுள்ள விஷயங்களை நூல்முக மாகவும், விசாரணை மூலமாகவும், அனுபவ மூலமாகவும் தெரிந்த வரையிலும் கூறியிருக்கிறது இதுவன்றி இன்னும் வேறு விஷயங்க ளிருப்பினும் அவ் விஷயங்களை மலை சஞ்சார அநுபவமுள்ள மற்றவர் களிட மிருந்தும் தெரிந்து கொள்வது நன்று.

உ

பரமபதி துணை.

கோரக்க மகரிஷி நாகார்ச்சுனுதி முனிவர்களுக்குத்
திருவாய் மலர்ந்தருளிய

# மலை வள சாஸ்திரமென்னும்

# மலைவாகடம்

காப்பு.

சோதிசுயஞ் சோதிமனோன் மணியாள் பாதம்
தொழுதுமவள் பொற்பதத்தைப் போற்றி செய்து
பாதிமதி தனையணிந்த பரமன் றன்னைப்
பணிந்துபதி னெண்சித்தர் பாதம் போற்றி
மேதினியை யளந்தநெடு மாலின் மார்பை
விலகாமல் வீற்றிருக்குந் திருவி னோடு
சாதிபல படைத்தசதுர் முகவன் வாணி
தனைப் பணிந்து யிந்நூலைச் சாற்று வேனே.

நூல்

பொன்னுட்டிலு மென்னுட்டிலுஞ் சிறந்த மதுரையம்பதிக்குத் தென்மேற்குப் பக்கம் சதுரகிரி மலைச்சாரில் தபோவனமென்று பெயர் விளங்கிய மா தலத்தின்கண் அனேக ரிஷிகளும் முனிவர்களுந் தவசு செய்து கொண்டிருக்கிற காலத்தில் நாகார்ச்சுனுதி முனிவர்கள் அங்குவந்து கோரக்க மகரிஷியைக் கண்டு மேருகிரி தென்பாரிசத்திலும் பொதிகை கிரிக்கு வடபாரிசத்திலும் ஆங்குள்ள சகல மலைவளங்களையும் அங்குவாசஞ் செய்திருந்த சித்தர்களால் முடித்த 108 கற்பமென்னும் மூலிகை, மகா மூலிகை உதகம் முதலாகிய வைப்புகள் இருக்குமிடமும அவைகளை அடையுமார்க்கமும் அதை உண்டு நீண்டகாலம் ஜீவித்திருக்கு மார்க்கங்களையும் சொல்ல வேண்டு மென்று கேட்டுக்கொள்ள அதுபோல் கோரக்க மகரிஷியானவர் சொல்லத் தொடங்கினூர்.

## நாகார்ச்சுன முனிவர்களுக்குக்
## கோரக்க மகரிஷி சொல்லுதல்.

கேளுங்கள் நாகார்ச்சுனாதி முனிவர்களே இத்தலத்திற்கு தென் மேற்கு மூலையில் சமுத்திரமிருக்கிறது அந்த சமுத்திரத்திற்குத் தென் கரையில் பத்து நாழிகை தூரத்துக்கப்பால் மலைகளிருக்கிறது அந்த மலைகளிலும் மலையடிவாரத்திலும் குடிகளிருக்கக் கூடிய பெரிய நகர மிருக்கிறது. அந் நகரம் மலையிலிருப்பதால் அதற்கு மலையாளம் திருவனந்தபுர மென்னும் பெயராகும் அந் நகரத்திற்கு வடக்கே பெரிய மலைகளிருக்கிறது அந்த மலையைத் தொடர்ந்து வராககிரி நீலகிரிவரை மலைகள் தொடர்ந்தே யிருக்கிறது இப்படி யிருக்கிற மலைகளில் சித்தர் முனிவர் ரிஷிகள் முதலானவர்கள் ஆச்சிரமும் குகைகளும் உற்பத்தி செய்து அவைகளில் வாசஞ்செய்து வருகிறார்கள். அந்த மலைகளில் விளைவுப் பாஷாணங்களும் கற்பமூலிகைகளும் உதகங்களு மிருக்கிறது இது சித்தர் முனிவர்களுக்கும் தவயோகிகளுக்கும் உபயோகமானது இந்த மூன்றின் விபரங்களையும் சொல்லிவருகிறேன் கேளுங்களென்று சொல்லத் தொடங்கினார்.

### 1 - முப்பூ உண்டான விபரம்.

கேளுங்கள் முனிவர்களே பூலோகத்தில் பூநீர் உப்பென்றும் பாறை உப்பென்றும் உதக உப்பென்றும் மூன்றுவித உப்புகளும் மூன்றுவிதச் செயநீராகும் இந்த உப்புகளினால் பாஷாணங்களை பற்ப சுண்ணச் செந்தூரங்கள் செய்யலாகும் இம் மூன்று உப்புகளும் ரெம்பக் காரசாரமுள்ளது. இந்த உப்பானது ஆகாயத்தில் மேகங்கள் திரண்டு பானுவினால் சமுத்திர நீரையுண்டு களியுப்பாயிருந்து மேகம் இழையும்போது கக்குகின்ற உப்பானது இப் பூலோகத்தில் இடியாக பூமி சமுத்திரம் மலை இந்த மூன்றிடங்களில் தான் விழும் பூமியில் விழுந்தால் உவர் நிலங்களிழுத்துக்கொள்ளும் அப்படி உவர் நிலங்களிழுத்துப் பூமிக்குள் போகையில் சத்தி யிருந்து கிரகித்துக் கொண்டதினால் அங்கே அண்டக் கல்லாக நின்று அப் பூமியை யெல்லாம் உவர் நிலமாக்கி தரைமேலே உவர்ப்பூ பூத்திருக்கிறது இதற்குத்தான் பூமி நாத மென்றும் பூநீர் உப்பென்றும் கானல் பூவென்றும் வெடியுப்பென்றும்பெயர் இதை யெடுத்துச் செய நீராக்கி பாஷாணங்களைச் சுண்ணம் செந்தூரம் பற்பங்களாகச் செய்யலாம்.

## 2 - பாறை உப்பு.

மேற்சொன்ன இடியானது பூமியில் விழாமல் சமுத்திரத்தில் விழுந்தால் தண்ணீருக்குள் போக விடாமல் சத்தியிருந்து கிரகித்து தன்னிடத்திலயிக்கியமாய் வைத்துக்கொண்டதினால் பாறையுப்பாக விளைந்து தண்ணீருக்குள் உறைந்து பாறையாகப் படர்ந்தும் சிலது தண்ணீரில் மிதந்து மிருக்கிறது. இன்னுஞ் சில இடங்களிலும் திருப்புராணி சமுத்திரக்கரை யோரத்திலு மிருக்கிற திட்டுக் குளத்தில் சமுத்திர நீர் பெருகுகின்ற தண்ணீர்க்குள் பாறை போல் உப்பு உறைந்திருக்கிறது. அதுவும் பாறை உப்புத்தான் இதினாலும் பாஷாணங்களைப் பற்பம் சுண்ணம் செந்தூரம் செய்யலாம்.

## 3 - உதகநீர் உப்பு.

இந்த இடியானது பூமி யிலும் சமுத்திரத்திலும் விழாமல் மலைகளில் விழுந்தால் அந்த மலை வெடித்து இடி விழுந்த யிடம் பிளந்து உள்ளே போகிறபோது அங்கே சத்தி கீழே போகவிடாமல் மத்தியில் நிறுத்தி தன்னுக்குள் ஐக்கியமாய் வைத்துக்கொள்ள அந்த உப்பானது மலையை உள்ளே சல்லி சல்லியாய்த் துளைத்து மணற் போலாக்கிக் கொள்கிறது. அதில் மழை பெய்து தண்ணீர் உள்ளே சென்று மஞ்சள் சிவப்பு நிறமான பாசங்கள் குருணைச் சோறு போல் குகைக்குள்ளே நின்று ஊற்றுப்போல் மலை வெடிப்புகளில் நீர் கசிந்து பெருகி வெளியேறி பக்கத்திலிருக்கும் பள்ளத்தாக்கில் வந்து விழுந்து நின்று அந்த யிடத்தையும் உப்புச் சாப்பிட்டு தண்ணீரிருக்கிற பெரிய சுனைபோலிருக்கிறது இந்த நீர்தான் உதக நீரென்பது இந்நீரை மானிடர் மிருகம் பறவை முதலான சாதிகள் தண்ணீர் குடித்தால் கல்லாய்ப் போகு மாகையால் இதை யாவருஞ் சாப்பிடக்கூடாது அதற்கு அடையாளம் கழுநீர் தண்ணீர்போலும் மஞ்சள் கலக்கின தண்ணீர் போலும் சிவந்த நீராகவும் பச்சை நீராகவும் கருப்பு நீராகவும் குழகுழப்பாகவும் பிசுபிசுப்பாகவுமிருக்கும்.

## 4 - உதக நீரின் குணங்கள்.

கேளுங்கள் முனிவர்களே உதக நீரானது எப்போதும் வற்றாது மழை பெய்து தண்ணீர் வந்தால் அந்த உதகத்தின் மேலேதானிற்கும் வெயிலில் வற்றிப் போகும் மரம் செடி கொடிகளின் இலையாவது குச்சியாவது உதக நீரில் விழுந்தால் யாவுங் கல்லாய்ப் போய்

விடும் அப்படிக் கல்லாகிச் சுனைக்குள் கிடக்கும்பொழுது பெரிய மழை பெய்தால் அந்த உதக நீரையும் அதற்குள் கல்லாய் கிடக்கிற மணல்களையும் அடித்து இழுத்துக்கொண்டு ஆறுகளிலும் ஓடைகளிலும் மணலாக்கிக் கொண்டு வந்து தள்ளி விடும். அந்த மணல் தான் ஆறுகளில் கிடக்கிறது இந்த உதகநீரில் பத்துவிதமிருக்கிறது அதாவது சணவேதி நாள்வேதி இருநாள்வேதி திரிவேதி பஞ்சவேதி சப்தவேதி தசவேதி மாதவேதி மண்டலவேதி அறுபது நாள்வேதி எனப் பத்துவித வேதிகளிருக்கிறது ஆகையாலிந்த உதகங்களை இன்னவித உதகமென்று கண்டு பிடித்து எந்தப் பாத்திரத்திலெடுக்கச் சொல்லியிருக்கிறதோ அந்தப் பாத்திரங்களிலெடுக்கும்பொழுது மந்திரங்களைச் செபித்து எடுக்க வேண்டும் அன்னியில் அண்டத்திலுள்ள உதகநீர் பிண்டத்திலுமிருக்கிறது அதனைச் சித்தர் நூல்களின் மூலம் தெரிந்துகொள்ளவும்.

## 5 - சணவேதி உதகநீர்.

கேளுங்கள் முனிவர்களே சணவேதி உதகமென்பது வெண்மையாய் கழுநீர்போல் முறைத்துப் பிசுபிசுப்பாயிருக்கும் அதிலொரு குச்சியை விட்டால் உதகம் பட்ட வரையிலும் மூன்றே முக்கால் நாழிகைக்குள் கல் மயமாகிப் போகுமாகையால் இதை எடுக்க வேண்டுமானல் ஓம் ஸ்ரீ திரி நேத்திர சுவாகா வென்று நூற்றியெட்டு உருச் செபித்து பேய்ச்சுரைக் குடுக்கைக்கு குதிரைவால் மயிர்கட்டி உதகமெடுத்து அரிதாரத்தைக் கொஞ்சம் பொடிசெய்து போட்டவுடனே சிவக்கும் அதை முகரச் சவ்வாது வீசினுல் சணவேதி உதகமென்று தெரிந்து வேண்டிய மருந்துகளுக்கு உபயோகப்படுத்திக் கொள்ளவும் இந்த உதகநீரில் பூசனிக்காயை ஒரு குச்சியில் குத்தி அதற்குள் ரசத்தை விட்டு மூடி குதிரை மயிரினுல் கட்டி உதகத்தில் விட்டு வைக்கக் கல்லாகும் அதை எடுத்துப் பொடி செய்து வங்கம் உருக்கு முகத்தில் கொஞ்சந் தூவக் குளிகையாகும் அதை வாயிலிடகெவுனமுண்டாகும் இந்தப் பூசனிக்காய்த் தூளை தேனில் பணவிடை குழப்பிச் சாப்பிட்டுவர ஆயுள் விருத்தியாகும்.

## 6 - நாள்வேதி உதகம்.

கேளுங்கள் முனிவர்களே ஒரு நாள்வேதி உதகமாவது புகையிரல் கழுவின தண்ணீர்போல் பிசுபிசுப்பாயிருக்கும். அதைப்

பேய்ச்சுரைக் குடுக்கைக்குக் குதிரை வால் மயிர் கட்டி முன்சொன்ன மந்திரஞ் செபித்து உதக மெடுத்துப் பெருங்காயத்தைப் பொடித்துப் போட்டு முகர்ந்து பார்க்க வாடை யில்லாதிருந்தால் ஒருநாள் வேதி உதகமென்று தீர்மானித்து வில்வக் குடுக்கையில் உதக மெடுத்து அதில் மூன்று களஞ்சு ரசம் விட்டு ஒருநாள் முழுதும் வைந்திருக்க ரசம் வெண்ணெய் போலாகும் அதையெடுத்துக் குப்பிக்குள் வைத்து மணல் மறைவுப் புடமிட உருகிக் குளிகையாகும் அதை வாயிலிடக் கெவுன முண்டாகும் அன்றியும் இக்குளிகையினால் பற்பம் சுண்ணம் செந்தூரம் செய்து கொள்ளலாம்.

## 7. இருநாள் வேதி உதகநீர்.

கேளுங்கள் முனிவர்களே இருநாள் வேதி உதகமாவது சாணித் தண்ணீர்போல் பிசுபிசுப்பாயிருக்கும். அதைப் பழமையான தேங்காய்க் குடுக்கைக்குக் குதிரைவால் மயிர்கட்டி முன் மந்திரஞ் செபித்து உதகமெடுத்து மாம்பழச் சாறு விட்டுக் கலக்கி இரண்டு நாள் கழித்து முகர்ந்து பார்க்க மாம்பழவாடையில்லாதிருந்தால் இதுதான் இருநாள் வேதி உதக மென்று தீர்மானித்து வில்வக் குடுக்கையில் கொஞ்சம் வெள்ளியைத் தூள் செய்து போட்டு இரண்டு நாள் வைத்தெடுக்க மணல்போலாகும் அதைக் கல்வத்தி லரைத்து வில்லை தட்டிக் காய வைத்துப் புடமிடச் சுண்ணமாகும் இந்தச் சுண்ணத்தை நெய்யிற் குழப்பிச் சாப்பிடத் தேகசித்தி யுண்டாக்கும்.

## 8. திரிநாள் வேதி உதகநீர்.

கேளுங்கள் முனிவர்களே திரிநாள்வேதி உதக நீரானது கரிசல் காட்டுத் தண்ணீர்போலக் குழகுழப்பாயிருக்கும் அதில் குச்சியை விட்டு மூன்று நாள் வைத்திருந்தால் தண்ணீர்பட்ட வரையிலும் கல்லாயிருக்கும் அதை எடுக்க வேண்டுமானால் ஓம் சாம்பவி சங்கரி ரட்சிக்கச் சுவாகா வென்று நூற்றியெட்டு உரு மந்திரஞ்செபித்து செம்பினால் குடுக்கை செய்து குதிரை வால் மயிரினால் கட்டி உதக மெடுத்து பெருங்காயத் தூள் செய்து போட்டு முகர்ந்து பார்க்க வாடை இல்லாமலிருந்தால் திரிநாள்வேதி உதகந்தா னென்று தீர்மானித்துப் பற்பம் சுண்ணம் செந்தூரஞ் செய்துகொள்ளலாம்.

அதைக் கூவிளங் குடுக்கையில் ரசங் களஞ்சியும் வெங்காரம் திப்பிலி கிராம்பு இம்மூன்றையும் வகைக்கு ஒரு களஞ்சு பொடித்துப்

போட்டு கவிழ மூத்தண்டால் வாயை மூடிக் குதிரை வால் மயிரால் கட்டி ஒரு உசகத்தில் போட்டெடுத்துக் காயவைத்துச் சீலைமண் செய்து மணல் மறைவுப் புடமிட ரசம் குளிகையாகும். அந்தக் குளிகையை வாயிலிடக் கெவுன சித்தியுண்டாகும்.

## 9. பஞ்சவேதி உதக நீர்.

கேளுங்கள் முனிவர்களே பஞ்சவேதி உதக நீரானது மஞ்சள் கலங்கின தண்ணீர்போலிருக்கும். அதில் குச்சியைவிட்டு ஐந்துநாள் வைத்திருந்தால் தண்ணீர்பட்ட வரையிலும் பொரிக்கல்லாயிருக்கும். அதை எடுக்கவேண்டுமானால், ஓம் சங்கரி அஷ்ட புசங்கன்னி ரட் சிக்க சுவாகா வென்று நூற்றியெட்டு உருச் செபித்து இரும்புத் தாட்டில் குடுக்கை செய்து குதிரைவால் மயிர் கட்டி உதக மெடுத்து வெங்காயத்தை அரைத்துப் போட்டு முகர்ந்து பார்க்க வாடையி லாதிருந்தால் பஞ்சவேதி உதகமெனத் தீர்மானித்துப் பாஷாணங் கட்டு பற்பம் சுண்ணம் செந்தூரஞ் செய்து கொள்ளவும்.

கெந்தகம் ரசம் அப்பிரகம் கருங்காலிப் பட்டை இவைகள் வகைக்கு களஞ்ச தூள்செய்து உதகநீர் விட்டுப் பிசரி கொம்மட்டி மாதளம் பழச்சாற்றி லரைத்து குகைக்குள் வைத்து சீலைமண் செய்து இலுவைக்கரி போட்டுருக்கக் குளிகைபோலாகும் அந்தக் குளிகையில் கொஞ்சமெடுத்து வெள்ளியிலிட வயது பத்தாகும் இதில் கொஞ்சமெடுத்துச் செம்பிலிட வயது ஏழாகும்.

## 10. சப்தவேதி உதக நீர்.

கேளுங்கள் முனிவர்களே இந்த சப்த வேதி உதகநீரானது கொஞ்சம் சிவப்பாகப் பிசுபிசுப்பாயிருக்கும் அதில் குச்சிலைய விட்டு ஒருநாள் வைத்திருக்கத் தண்ணீர் பட்ட வரையிலும் கல்லா யிருக்கும் இதை எடுக்கவேண்டுமானால் ஓம் பைரவி பசாசு நாடாமல் கட்டு கட்டு சுவாகா வென்று நூற்றியெட்டு உருச்செபித்து பேய்ச்சுரைக் குடுக் கையால் குதிரைவால் மயிர் கட்டி உதகமெடுத்து வேப்பெண் ணெய் கொஞ்சம் விட்டு முகர்ந்து பார்க்க வாடை யில்லாதிருந்தால் இதுதான் சப்த வேதி உதக மென நினைத்துப் பாஷாணங்களுக்கு கட்டமைத்துப் பற்பம் சுண்ணம் செந்தூரஞ் செய்து கொள்ளவும்.

வெள்ளாட்டுக் கொம்புக் குழாய்க்குள் கொஞ்சம் உதக நீர் விட்டு பிறகு காஞ்சி ரசம் விட்டு அதன் மேல் மறுபடியும் உதகம்

விட்டு அது குளிகையாகும் வரையிலும் வெயிலில் வைத்தெடுக்கவும் அக்குளிகையில் கொஞ்ச மெடுத்து களஞ்சி வங்கம் உருக்கு முகத்தில் கொடுக்கச் சுரபிக் குளிகையாகும் இந்தக் குளிகையை வாயிலிடக் கெவுன சித்தி யுண்டாகும்.

## 11. தசவேதி உதகநீர்

கேளுங்கள் முனிவர்களே தசநாள் வேதி உதகமானது அழுகிக்கிடக்கிற சகதித் தண்ணீர்போலிருக்கும். அதை விளாங் குடுக்கைக்குக் குதிரை வாலின் மயிர் கட்டி முன் சொன்ன மந்திரத்தைச் செபித்து உதக மெடுத்து அதில் ஒரு எலுமிச்சம்பழச் சாறு விட்டுக் கலக்கி பத்து நாள் வைத்திருந்து முகர்ந்து பார்க்க ஷை வாடை இல்லாதிருந்தால் இதுதான் தசவேதி உதகமென்று தீர்மானித்து இதை செம்புக் குடுக்கையில் ஊற்றி வெள்ளைப் பாஷாணத்தைத் தூள் செய்து போட்டு பத்து நாள் வைத்து எடுத்துப் பார்க்க வெள்ளைப் பாஷாணம் நைந்து குருமணல்போலி ருக்கும். அதை யெடுத்துக் கல்வத்தி லரைத்து வில்லைதட்டிக் காய வைத்து பத்து எருவில் புடமிடச் சுண்ணமாகும். இந்தச்சுண்ணத்தை நெய்யிற் குழப்பிச் சாப்பிட்டு வரக் காயசித்தியாகும்.

## 12. மாதவேதி உதகநீர்.

கேளுங்கள் முனிவர்களே இந்த மாதவேதி உதகநீரானது கொஞ்சம் மஞ்சள் நிறமாய் குழகுழப்பா யிருக்கும். அதில் குச்சியை விட்டு வைத்து ஒருமாதம் கழித்துப் பார்க்கத் தண்ணீர் பட்ட வரையிலும் சொரிக்கல்லா யிருக்கும் அதை எடுக்க வேண்டுமானால் ஓம் கங்காளி கருணாகரி பேய் பிசாசு நாடாமல் காக்கச் சுவாகா வென்று நூற்றியெட்டு உருச் செபித்து இரும்புக் குடுக்கை செய்து அதற்குக் குதிரை வால் மயிர் கட்டி உதக மெடுத்து வசம்பைத் தூள் செய்து போட்டு முகர்ந்து பார்க்க வாடை யில்லா திருந்தால் இதுதான் மாதவேதி உதகமென்று தீர்மானித்துப் பாஷாணங்களைப் பற்பம் சுண்ணம் செந்தூரஞ் செய்து கொள்ளலாம்.

பச்சை மஞ்சள் கிழங்கைத் தோலை யெடுத்து விட்டு அழுஞ்சிக் கம்பில் கிழங்கைக் குத்தி உதகத்திற்குள் வைத்துக் கல்லான பின்னெடுத்து அரைத்துப் பொடிசெய்து கொண்டு நாகம் உருக்கு முகத்தில் சிறுகச் சிறுகக் கொடுத்து வரச் சிவந்து வயது பத்தாகும்.

## 13. மண்டலவேதி உதகநீர்.

கேளுங்கள் முனிவர்களே இந்த மண்டலவேதி உதகநீரானது கொஞ்சம் பச்சை நிறமாய் முறைத்துப் பிசுபிசுப்பாயிருக்கும் அதில் குச்சியைப் போட்டு ஒரு மண்டலம் வைத்தால் தண்ணீர் பட்ட வரையில் கல்லாயிருக்கும் அதை எடுக்க வேண்டுமானால் பேரண்டங் கொண்டு வந்து அதற்குச் செம்புக் கம்பி போட்டுக் கட்டி ஓம் சுடலையாடி சோமேஸ்வரி கார்க்கச் சுவாகா வென்று நூற்றி யெட்டு உருச் செபித்து உதகத்தை யெடுத்து வெற்றிலைச் சாறு பிழிந்து விட்டுப் பார்க்க முறியாதிருந்தால் இது மண்டலவேதி உதகமென்று நினைத்துப் பாஷாணங்களைப் பற்பம் சுண்ணம் செந்தூரங்கள் செய்து கொள்ளவும்.

நரி விளாங்காய்ச் சிறு குடுக்கையில் ஐந்து களஞ்சி ரசம்விட்டு ஒரு களஞ்சு கெந்தகத்தைப் போட்டு கொடி மரத்தால் வாயை மூடி குதிரை வால் மயிர் கட்டி அத்துடன் கள்ளிக் கொம்புங்கட்டிஉதகத்தில் விட கள்ளிக் கொம்பு நிறம் பேதித்தால் இரசங் கட்டிக் குளிகையாகும் அதை வாயிலிட கெவுன முண்டாகும் நரை திரை மாறும்.

## 14. அறுபதுநாள் வேதி உதகநீர்.

கேளுங்கள் முனிவர்களே அறுபது நாள்வேதி உதக நீரானது கொஞ்சங் கருப்பு நிறமாய் வழுவழுப்பாயிருக்கும் அதில் குச்சியைப் போட்டு வைத்தால் அறுபது நாளைக்குள் தண்ணீர் பட்ட வரையிலும் கல்லாயிருக்கும் அதை யெடுக்க வேண்டுமானால் இரும்புத் தகட்டில் குடுக்கை செய்து செம்புக் கம்பி போட்டுக்கட்டி ஓம் பராபரை பராசத்தி கார்க்கச் சுவாகா வென்று நூற்றெட்டு உருச்செபித்து உதக மெடுத்து அதில் வசம்பைத் தூள் செய்து போட்டு முகர்ந்து பார்க்க வாசனை யில்லா திருந்தால் அறுபது நாள் உதக மிதுதா னென்று நினைத்து பாஷாணங்களைப் பற்பம் சுண்ணம் செந்தூரஞ் செய்துகொள்ளலாம்.

கருங்காணப் பயறெடுத்து உதகம்நீர் விட்டவித்து முப்பத்திரண்டு கூறு செய்து தினம் ஒரு கூறாகக் காலையில் சாப்பிட்டு வரக் காய சித்தி யாகி யானைப் பெல முண்டாகும்.

## 15. உதக நீரின் பொதுப் பிரயோகம்.

1. கேளுங்கள் முனிவர்களே பச்சைமஞ்சட் கிழங்கை உதகநீரில் போட்டுக் கல்லானபின் யெடுத்துப் பொடி செய்து பத்துக் களஞ்சு

பொடிக்கு ஒரு களஞ்சு ரசமும் உதகமிருந்த இடத்து மண் ஒரு களஞ்சும் உதகநீர் விட்டரைத்து உலர்த்தி அந்த உண்டையை சிறு கலசத்தில் போட்டு உதகத்தி விட்டு வைக்கக் கல் குளிகையாகும் அக் குளிகையை வாயிலிட்டுக் கொண்டு கெவுனமார்க்கமாய்ப் போய் வரலாகும் அன்னியில் இக் குளிகையில் ஒன்றெடுத்து பணவிடை வெள்ளி உருக்கு முகத்தில் கொடுக்கப் பத்து வயதாகும்.

2. கல்லான பச்சை மஞ்சள் கிழங்கை யெடுத்துப் பொடிசெய்து வெருகடிப் பிரமாணந் தேனிற் குழப்பிச் சாப்பிட்டு வரச் சரீரம் பொன் போலாகி யானைப் பெலமுண்டாகும் பத்தியம் பாசிப்பயரும் பச்சரிசியும் சமைத்து பசுவின் நெய் விட்டுச் சாப்பிடவும் காலை மாலை பசும்பால் சாப்பிடவும் மற்ற அறுசுவை தள்ளவும். காற்று மழை வெய்யில் இவைகளில் போகக்கூடாது.

3. வாழைக்காயைக் குடைந்து உள்ளே துத்தநாகம் ரசம் இரண்டும் வகைக்கு ஒரு களஞ்சியெடுத்து கலயத்தில் வைத்து மேல்மூடி உதகத் திலிட்டு மூன்றுநாள் கழித்து யெடுத்துப் பார்க்க வாழைக்காய் கல் லாயிருக்கும் அதைப் பொடி செய்து வைத்துக்கொண்டு செம்பு உருக்கு முகத்தில் பழுக்கும் வரை இந்தப் பொடியைச் சிறுகச் சிறுகத் தூவி வரப் பத்து வயதாகும்.

4. சாதிலிங்கம் அரிதாரம் மனோசிலை கெந்தகம் இந்த நான்கையும் வகைக்குக் களஞ்சு வீத மெடுத்து உதகம் விட்டரைத்து உண்டை செய்து சிறு கலயத்தில் உண்டையை வைத்துக் குதிரை மயிராற் கட்டி உதகத்தில் விட்டுவைக்கக் கல்லாகும் அதைப் பொடி செய்து வைத்துக்கொண்டு வெள்ளி உருக்கு முகத்தில் சிவக்கும் வரை பொடி தூவிக்கொண்டேவரப் பத்து வயதாகும்.

5. சிறு பூசனிக்காயை துளைத்துப் பத்துப் பலம் ரசம் விட்டு ஒரு பலம் கெந்தகத்தைப் பொடித்துப் போட்டுக் கைடி காயினால் மேலே மூடிச் செம்புக் கம்பியினால் கட்டி உதகத்தில் விட்டு வைக்க பூசனிக் காயும் ரசமும் கல்லாயிருக்கும் ரசங் கல்லா யிருப்பதை மட்டும் எடுத்துப் பொடி செய்து வெள்ளீயம் உருக்கு முகத்தில் பொடியைத் தூவிக்கொண்டே வர வெள்ளியாகும்.

6: அந்த வெள்ளீயம் உருக்கு முகத்தில் ரசங் கல்லா யிருப்பதைப் போட்டால் வலிந்து தெரித்துக் கீழே விழும் அதை யெடுத்துப் பாலில்போட்டு வாயிலிட்டுக் கொள்ளக் கெவுனமுண்டாகும்.

7. பூசணிக்காய் கல்லானதை யெடுத்துக் கோரோசனை களஞ்சு சேர்த்துப் பொடிசெய்து சவ்வாது புனுகு நல்லெண்ணெய் விட்டரைத்து மைபோலாக்கித் திலதமிட எதிரிகள் விட்ட பாணப் பிரயோகம் முறிந்துபோகும் சர்வ மிருகங்களும் கிட்டவாராது.

8. உதகத்திலிருக்கிற மணலை யெடுத்துக் காயவைத்துச் சூதமும் பன்றி நெய்யும் விட்டரைத்த பின்பு வெள்ளாட்டு நீர் விட்டரைத்து அதன்பின் தேன்விட்டரைத்து உண்டை செய்து காயவைத்து சிறு கலசத்தில் போட்டுச் செம்புக் கம்பியில் கட்டி உதகத்தில் மூன்று நாள் வைத்துக் கல்வத்தி லிட்டு குதிரைக் குளம்புத் தூள் போட்டரைத்துக் குகையிலிட்டு வெங்கார மிட்டுருக்கச் செம்பாகும் டை செம்பைத் தகடு தட்டி புல்லாமணக்கை யரைத்துக் குகைசெய்து காயவைத்தெடுத்து அந்தக் குகைக்குள் செம்புத் தகட்டை வைத்து பன்றி நெய்விட்டு வெங்காரமிட் டுருக்கி இப்படி இரண்டு தடவை உருக்கி யெடுக்கக் குளிகையாகும். இந்த குளிகையோடு செம்பு பத்துப் பணவிடை வெள்ளி ஐந்து பணவிடை கொடுத்துருக்கச் சிவந்து பத்து வயதாகும்.

10, இரசம் இருகளஞ்சி கல்வத்திலிட்டு அதில் உதகநீர் விட்டரைத்துக் காயவைக்கவும் இம் மாதிரி ஒரு மாதம் வரை உதகநீர் விட்டரைக்க இரசம் மாப்போலாகும் அதை யெடுத்து இடைக்கிடை வங்கம் போட்டுருக்கக் குளிகையாகும் இந்தக் குளிகையை வாயிலிடச் சர்வ ஆயுதமும் திரேகத்தில் படாது சங்கார ருத்திரனுவான் சரீரம் பொன்னிற மாகும் யானைப் பெலனுண்டாகும்.

இந்த உதக வேலைகளை மழைக் காலங்களில் செய்யலாகாது பங்குனி சித்திரை வைகாசி மாதங்களிற்றான் செய்ய வேண்டும் மண் குடங்களில் உதக மெடுத்தால் உபயோகமாகாது.

## அமுத மகா ரிஷி யாச்சிரமம்.

### திருவனந்தபுரம் மலையாள எல்கை பூரிமலை.

### 16. செவ்வாழை மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே மலையாளமென்னுந் திருவனந்தபுரத்

திற்கு வடக்கிழக்கே ஒருநாழிகை வழிதூரத்திற் கப்பால் பூரிமலை யென்று செம்மண் தரைகளாக யிருக்கிறதில் மிளகுச்செடிகள் விசேஷமாயிருக்கிறது அதன் வடபக்கம் கூப்பிடுதூரத்தி லிருக்கும் பெரிய வனத்தில் தென் பக்கம் அமுதமகா ரிஷி யாச்சிரம மிருக்கிறது அவ் வனத்திற்குள் நுழைந்து அவரை தெரிசித்துக்கொண்டு நேரே வட பக்கமாய் கூப்பிடு தூரம் வந்தால் அங்கே சதம்புத் தரையில் கிராம்புச் செடிக ளிருக்கிறது அதன் வடபக்கம் செவ் வாழை மரங்களிருக்கிறது பழத் தோல் மட்டுஞ் சிவப்பா யிருக்கும் அதைக் காலை யாலை இரண்டு பழமெடுத்து தோலை நீக்கி வீரச் சுண்ணம் வைத்து மூன்று நாள் ஆறு வேளை சாப்பிடவும் பத்தியம் பச்சரிசி பாசிப் பயர் போட்டுச் சமைத்துச் சாப்பிடத் தேகசித்தி யாகும்

புலஸ்தியர் கற்பம் 300 என்னும் நூலில் இந்த செவ்வாழைக் கற்ப முறை விபரங்களைக் கூறியிருக்கிறார் பார்த்துக் கொள்ளவும்.

## மலையாளம் பூரிமலை சூதமாமுனிவர் ஆச்சிரமம்.

## 17 சிவந்த இலைக்கள்ளியின் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தப், பூரிமலைக்கு வடபுரம் சிங்குளமென்ற கீழ் பொத்தையருகே பரமேஸ்வரன் கோவிலுண்டு அதிலே மூன்று சுனையுண்டு அதின் தென்புரத்தில் ஒரு சுனையும் வடபுரத்திலொரு சுனையும் உச்சத்திலொரு சுனையுமுண்டு அந்த உச்சச்சுனையிலே எல்லோருந் தீர்த்தமாடுவார்கள் அதன் தெற்குச் சுனைப் பக்கத்தில் ஒரு பேரில்லாத மரமுண்டு அதற்குத் தென் பக்கம் சூதமா முனி ஆச்சிரமமிருக்கிறது. அதனோரம் சிவந்த இலைக்கள்ளி மின் வெட்டிணுப்போலே நிற்கும் அதின் பாலினால் எழுவகை லோகமும் பேதிக்கும் அப்பாலை பணவிடை சாப்பிட மல மூத்திரத்தில் எழு வகை லோகமும் பேதிக்கும் மூன்று லோகமுந் தெரியும் அனேக காலம் வரை பூலோகத்தி லிருப்பான் அந்தக் கற்பத்தைச் சாப்பிட்டுக் கொண்டு அங்கே யிருக்கும் பத்திரகாளி கோயிலில் நாற்பது நாள் தபசு செய்தால் கற்பகாலம் வரை சரீரம் அழிவில்லா திருக்கும்.

அகஸ்தியர் பூரண சூஸ்திரம் 216 யென்னும் நூலில் இந்தச் சிவந்த இலைக்கள்ளிக் கற்பம் சாப்பிடும் முறையை விபரமாகக் கூறியிருக்கிறார் பார்க்கவும்.

## மலையாளம் - பூரிமலை சிவத்தியான முனிவ ராச்சிரமம்.

### 18. நெல்லி மரக்கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தத் தெற்குச் சுனைக்குத் தென்பக்கம் வருகிற பாதையில் ஒரு நாழிகைதூரம் வந்தபின் வட பக்கம் வருகிற பாதை வழியாக அம்பிடுதூரம் வந்தால் உச்சமலையிருக்கிறது அந்த மலைக்கு வடபக்கம் வருகிற பாதை வழியே மலை யோரமாய் வந்தால் சருவில் சிவத்தியானவர் குகை இருக்கிறது அக் குகைக்கு நேர் கிழக்காக வருகிற பாதையில் வந்து வடக்கே போகிற பாதையில் அரை நாழிகைவழி தூரம் வந்தால் அனேக மரங்கள் சூழ்ந்த வனத்திற்குள் நெல்லி மரங்கள் அநேக மிருக்கிறது அந்தமரம் பெரியதாயிருக்கும் வாதரக்காய்ச்சி இலை போலிருக்கும் காய் உருண்டையாய் களர்ச்சிக்காய்ப் பருமனிருக்கும் இதன் பட்டையை அரைத்து உருகிக் கட்டின ரசத்திற்குக் கவசஞ் செய்து புடம்போட்டெடுக்க நொருங்கிப் போகும் அதை எடுத்து நெல்லிப்பட்டைச்சாறு விட்டு அரைத்து வில்லை தட்டிக் காயவைத்துச் சீலைமண் செய்து கனபுடம் போடச் செந்தூரிக்கும் இதை நெய்யிற் குழப்பிச் சாப்பிடக் காய சித்தியாகும்.

போகர் கற்பம் 300 யென்னும் நூலில் இந்த நெல்லிமரக் கற்ப முறையைத் தெளிவாகக் கூறியிருக்கிறார் பார்க்கவும்.

## மலையாளம் - பூரிமலைபூபால முனிவர் ஆச்சிரமம்

### 19. வேலிபருத்திக் கொடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த வனத்துக்குக் கீழ்ப் பக்கம் வருகிற பாதையில் அம்பிடு தூரம் வந்தால் வடக்கே போகிற பாதையில் அரை நாழிகை வழிதூரத்தில் ஓடையிருக்கிறது அந்த ஓடையைக் கழித்து கூப்பிடுதூரம் போனால் அனேக மரஞ்செடிகள் சூழ்ந்த வனத்தின் மேல்பக்கமுள்ள பூபாலமுனிவர் ஆச்சிரமத்திற்கு நேர் வடக்காக வருகிறபாதையில் அம்பிடுதூரம் வந்தால் அங்கே சதம்புத்தரையில் வேலிப் பருத்திக்கொடி விசேஷமாய் அடர்ந்து படர்ந்திருக்கிறது இலை சிறியதாய் வெற்றிலை போலிருக்கும் இலையைக் கிள்ளினால் பால்வரும் இதைச் சமூலம் இடித்துச் சாறெடுத்து துருசி பற்பத்திற்கு விட்டரைத்து வில்லை தட்டிக் காயவைத்து ஒரு சட்டியில் இந்த இலையை நறுக்கிப் பாதிபோட்டு அதன்மேல்

துருசு வில்லையை வைத்து அதன்மேல் பாதி இலையையும் போட்டுச் சட்டி மூடிச் சீலைமண் செய்து புடமிடச் சுண்ணமாகும் இந்தச் சுண்ணத்தை நெய்யிற் குழப்பிச் சாப்பிடக் காயசித்தியாகும்.

☞ கருவூரார் வாதகாவியம் 700 லும் போகர் கற்பம் 300 லும் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறார் பார்த்துக் கொள்ளவும்.

## மலையாளம் பூரிமலை முத்துவீரமா முனிவராச்சிரமம்

## 20. துத்திச் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தச் சதம்புத் தரைக்கு வடபக்கம் போகிற பாதையில் அரை நாழிகை வழிதூரம் போனால் குண்டாறு வருகிறது அந்த ஆற்றைக்கடந்து கூப்பிடு தூரம்போனால் கொண்டி மலை இருக்கிறது அந்த மலையில் பெருங்கானலிருக்கிறது அந்தக் கானலுக்குள் வடபக்கம் முத்துவீரமாமுனிவர் ஆச்சிரமமிருக்கிறது அந்த ஆச்சிரமத்திற்குக் கீழ்பக்கம் வருகிற பாதையில் அம்பிடுதூரம் வந்தால் அங்கொரு சுனை இருக்கிறது அந்தச் சுனைக்கு வடபக்கம் கூப்பிடு தூரத்தில் ஒரு ஆள் உயரத்தில் வேலிப் பருத்தியின் இலை போலும் புஷ்பம் மஞ்சள் நிறமாயுமுள்ள துத்திச்செடிகளிருக்கிறது இதன் இலையை அரைத்து, இரண்டு குகை செய்து காய வைத்துச் செப்புத் தொட்டிப் பாஷாணத்தைச் சுத்தி செய்து அறுவகைச் செய நீரில் அரைத்து வில்லை செய்து காய வைத்தெடுத்து ஷை குகைக்குள் வைத்து ஷை குகையால் மூடிச் சீலைமண் செய்து கன புடமிடப் பற்பமாகும். இந்தப் பற்பத்தை நெய்யிற் குழப்பிச் சாப்பிடக் காயசித்தியாகும்.

☞ போகர் கற்பம் 300 யென்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறார் பார்த்துக் கொள்ளவும்.

## மலையாளம் பூரிமலை செயமுனிவர் ஆச்சிரமம்.

## 21. செந்நாயுருவிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தச் சுனைக்கும் பொத்தைக்கும் வடக்குச் சருவி லிருக்கிற பெரிய கானலுக்குள் செயமுனிவர் ஆச்சிரமத்திற்கு வடபக்கம் செந்நாயுருவி யிருக்கிறது அதன் செடி தண்டு பூ சிவப்பாகவும் இலை நாயுருவியின் இலைபோலுமிருக்கும் அதன் சமூலம் பிடுங்கி நறுக்கிக் காரீயத்தைச் சட்டியில் வேண்டிய திட்டு இந்த

மூலிகையைக் கூடப் போட்டுச் சாம்பலாகும் வரை தேய்த்து வருத் தால் செந்தூரமாகும் அதை யெடுத்துச் செம்பில் பத்துக் கொன்று கொடுக்கப் பத்து மாத்தாகும் அன்னியில் ஷை செந்தூரத்தை நாலா யிரத்து நாலூற்றி நாற்பத்து யெட்டு வியாதிக்கும் அனுப்பான மறிந்து கொடுக்க வியாதிகள் யாவுங் குணமாகும்.

☞ கருவூரார் வாத காவியம் 700 யென்னும் நூலிற் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## மலையாளம் பூரிமலை, வீரமாமுனிவர் ஆச்சிரமம்.

## 22. வெள்ளைச் சாரல் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தப் பொத்தைக்கு வடக்குச் சரி வுக்கப்பால் கூப்பிடு தூரம் போனால் அங்கே தடாகமலை யிருக்கிறது அதற்குத் தென்பாரிசமாக அமுர்தச் சுனையுண்டு அந்தச் சுனைக்கு மேற்கேயுள்ள கெந்தமா பருவதத்திற்கு மேற்காக வீரமாமுனிவர் ஆச்சிரமமிருக்கிறது அந்த ஆச்சிரமத்திற்கு மேல்பக்கம் வட்டப் பிளவையாக ஒரு பாறை யிருக்கிறது அந்தப்பாறைக்கு மேற்கே ஒரு குகை யிருக்கிறது அந்தக் குகையின் முன் பக்கம் ஆள் நுழைய முடியாத வண்ணஞ் சிறிதாகவும் உள்ளே விசாலமாயுமிருக்கும் அதற் குள்ளாக வெள்ளைச்சாரக் குலங்கள் அவ்விடத்து மலைகளிலும் கெந் தமா பருவதத்திலுமாக மேய்ந்து வரும் அப்போது குகை யோரமாக யிருந்தால் அது வந்தவுடனே கையில் பிடித்தால் அது கையிலகப் படும் அதை யுடனே சாப்பிட்டால் அட்டமாசித்தி யடையலாகும் மரணமுமில்லை அது அகப்படாது போனால் இந்த வெள்ளைச்சாரல் கள் அதன் பக்கத்தி லிருக்கிற அமுர்தச் சுனையில்போய் நீர் குடிப்பதி னாலே அதன் சாரம் அந்த நீரிலிறங்கி யிருக்கு மாகையால் அந்தச் சுனையின் நீரை நாற்பது நாள் உட்கொண்டால் அஷ்டமா சித்தி யடைந்து மரணமில்லா திருக்கலாம்.

☞ அகஸ்தியர் பூரண சூஸ்திரம் 216 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறார் பார்த்துக் கொள்ளவும்.

## மலையாளம் பூரிமலை, வேதமுனிவ ராச்சிரமம்.

## 23. சோதிப் புல் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் குகையை விட்டுக்கடந்து

நாலு நாழிகை வழி தூரம் போனால் முத்துமலை யிருக்கிறது அதன் வடபக்கமுள்ள பெரிய வனத்திற்குள் வேதமாமுனிவர் ஆச்சிரமமிருக்கிறது அந்த ஆச்சிரமத்திற்கு வடபக்கஞ் சதம்புத் தரையில் சோதிப் புல்லுண்டு அது நாலு விரற்கடை உயரம் வளர்ந்து புல்லைப் போல் மஞ்சள் நிறமாயிருக்கும் இரவில் தீபம் போல் சோதி காணும் அப் புல்லைப் பால் வார்த்து அரைத்துப் பாக்களவு நாற்பதுநாள் உட்கொண்டால் தீர்க்காயுசாயிருக்கலாம் அந்தப் புல்லை அரைத்துக் குகை பிடித்து அதற்குள்ளே வேண்டிய ரசம் விட்டு நன்றாய்ப் பொதிந்து சீலைமண் செய்து நூறு எருவில் புடம் போட்டால் இரசங் கட்டிச் செந்தூரமாகும் அதை வெள்ளியில் நூற்றுக் கொன்று கொடுக்கப் பத்து வயதாகும் இந்த ரசச்செந்தூரத்தை நெல்லிடை சாப்பிட்டால் யானைப் பெலமுண்டாகும் அஷ்டாங்க யோகமுஞ் சித்திக்கும்.

☞ அகஸ்தியர் தத்துவம் 300 லும் கருவூரார் நோண்டி யென்னும் வாதகாவியம் 700 லும் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்க்கவும்.

( இது வரையிலும் மலையாளம் பூரியலை எல்லை )

## மலையாளம் பத்பநாபன்காவு எல்லை சங்கமுனிவர் வனம்

## 24. சத்திரப் பூண்டுக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த முத்துமலைக்கு வடக்கே ஆறு நாழிகை வழியில் பத்மநாபன் காவிருக்கிறது அந்தக் காவுக்குள் மலை யூருண்டு அவ்வூருக்கு வடக்கே கொப்பறை மலைக்கு வடமேற்குப் பொத்தைக்கு மேலே ஒரு பொத்தையிருக்கிறது அந்தப் பொத்தைக்குத் தென்பக்கம் கருங்கானலுக்குள்ளிருக்கும் சங்க முனிவ ராச்சிரமத்திற்குத் தெற்குச் சருவில் பிர்ம சுனை விஷ்ணு சுனை சிவ சுனை யென்று மூன்றுசுனை அடுப்புக் கூட்டினாற் போலிருக்கும் அதிலே ரிஷிகளும் சித்தர்களும் வந்து தீர்த்தமாடுவார்கள் அந்த மூன்று சுனையில் நடுச் சுனைக்குக் குடுக்கைச்சுனை யென்று பெயர் அதைச் சுற்றிலும் சத்திரப் பூடு உண்டு அதின் இலை எருமை நாக்குப்போல் இருக்கும் மூன்றடி உயரம் வளர்ந்திருக்கும் அதன் கதிர் நெற்கதிர் போல் அரிசியாயிருக்கும் உருவித் தின்றால் ஆகாய கெவுனமாகும் சமைத்துச் சாப்பிட்டால் கற்பகோடி காலம் வரை இருப்பார்கள் அந்தச் சுனையில் மூன்று கையளவு தண்ணீர் குடித்தால் சுற்ப சரீரமாகும்.

☞ கொங்கணர் முக்காண்டம் 3000 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறார் பார்த்துக் கொள்ளவும்.

## மலையாளம் காசிபமுனிவர் ஆச்சிரமம்.

### 25. பொற்றலைக்கரிப்பான் கற்பம்

கேளுங்கள் முனிவர்களே அந்தச் சுனையைக் கடந்து ஒரு நாழிகை வழிதூரம் வந்தால் பெரிய மலைகளும் வனங்களுமுண்டு அந்தமலை ஆயிரங்காவுச்சத்திலே நிற்கும் அதில் அனேக மூலிகைகளு மிருக்கும் அந்த மலைக்கு வடபக்கம் போகிறபாதையில் அம்பிடுதூரம் போனால் கசிவுத்தரை யிருக்கிறது அந்தக் கசிவுத் தரைக்குமேல்பக்கம் காசிபமுனிவர் ஆச்சிரமமிருக்கிறது அந்த ஆச்சிரமத்தைச் சுற்றிலும் அநேக செடிகளுடன் தென்பக்கத்தில் பொற்றலைக் கையான் தகரை முளைத்திருக்கிறது அதைச் சமூலம் பிடுங்கிக் கூத்தன் குதம்பையுஞ் சமனாகச் சேர்த்து இடித்துச் சாறெடுத்து வேண்டிய இரசத்தில் சுருக் குக் கொடுக்க இரசங் கட்டும் அதைச் செந்தூரமாக்கி அந்தச் செந் தூரத்தை வெள்ளியில் இருபதுக்கு ஒன்று கொடுக்க வயதுபத்தாகும்.

☞ ஞான சாஸ்திரத் திரட்டு **4** வது பாகத்திலுள்ள சட்டமுனி வாலை ரச கற்பம் **16** வும் போகர் கற்பம் **300** வும் இதன் விபரங் களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## மலையாளம், பதஞ்சலி முனிவ ராச்சிரமம்.

### 26. பனங்கொட்டைப் பாஷாணக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே இந்த ஆயிரங்காவுச்சத்திற்கு வடக்கே மூன்று நாழிகை வழியில் வடகரை மலையொன்றிருக்கிறது அதன் மேல்பக்கமுள்ள பதஞ்சலி முனிவர் வனத்திற்குத் தென்பக்கம் சரளைத்தரையாக யிருப்பதில் பனங்கொட்டை போலுள்ள பாஷாணக் கல்லுண்டு அதை யெடுத்துக் காடாக்கினியாகத் தீயை வளர்த்து மூன்று நாள்வரை வேக வைத்தால் அக்கினிப் பிரகாசமாயிருக்கும் அதில் தண்ணீரை விட்டால் மூன்று துண்டாக உடையும் அதினு ள்ளேவெண்மையான பாஷாணமிருக்கும் அதை யெடுத்துத் தாமிரத் தகட்டில் தடவிப் புடமிட்டால் தங்கமாகும் அதை யெடுத்துச் செந் தூரஞ் செய்து காலை மாலை பன்னிரண்டு நாள் சாப்பிடச் சரீரத்தில் சட்டை களறும் தேகம் பொன்னிறமாகும் கற்பகோடி காலம் வரை யிருப்பான் இவனுடைய மல சலத்தினாலும் லோகங்கள் பேதிக்கும்.

☞ அகஸ்தியர் பூரண சூஸ்திரம் **216** யென்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்க்கவும்.

## மலையாளம் வியாக்கிரம மகரிஷி வனம்,
## 27. செங்கொடி வேலிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த வடகரை மலைக்கு வடகீழ் மூலையில் ஒரு நாழிகை வழிதூரம் வந்தால் அந்த யிடத்தில் அனேக மரஞ்செடி சூழ்ந்த கானலுக்குள் வியாக்கிரம முனிவர் ஆச்சிரமமிருக்கிறது அதன் பக்கமாக யிருக்கும் சுனைக்கு வட பக்கத்தில் செங்கொடிவேலி என்ற செடியுண்டு அதன் தண்டுகள் சிவப்பாயிருக்கும் அதன் இலையைப்பரித்துக் கசக்கிச் சாரெடுத்துச் சாதத்திலிட்டுச் சாப்பிட வாலிபரானவார்கள் அல்லது அதன் பட்டையாவது தண்டாவது யெடுத்துச் சாதத்தில் போட்டுக் கிண்டி அந்தச் சாதத்தைச் சாப்பிட்டாலும் நரை திரை மாறும் சடலம் பொன்னிறமாகும் கற்ப கோடி காலமிருப்பார்கள் இவனுடைய மலசலம் பேதிக்கும் யானைப் பெல முண்டாகும் பத்தியம் பாலுஞ் சோறும் சாப்பிடவும் அறுசுவைப் பதார்த்தங்களை நீக்க வேண்டியது.

☞ கருவூரார் வாத காவியம் 700 லும் ஷை யார் பல திரட்டு 300 லும் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## மலையாளம் சனகமா முனிவ ராச்சிரமம்.
## 28. பாற்சொறி மரக் கற்பம்

கேளுங்கள் முனிவர்களே அந்தச்சுனையை விட்டு வடகிழக்காகப் போகும் மாட்டுப் பாதையில் நாலு நாழிகை வழி தூரம் வந்தால் சிறு குண்டு மலை இருக்கிறது அதன் நேர்கிழக்காக நாலு நாழிகை வழிதூரம் போனால் பேச்சிப் பாறையிலிருந்து தண்ணீர் விழுந்து சமுத்திரத்தில்போய் விழுகிறது அதிலிருந்து நேர்வடக்காகப் போகிற பாதை வழியிலிருக்கிற கருமலைக்குத் தென்பக்கம் பெரிய கானலுக்குள்ளிருக்கும் சனகமாமுனிவர் ஆச்சிரமத்திற்குக் கீழ்பக்கம் புராதிமலை யிருக்கிறது. அந்த மலைக்கு வடமேற்கு மூலையில் சதும்புத் தரையில் மரத்தூர் பெரிதாயும் வெண்மை நிறமுள்ளதாயும் இலை இரண்டு விரல் அகலத்தில் முனை நீண்டதாயு முள்ள பாற்சொறி மரமிருக்கிறது அதைத்தட்டினால் பால் சாரல் சாரலாக வடிந்து மரத் தூரில் சுத்த வெண்மையா யுறைந்திருக்கும் இந்த அடையாளங்களைக் கண்டு அதன் பாலை சிறட்டையில் பிடித்து வீசம்படிக்குக் குறையாமல் காலை மாலை ஒருவாரஞ் சாப்பிட்டுவரக் காய சித்தி யாகும் யானைப்பெலனுண்டாகும் நூறு வயதிற்குக் குறையாமலிருப்பான்.

( இது வரையிலும் மலையாளம் பத்மநாபன் காவு எல்லை )

## மலையாளம் ஆரியன்காவு எல்லை சிவப்பிர்மமகரிஷி வனம்

## 29. வரை யால மரக்கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தப் புராதிமலைச் சதம்புத்தரையின் நேர் வடக்காக இரண்டு நாழிகை வழி தூரத்திலிருக்கும் சரளைமலையின் மேல்பக்கம் குண்டாறு வருகிறது அந்தக் குண்டாறுக்கு நேர் வடக்காக வந்தால் ஆரியன்காவு பெரியதாயிருக்கும் அந்தக் காவுக்குள் சிவப்பிர்ம ரிஷி யாச்சிரம மிருக்கிறது அந்தக் காவுக்குள் நுழையாமல் அதன் வடபக்கம் வருகிற பாதை வழியே நாலுநாழிகை தூரம் வந்தால் மேல்பக்கமிருந்து கிழ்பக்கம் போகிற ஆற்றுக் கரையில் நெரிக் கல்லுகளாகச் சரளையா யிருக்கு மிடத்தில் வரை ஆலமர மிருக்கிறது மரத்தூர் பெரிதாயும் உயர்ந்து வளராது குட்டையாயிருக்கும் இலை ஆலிலைபோல் சிறிதா யிருக்கும் அம்மரத்தின் பட்டையை ஒருவீசை யெடுத்து நாலுபடி உதகம் விட்டு ஒரு படியாய் வற்றியபின் இருத்து வேளைக்கு வீசம்படி வீதம் காலை மாலை எட்டு நாள் சாப்பிட்டு வரக் காய சித்தியாகும் யானைப் பெலமுண்டாகும் நரை திரை மாறும்.

## மலையாளம், ஆரியன்காவு பராசரிஷி ஆச்சிரமம்.

## 30. செவ்வள்ளிக் கிழங்குக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த ஆரியன் காவுக்கும் ஆற்றுக்கும் நேர்வடக்காக ஒரு நாழிகை வழிதூரம் வந்தால் அங்குள்ள கருங் கானலின் வடபக்கம் தாகம் புல்லுக ளடர்ந்த பராச ரிஷி வனத்திற் குக் கிழ்பக்கம் கூப்பிடு தூரத்தில் ஆங்கு நீர்க்கசிவுள்ள செம்மண் தரையாயிருக்கும் அதற்கு மேற்பக்கஞ் சென்று பார்த்தால் செவ் வள்ளிக் கொடிகள் படர்ந்திருக்கும் அந்தச் செடியை வெட்டி எரிந்து விட்டுத் தோண்டிப் பார்த்தால் நாய்க்குட்டிப் பருமனுள்ள பெருங் கிழங்குகள் சிவப்பு நிறமா யிருக்கும் அந்தக் கிழங்கை அறுத்துச் சாப்பிட மயக்கமுண்டாகும் மூன்று நாளானபின் மயக்கந் தெளியும் அதுவரை பால் பழங்கொடுத்து வரவும் நாலாம் நாள் பச்சரிசியும் பாசிப் பருப்பும் போட்டுச் சமைத்துக் கொடுத்து வரக் கற்ப தேகமா கும் நரை திரை மாறும் இந்தக் கிழங்குக்குள் தாமிரத்தை வைத்து வேகவைத் தெடுக்கக் களிம்பற்றுப் போகும் ஷை தாமிரத்தோடு சரி

சேர்க்கப் பத்து வயதாகும் அதைச் செந்தூரஞ் செய்து சாப்பிடக் காய சித்தியாகும் நரை திரை மாறும் யானைப்பெலமுண்டாகும்.

☞ கருவூரார் வாத காவியம் 700 ல் இதன் விபரங்களைக் கூறி யிருக்கிறார் பார்த்துக் கொள்ளவும்.

## மலையாளம் ஆரியன்காவு வல்ல சித்தர் வனம்

## 31. பலுனி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தச் செம்மண் தரைக்கு நேர்வடக் காக ஒருநாழிகை வழிதூரத்தில் காளி கானலென்ற ஒரு வனமிருக்கி றது அந்த வனத்திற்குள் மேல் பாரிசத்தில் ஒரு குகை யிருக்கிறது அந்தக் குகைக்குள் அனேக சித்தர்கள் வாசஞ்செய்வார்கள் அதோடு வல்ல சித்தரும் ஆங்கு வாசஞ் செய்துகொண்டிருக்கிறார் அவரைக் கண்டு தெரிசித்துக் கொண்டு நேர் கிழக்காகக் கூப்பிடுதூரம் போனால் கிழக்கு முகமாக ஒரு காளி கோவிலிருக்கிறது அந்தக் கோவிலுக்கு முன்பாகப் பலுனி மரமிருக்கிறது அதன் மரத்தூர் பெரிதாயும் இலை கையகல மாயும் காய் அத்திக்காய் போலுமிருக்கும் ஷை பழத் தைப் பட்சிகள் சாப்பிடும் அந்த மரத்தூரில் குடைந்து அதற்குள் ஒரு பலம் இரசத்தை விட்டு அந்த மரப் பட்டையால் மூடி மூன்று மாதஞ் சென்றெடுத்துப் பார்த்தால் இரசம் வெள்ளிபோ லுரைந் திருக்கும் அதை யெடுத்து உருட்டி வைக்க இறுகி மணிபோலா கும் அம்மணியை வாயிலிடக் கெவுன முண்டாகும் இதைத் தான் கெவுன குளிகை யென்று சொல்வது.

## மலையாளம், ஆரியன்காவு, அசுவனி தேவர் வனம்.

## 32. செங்குமரிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் காளி கோவிலுக்கு வடக்கே போகிற பாதையில் நாலு நாழிகை வழி தூரத்தில் அருவி மலை யொன்றிருக்கிறது அம் மலையைக் கடந்து வடமேற்கு மூலையாகப் போகிற பாதை வழியே போனால் அம்பிடு தூரத்தில் பெருங்கான லுண்டு அதன் மத்தியிலுள்ள அசுவனி தேவராச்சிரமத்திற்குப் பக் கத்திலுள்ள கசிவுத் தரைக்கு மேல் பக்கத்தில் செங்குமரி ஏராளமாய் முளைத்திருக்கிறது அது கற்றாழை மடலைப்போல் சிவப்பு நிறமாயிரு க்கும் அறுத்துப் பார்க்கச் சோறுஞ் சிவப்பாயிருக்கும் பால் இரத்

தம் போலிருக்கும் அச் சோற்றை யெடுத்துப் பீங்கானில் போட்டுப் பிசைந்து கழுவி விட்டு அத்தோடு நெய்யுஞ் சீனியும் போட்டுப் பிசைந்து காயவைத்துச் சூரணமாக்கி வைத்துக் கொண்டு காலை மாலை வெருகடி வீதம் ஒரு மண்டலஞ் சாப்பிட்டுவரக் காயசித்தி யுண்டாகும் நாலு யானைப் பெலமுண்டாகும்.'

☞ போகர் கற்பம் **300** லும் அகஸ்தியர் பூரண சூஸ்திரம் **216** யென்னும் நூலிலும் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்க்கவும்.

( இது வரையிலும் மலையாளம் ஆரியன் காவு எல்லை. )

## திருக்கணங்குடி எல்லை மலைநம்பி கோவில் குதம்பைச் சித்தர் வனம் 33. வரை ஆல மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே இந்தக் கவிவுத் தரைக்கு வடபக்கம் போகிற பாதையில் நாலு நாழிகை வழி தூரம் போனால் அங்கொரு உயர்ந்த வட்டப் பாறை யிருக்கிறது அதன் மேலேறிப் பார்த்தால் திருக்கணங்குடி ஊரும் நம்பியாண்டார் கோவிலுந் தெரியும் அதை விட்டிறங்கி வடமேற்கு மூலையாகப் போகிற பாதையில் அரை நாழிகைவழி தூரம் போனால் மலைச்சருவி லொரு குகை யிருக்கிறது அந்தக் குகைக்குள் குதம்பைச் சித்தர் முதலான அநேக சித்தர்கள் வாசஞ்செய்வார்கள் அவரைக் கண்டு தெரிசித்துக்கொண்டு குகையின் வடபக்கம் அரை நாழிகை வழி தூரம் போனால் அங்கே மலைநம்பி கோவில் வெகு உன்னதமா யிருக்கிறது அந்தக் கோவிலுக்குப் பக்கத்தில் ஒரு ஆறு வருகிறது, அந்த ஆற்றுக்குள் வற்றாத சுனையிருக்கிறது அதைக் கடந்து வடபக்கம் கரை ஏறினால் வரையால மரமிருக்கிறது இந்த மரத்தின் குணங்களை முன் 29 வது நிம்பரில் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது அதன்படி செய்யச் சித்தியாகும்

## மலை நம்பி கோவில் புண்ணாக்குச் சித்தர் வனம். 34- கருங்கரிப்பான் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே மலை நம்பி கோவிலுக்கு வடபக்கமாகப் போகிற பாதை வழியாய் இரண்டு நாழிகை தூரம் போனால் குரும்பை மலை யென்று ஒரு பெரிய மலை யிருக்கிறது அம் மலைமேலேறாமல் அதன் வடபக்கம் போகிற பாதையில் அரை நாழிகைதூரம் போனால் புண்ணாக்குச் சித்தர் வனமிருக்கிறது அதன் பக்கத்தில் மண்மலை யிருக்கிறது அந்த மலை மேல் சமதளமான யிடத்தில் ஒரு முழ உயர முள்ளதாயும் புஷபம் கருப்பாயும் கரிப்பா னிலையைப் போல்

கொஞ்சம் பெரிதாயும் செடி தண்டு கருப்பு நிறமாயுமுள்ள கருங்கரிப் பான் செடிகள் ஏராளமாய் முளைத்திருக்கிறது இதன் சமூலம் பிடுங்கிச் சூரணித்து வெருகடிப் பிரமாணம் காலை மாலை ஒரு மண்டலம் சாப்பிட்டு வரச் சகல சித்தியுமடைந்து நூறு வருடம் வரை யிருப்பான் நரை திரை மாறும் யானைப் பெலனுண்டாகும் பச்சரிசியும் பாசிப்பருப்பும் பொங்கிச் சாப்பிடவும்.

☞ ஞான சாஸ்திரத்திரட்டு 4 வது பாகத்தில் சூரியானந்தர் கற்பம் 25 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறார் பார்த்துக்கொள்ளவும்.

## மலை நம்பி கோவில் யோகச் சித்தர் வனம். 35-வது கருங் கழு கிறகுக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தச் சமதளமான யிடத்தின் பக்கமுள்ள ஆற்றுக்கு வட பக்கமாக வந்து மேற்குப் பக்கம் போகிற பாதையில் கூப்பிடு தூரம் போனால் அங்கொரு குகை தோன்றும் அக்குகைக்குள் யோகச் சித்தரிருப்பார் அவரைக் கண்டு தெரிசித்து அரை நாளிகை வழிதூரம் போனால் சிறு குண்டுமலை யிருக்கிறது அதனோரம் ஆலவிருட்சம் வெகு பெரிதாய்க் காணும் அதில் அனேக கருங்கழுகளிருக்கிறது மனிதரைக் கண்டால் பறந்துபோய்விடும். அதன் சிறகு நவ்வல் பழம்போல் கருப்பாக மரத்தின்கீழ் உதிர்ந்து கிடக்கும் அந்தச் சிறகை யெடுத்துக் கையில்பிடித்து கண்ணுக்குநேரே வைத்துப்பார்த்தால் வானத்தில் பதினாலுலோகமுந் தெரியும். அந்த இறகை யெடுத்து யெரித்துக் கருக்கெடுத்து அதில் நெய் புனுகு சவ்வாது விட்டு அரைத்துச் சிமிழில் வைத்துக்கொண்டு நெற்றியில் திலதமிடத் தூரத்திலிருக்கிறவைகள் சமீபத்தில் தெரியும் தன்னுடைய உருவம் பிறருக்குத் தெரியாது முற்றுமுணர்ந்த மெஞ்ஞானியாவான்.

☞ கருவூரார் வாதகாவியம் 700 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறார் பார்த்துக் கொள்ளவும்.

( இது வரையிலும் திருக்கணன் குடி எல்லை )

## மலையடிக் குறிச்சி விஸ்வநாதன் காவு கஞ்சமலைச் சித்தர் வனம் 36. சிவந்த தும்பைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த ஆலவிருட்சங் கடந்து வடக்குப் பக்கம் மேல் சருவின் பாதை மேற்கு மலையாளத்துக்குப் போவ

தால் அந்தப்பாதையில் போகாமல் இந்த மலையடிக்குறிச்சி மலையின் சருவில் வந்தால் பாதாள வாசல் புடவு உண்டு அந்த மிருகப் புடவிற் குள் அநேக சுற்றுகளுண்டு அதனோரம் ஒரு முழ உயரத்தில் தும்பை இலை போல் சிவந்த நிறமாயும் அதன் புஷ்பம் சிவப்பாய் கதிர் வாங்கி புஷ்பிக்கக் கூடியதாயுமுள்ள சிவந்த தும்பைச் செடிகளிருக்கிறது அதன் இலையைப் பிடிங்கி அரைத்துத் தாமிரத்திற்குக் கவசஞ் செய்து அதன்மேல் சீலை மண் செய்து புடமிடச் செந்தூரமாகும் அந்தச் செந்தூரத்தை வெள்ளியிற் கொடுக்கப் பத்துவயதாகும் செந்தூரத்தை மூன்று நாளைக்குச் சாப்பிடக் காய சித்தியாகும் இதன் இலையை அரைத்துச் சாறெடுத்து வீசம்படி வீதம் மூன்று நாள் சாப்பிட முயலகன் வலிப்பு நீங்கும்.

## மலையடிக் குறிச்சி திருமூலநாதர் வனம்

## 37. வெண்ணாவல் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த மிருகப் புடவுக்கு மேல் பக்கம் போய் நாலு நாழிகை வழிதூரம் போனால் அங்கே ஒற்றையூரிருக்கி றது அந்த ஒற்றை ஊருக்கு மேற்காகப் போனால் திருமூலநாதர் குகை உண்டு அதன் வடக்கே ஒரு நாழிகை வழிதூரஞ் சென்றால் பச்சை யாறுண்டு அதற்கு மேற்குக் கரையில் வெண்ணாவல் மரங்கள் இருக் கிறது அது நாவல் மரம்போலிருக்கும் இலை மட்டும் நீண்டிருக்கும் பூ, காய், பழம், மரம், பூராவும் வெண்மையாயிருக்கும் பழத்தை வாயி லிட வெகு தித்திப்பாயிருக்கும் அம் மரத்தின் மேற்பட்டையை நீக்கி விட்டு அடிப்பட்டையை வெட்டிக் குழித்தைல மிறக்கி தாமிரத் தகட்டைக் காய்ச்சி நாற்பது தரம் அத் தைலத்தில் தோய்க்க வெண் மையாகும் அதைச் செந்தூரமாக்கி மூன்று நாள் சாப்பிடக் காய சித்தியாகும் கிழவனுங் குமரனாவான்.

☞ அகஸ்தியர் பூரண சூஸ்திரம் 216 ல் இதன்விபரங்களைக் கூறியிருக்கிறார் பார்த்துக்கொள்ளவும்.

## மலையடிக்குறிச்சி மவுனச் சித்தர் வனம்

## 38. கருந்தாமரைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தத் திருமூல நாதர் குகைக்கு வட பக்கம் போனால் மவுன சித்தர் குகையிருக்கிறது அந்தக் குகையோரம் பச்சையாறிருக்கிறது அதைக்கடந்து மேற்கே ஐந்து நாளிகை வழி தூரஞ் சென்றால் மலைச்சரிவு உண்டு அந்த மலைச்சரிவில் வைரவன்

கோவிலும் வனதேவதைகளு முண்டு அந்தக் கோவிலுக்கு வட கிழ் மூலையில் ஒரு குட்ட முண்டு அக்குட்டத்திற் கருகேயுள்ள சதம்புத் தரையில் கருந்தாமரை யுண்டு அந்தக் கருந்தாமரையின் கிழங் கெடுத்து நாற்பது துண்டுகளாய் நறுக்கி நாற்பது நாள் உட்கொண் டால் சிறு பிராயமாவார்கள் ஏழு வகை லோகத்திற்கும் இந்தக் கிழங் கின் சாற்றைச் சுருக்குக் கொடுக்கக் களிம்பற்றுப் போகும்.

☞ புலஸ்தியர் கற்பம் 300 ல் இதன் விபரங்களைக் கூறியிருக் கிறார் பார்த்துக் கோள்ளவும்.

## மலையடிக் குறிச்சி தேகசித்திச் சித்தர் வனம்.

## 39. கார்போக அரிசிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் குட்டத்திற்குச் சமீபமாய் பத்திரகாளி கோவிலும் அதன் பக்கத்தில் தேகசித்திச் சித்தர் குகையு மிருக்கிறது அந்தக் குகைக்குப் பக்கத்திலுள்ள சதம்புத் தரையில் கார் போக அரிசிச் செடிகளிருக்கிறது அந்தச் செடியில் அரிசி யெடுத்து அப்படியே சூரணம் பண்ணி வெருகடிப் பிரமாணம் தேனில் சாப்பிட வாந்தி குஷ்டம் ஈளை முதலியவை தீரும் இந்தச் சூரணம் ஏழு நாள் நெய்யிற் கொள்ளப் பவுந்திரம் மூல விப்புருதி முதலியன தீரும் ஷை சூரணம் வெருகடியும் வாய் விளங்கம் பொடி வெருகடியும் கோ மூத்தி ரத்தில் உட் கொள்ளப் பதினெட்டுக் குஷ்டமுந் தீரும் இந்தச் சூரண மும் திப்பிலியும் பொடி செய்து வெருகடிப் பிரமாணந் தேனிற் உட் கொள்ளச் சகல குட்டமுந் தீரும்.

( இது வரையிலும் திருக்கண்ணன்குடி மலைபடிக் குறிச்சி எல்லை. )

## மலையாளம் கமலநாதன் காவு வாரிஷியாச்சிரமம்

## 40. வல்லாரைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தப் பத்திரகாளியம்மன் கோவிலை யும் சதம்புத் தரையையுங் கடந்து நாலு நாழிகை வழிதூரம் போனால் அங்கே வாரிஷி யாச்சிரமமாயிருக்கிற குகைக்குத் தென் பக்கம் சிறுமலைக் குண்டு இருக்கிறது அதன் வடபக்கமுள்ள கமல நாதன் காவுக்குள் வல்லாரை படர்ந்திருக்கும் அதைப் பூசமும் ஞாயிற்றுக் கிழமையுங் கூடிய தினத்தில் சமூலங் கொண்டுவந்து கழு விப்போட்டு நிழலுணர்த்திச் சூரணம் பண்ணி வெருகடிப்பிரமாணந்

காடியில் ஐந்து மாதங் கொள்ள நரை திரை மாறி யெளவன வய துண்டாகும், இப்படி ஒரு வருடங்கொள்ளப் புதினாறு வயதுடையவ னாக நூறு வருட மிருப்பான் பால் சாதம் தேன் நெய் பழம் சர்க்கரை முதலியவை சாப்பிடவும் மற்றவை ஆகாது யானைப் பெலமுண்டா கும் அழகு புருடனாக இருப்பான்.

☞ அகஸ்தியர் பரிபூரணம் 1200 யென்னும் சாஸ்திரத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

## மலையாளம் கமலநாதன் காவு கவுபால சித்தர் வனம்

## 41. கானற்பலா விரைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தச் சிறுமலைக்குண்டுக்கு வடபக் கம் போகிற பாதை கடந்து பத்து நாழிகை தூரத்திலிருக்கும் நாத மலை யோரம் கவுபால சித்தர் குகையிருக்கிறது அதற்குத் தென்பக்கம் கானற்பலா மரங்களிருக்கின்றது அக்கானற்பலாவிரையை யெடுத்துக் குழித்தைல மிறங்கி பழகின கலசத்திலிட்டு வைத்து மூன்று களஞ்சி தைலத்தைப் பசுவின் பாலில்விட்டுச் சாப்பிட மூர்ச்சை யுண்டாகித் தெளியும் கருங்குருவையரிசிச் சோறும் நெய்யும் பசுவின் பாலுமாய் ஏழு நாட் கொள்ளப் பாதாள லோகமுந் தெரியும் அவன் சாய்கையுங் காணப்படாது இப்படி ஒரு மாதங்கொள்ளப் பகலில் நட்சேத்திரங் தெரியும் அதின் பூவை நிழலில் உலர்த்தித் தேனில் ஒரு வருடங் கொள்ள இளமைப் பருவமுண்டாகும்.

☞ கருவூரார் வாத காவியம் 700 என்னும் நூலில் இதன் விபரங் களைக் கூறியிருக்கிறார். பார்த்துக்கோள்ளவும்.

## மலையாளம் கமலநாதன் காவு மதிராச ரிஷிவனம்

## 42. கரிப்பான கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த நாதமலையில் வடபக்கம் போகிற பாதையில் நாலு நாழிகை வழி தூரத்தில் முடக்கம் பாறையும் அதன் வடபக்கம் மதிராச ரிஷி யாச்சிரமமு மிருக்கிறது அதற்கு வடபக்க முள்ள சதமபுத் தரையில் கரிப்பான் செடிகளிருக்கிறது அதை பூச மும் ஞாயிற்றுக்கிழமையுங் கூடிய தினத்தில் சமூலங்கொண்டு வந்து நிழலில் உலர்த்திச் சூரணம் பண்ணி வெருகடிப் பிரமாணம் காடி யில் கரைத்துச் சாப்பிடவும் பத்தியம் கத்திரிக்காய் பாகற்காய் கடுகு இது மூன்றுந்தவிர மற்றவை யாகும் இப்படி ஒரு மாதங்கொள்ளச்

சகல வியாதியுந் தீரும் நாலு மாதங்கொள்ளத் திரேக அழகுண்டாகும் ஆறு மாதங் கொள்ளச் சகல சித்தியு மடையலாம் பத்து மாதங் கொள்ள நூறு வருட மிருக்கலாம்

உரோம ரிஷி 500 யென்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறார் பார்க்கவும்.

## மலையாளம் கமலநாதன் காவு கௌதமராச்சிரமம்

## 43. பேய்ச்சுரைவிரைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த முடக்கம் பாறையைக் கடந்து மூன்று நாழிகை வழி தூரம் வந்தால் திருகைக்கேணி இருக்கிறது அந்தக் கேணியை விட்டு மேடேறினால் இராக்காயி அம்மன் கோவிலும் அதன் வடபக்கம் கௌதமராச்சிரமமு மிருக்கிறது அதற்கு தென் பக்கம் பேய்ச்சுரை ஏராளமாகப் படர்ந்திருக்கிறது அந்தப் பேய்ச் சுரையின் விரையை யெடுத்து குளித்தைல மிறக்கி எண்ணெய் கலயத் திலே வைத்துக்கொண்டு இந்தத் தைலம் மூன்று களஞ்சியும் பாலுந் தேனுஞ் நெய்யும் சரிசமனாய் விட்டுச் சாப்பிட மூர்ச்சையாகும் உடனே இத் தைலந்தொட்டு உள்ளங்கால் உள்ளங்கையில் தடவ மூர்ச்சை தெளியும் இப்படி இருபத்தோர் நாள் சாப்பிடச் சரீரத்தில் திவ்விய காந்தியுண்டாகும் மூன்று மாதஞ் சாப்பிட பதினாறு வயது போலிருப்பான் ஒரு வருஷஞ் சாப்பிட அநேக காலமிருப்பான் பத்தியம் பாலுஞ் சோறுந் தவிர மற்றவை யாகாது.

☞ கருவூரார் வாத காவியம் 700 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறார் பார்த்துக் கொள்ளவும்.

## மலையாளம் கமலநாதன் காவு தேரையர் ஆச்சிரமம்

## 44 கல் தாமரைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த இராக்காயம்மன் கோவிலுக்கு பக்கம் கூப்பிடுந் தூரத்தில் தோரண மலையும் அதற்கு மேற்கே மூங்கி லூற்று மிருக்கிறது அதன் வடசரகில் தேரையர் ஆச்சிரமமிருக்கிறது அந்த ஆச்சிரமத்திற்கு மேல் புரமுள்ள சதம்புத் தரையில் கல்தாமரை முளைத்திருக்கிறது அம் மூலிகையி னிலையைப் பார்ப்பதற்கு ஒரு இலை போல் தோற்றும் விரலை அழுத்தி வைத்தால் நாலு இலையாக விரியும் அதன் வேர் சடைபோலிருக்கும் அந்த வேரில் இரும்பூசியைச் சொருகினால் தாமிர ஊசியாகும் அந்த ஊசியைப் பிடுங்கி மற்றொரிடத்

தில் சொருகினுல் வெள்ளி ஊசியாகும் பின்னும் அந்த ஊசியை மற் ேறாரிடத்தில் சொருகினுல் தங்க ஊசியாய் பத்து மாத்திருக்கும் அம் மூலிகையைப் பிடிங்கிவந்து கீழே போட்டு மிதித்துக்கொண்டு ஆகா யத்தைப் பார்த்தால் பகலில் நக்ஷத்திரந்தெரியும் இந்த அடையாளங் களைக் கண்டு சமூலம் பிடிங்கி வந்து நிழலிலுலர்த்திச் சூரணஞ் செய்து ஒரு மண்டலம் வெருகடிப் பிரமாணஞ் சாப்பிடக் காயசித்தியாகும்.

☞ போகர் கற்பம் 300 யென்னும் நூலில் இதன் விபரங் களைக் கூறியிருக்கிறுர் பார்த்துக் கொள்ளவும்.

## மலையாளம் கமலநாதன் காவு மாமாங் குறிச்சி விசுவணி தேவர் ஆச்சிரமம் 45. சிவந்த புனல் முருங்கைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே மூங்கிலூற்றுக்கு வடக்கே இரண்டு நாழிகை தூரத்திலிருக்கிற ஊற்றுமாமலைக்கு மேற்கே கிணறு போல ஒரு கெவியிருக்கிறது அந்தக் கெவிக்கு வடக்கே மணற்சாரி யான குண்டு மலையுண்டு அதின் கிழக்கே வறட்டாறிருக்கிறது அந்த ஆற்றுக்கு நேர் மேற்கேயுள்ள சலக்காரன் புடவுக்குப் பக்கத்தில் அம்பிடு தூரத்தில் விசுவணிதேவர் ஆச்சிரமமிருக்கிறது அந்த ஆச்சிர மத்திற்கு நேர் வடபக்கமிருக்கிற மாமாங் குறிச்சிக்குத் தெற்கே ஒப்ப நின்றான் பொத்தை இருக்கிறது அதன்மேல் சருவில் சிவந்தபுனல் முருங்கை மரமிருக்கிறது அதின் பட்டையைத் தட்டி வைத்துக் கொண்டு களஞ்சி இரும்பைத் தகடாக விரல் நீளந்தட்டி அதை உமி யோட்டில் கரிபோட்டு ஊதி இரும்பு பழுக்கிற சமயத்தில் அந்தப் பட்டையைக் காசளவு பாக்குடன் போட்டு மென்று தம்பலச் சாற்றை உமிழ்ந்தால் பத்து வயதாகும் அதன் பிசினை உப்புப் புளி தள்ளிப் பணவிடை நாற்பது நாள் கொண்டால் கற்பகோடி கால மிருப்பான்.

## மலையாளம் கமலநாதன் காவு மாமாங்குறிச்சி அம்பிகானந்தர் வனம் 46. முண்டக விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த ஒப்ப நின்றான் பொத்தைக்கு வடமேற்கு மூலைச் சருவில் பெரிய வனமும் அவ்வனத்திற்கு மத்தி யில் அம்பிகானந்தர் ஆச்சிரமமுமிருக்கிறது அதன் பக்கத்தில் முண் டகவிருக்ஷம் கோபுரம் போல் நிற்கும் அதைத்தட்டினுல் பால்வரும் அப்பாலே இரும்புக் கம்பியைக் கையில் பிடித்துக் கொண்டு அதை

வீசம்படி பால் குடித்தால் முப்பது நாளிகை வரை மூர்ச்சை யாகும் அந்த முப்பது நாழிகைக்கும் பக்கத்தில் ஒருவர் யிருந்து பசுவின் பாலை வாயில் கொஞ்சம் கொஞ்சமாய் கொடுக்கப் பின்பு மயக்கந் தீரும் அதன் பின் முப்பது நாள் சென்றால் சரீரத்தில் சட்டை களன்று சரீரம் கண்ணாடி போல ஒளிவுண்டாகும் இவனுடைய மல சலம் இரும்பில் பட்டால் பேதிக்கும் அஷ்டாங்கயோகமுஞ் சித்தியாகும்.

( இது வரையிலும் கமலநாதன் காவு எல்லை )

## மலையாளம் பொன்னரியான் காவு மாமாங்குறிச்சி டமரானந்தர் ஆச்சிரமம் 47. அவுரி கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த ஆச்சிரமத்திற்கு மேற்குப் பக்கத்தில் அரை நாழிகை தூரத்தில் பொன்னரியான் காவு யிருக்கிறது அதற்குள் குருணுக்கல் மலைச் சருவில் டமரானந்தர் ஆச்சிரமமிருக்கிறது அந்த ஆச்சிரமத்திற்குத் தென் பக்கங் கரிவுத்தரையில் அவுரிச் செடிகள் முளைத்திருக்கிறது அந்த அவுரியை சமூலங்கொண்டு வந்து நிழலிலுணர்த்திப் பொடிபண்ணி அந்தப்பொடியில் சீனிச் சருக்கரை கூட்டி வெருகடிப் பிரமாணம் ஆறு மாதங்கொள்ளக் கிழவனுங் குமரனுவான் இப்படி ஒரு வருடங்கொள்ளச் சருவசித்தியும்டைவான் யானைப் பெலமுண்டாகும்.

☞ கருவூரார் வாத காவியம் 700 யென்னும் நூலிற் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

## மலையாளம் மாமாங்குறிச்சி கையாட்டிச் சித்தர்வனம் 48. குமரிக்கற்றாழைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் குருணுக்கல் மலைக்குத் தென் மேற்கின் பாதையில் ஒரு நாழிகை தூரம் போய் அங்கிருக்கும் வட்டப்பாறை மேலேறிப் பார்த்தால் மலையடிக்குறிச்சி தெரியும் அதன் வடபக்கம் கையாட்டிச் சித்தர் குகை யிருக்கிறது அந்தக் குகையோரங் குமரிக்கற்றாழை யிருக்கிறது இதை ஞாயிறும் அனுசமுங் கூடின நாளில் கற்றாழை மடல் கொண்டு வந்து சோறு எடுத்துக் கிண்ணியில் போட்டுத் திரிகடுகுச் சூரணம் வெருகடிப் பிரமாணஞ் சேர்த்துச் சீனியும் நெய்யுங் கலந்து சாப்பிட்டு வரவும் இப்படி ஒரு மண்டலஞ் சாப்பிட்டுவர மூல வியாதி பவுந்திரம் பதினெண் குட்டம் முதலியதும் பருதி கண்ட பனிபோல் நீங்கிச் சரீரம் ஒளிவு தரும் ஒரு வருடங்கொள்ள ஆரோக்கியமுந் திடமும் உண்டாகி ஞானியாவான்

சித்தனுக்குச் சித்தனு யிருப்பான் வன் உமிழ்நீர் விட்டு இரசத்தை மத்திக்கக் குளிகை யாகும்.

☞ ஞான சாஸ்திரத் திரட்டு 4 வது பாகத்திலுள்ள சூரியானந்தர் கற்ப ஞான சூஸ்திரம் 25 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

( இது வரையிலும் பொன்னரியான் காவு எல்லை )

## கூடவ நல்லூர் கண்ணனந்தர் வனம்

## 49. ஏரழிஞ்சி விதைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தச் சித்தரின் குகையைக் கடந்து ஒரு நாழிகை தூரத்திலிருக்கும் கூடவநல்லூர் மலையிலிருந்து மேல்புரம் போனால் தாடகைமலை யிருக்கிறது அதன் தென் சருவில் நின்று பார்க்கக் கூடவ நல்லூர் தெரியும் அதன் பக்கத்தில் மகா தேவர் கோவிலுண்டு அதன் முன்னாகக் கண்ணனந்தர் ஆச்சிரம மிருக்கிறது அதற்கு வடபக்கம் ஏரழிஞ்சி மரமிருக்கிறது அதன் விரையை எடுப்பதற்கு அம் மரத்தின் தூரில் வைக்கோலைச்சுற்றி சாணியைத் தடவி வைத்தால் பழுக்கிற காலத்தில் விழுந்த விரை இந்த மரத்தில் கட்டியிருக்கிற வைக்கோலிலும் தடவி யிருக்கிற அந்தச் சாணியிலும் போயிருக்கும் அதை யெடுக்கலாம் அதை எடுத்துப் பொடிபண்ணி களஞ்சி பொடியை நல்லெண்ணெயிற் போட்டு ஏழு நாள் வெயிலில் ஊரவைத்து எடுத்துச் செந்தாமரைத் தண்டு நூலைத் திரியாக்கி விளக்கில் போட்டு மேற்படி தைலத்தால் திரிக்கொளுத்திப் பேரண்ட ஓட்டிலே மை பற்றவைத்தெடுத்து நகக் கண்ணிலும் உள்ளங்கையிலும் புறங்கையிலும் தடவி நெற்றியிலும் திலதமிட சர்வலோகமுந் தெரியும் தன்னுடலை பிரத்தியார் காணார்கள்.

☞ கருவூரார் வாதகாவியம் 700 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறார் பார்த்துக் கொள்ளவும்.

## கூடவநல்லூர் சித்தானந்தர் ஆச்சிரமம்

## 50. மஞ்சள் பூ தைவேளை

கேளுங்கள் முனிவர்களே அந்த மகா தேவர் சன்னிதி கடந்து ஒரு நாழிகை வழிதூரம் வந்தால் கொடுமுடி மலை அடிவாரத்தில் சிறு குண்டு மலையிருக்கிறது அந்த மலையினருகாமையில் கூப்பிடு தூரத்தில் சித்தானந்தர் ஆச்சிரமமிருக்கிறது அதற்கு வடபுரம் பொற் பூத் தைவேளை யென்ற மஞ்சள் பூ தைவேளை இருக்கிறது அதைப்

பார்த்தால் தைவேளைச் செடிபோலவே யிருக்கும் புஷ்பம் மஞ்சளாக இருக்கும் அம்மூலிகையைச் சமூலம் பிடிங்கி இடித்துச் சாரெடுத்துச் சூதத்திற்குச் சுருக்குக் கொடுக்கக் கட்டும் அந்தக் கட்டுடன் செம்புத் தகடு சேர்த்து உருக்கக் கண்விட்டாடும் அதைக் கட்டியாக ஊத்தி யெடுத்து நொருக்கி மேற்படி சாறுவிட்டரைத்துப் புடம் போடச் செந்தூரமாகும் அந்தச் செந்தூரத்தை வெள்ளியில் பத்துக்கொன்று கொடுக்க வயது பத்தாகும்! அதைப் பற்பஞ்செய்து சாப்பிடத் தேக சித்தியாகும் அன்னியில் அந்தச் செடியை சமூலமரைத்துச் சாரெடுத்து விசும்படி வீதம் ஒரு வாரஞ் சாப்பிட்டுவரத் தேகம் பொன்னிற மாய்க் கற்பதேகமாகும்.

☞ ஞான சாஸ்திரத்திரட்டு 4 வது பாகத்தில் சூரியானந்தர் கற்பம் 25 யென்னும் சாஸ்திரத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறார்

( இது வரையிலும் கூடவனல்லூர் பொன்னரியான் காவு எல்லை )

## இங்கிலாச பருவதம் சச்சிதானந்தர் ஆச்சிரமம்

## 51. நாகதாளிக் கள்ளிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தச் சிறுகுண்டு மலைக்கு வட பக்கம் ஒரு நாழிகை வழிதூரத்திலிருக்கும் இங்கிலாச பருவதத்திற்கு வட பக்கம் அம்பிடு தூரத்தில் சச்சிதானந்தர் ஆச்சிரமமிருக்கிறது அந்த ஆச்சிரமத்திற்கு மேல் பக்கம் நாகதாளிக்கள்ளி யிருக்கிறது அதைப் பிடிங்கி யரைத்துத் துணியில் சிறு பொட்டணங் கட்டி நல்லெண்ணெயிற் போட்டு ரசத்தை விட்டு ஒரு சாம மெரித்தால் இரசஞ் சுத்தியாகும் சுத்தியான ரசத்தை யெடுத்து அந்த நாகதாளியை யரைத்துக் குகைபோற் செய்து காயவைத்து ரசத்தை அதற்குள் விட்டு அரைத்த நாகதாளியால் மூடி அதைப் பொன்னூமத்தங் காய்க்குள் வைத்துச் சீலை மண் செய்து புடமிட ரசம் உருகிக் குளிகையாகும் ( இந்தக் குளிகையை உருக்கவேண்டிய விதமாவது ) குளிகைக்குக் கெந்தக மிரட்டிப்புடன் மனோசிலை, நாகம், பரங்கிப் பாஷாணம், புத்தோட்டுப் பாஷாணம், தொட்டிப் பாஷாணம், ஊசிக்காந்தம், வெடியுப்பு, சீனாக்காரம், பொன்னிமிளை, தீமுருகல் பாஷாணம், இந்தப் பத்துச் சரக்கும் இரசத்தினிடை யெடுத்து ஆகப் பதினொன்று சரக்கையும் சிவந்த புளி நடலைக் கிளங்கின் சாற்றா லரைத்து இருபத்தி னாலு உருண்டையாக உருட்டி இரசக்குளிகையைக் குகையில் விட்டு உருக்கி

உருக்கு முகத்தில் ஒவ்வொரு உருண்டையாய்க் கொடுக்கச் செந்தூர மாகும் அந்தச் செந்தூரத்தை அரிசி யிடை நெய்யிற் குளப்பிச் சாப்பி டத் தேகசித்தியாகும் நரை திரை மாறும் யானைப் பெலனுண்டாகும்.

☞ சதுரகிரிப் புராணத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக் கிறது பார்த்துக் கோள்ளவும்.

## இங்கிலாச பருவதம் கணநாதர் ஆச்சிரமம்

## 52. அழுகண்ணிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த இங்கிலாச பருவத்திற்கு வட கிழக்காக வந்தால் அம்பிடு தூரத்தில் அநேக மரஞ் செடிகள் சூழ்ந்த கந்த நாதன் காவு இருக்கிறது அந்தக்காவுக்கு மத்தியில் வெள்ளைப் பாறையென்று ஒரு மேடிருக்கிறது அதில் நின்று பார்த்தால் வள்ளி யூரும் சுப்பிரமணியர் கோவிலுங் குளமுந் தெரியும் அதே மலையில் குறவர்கள் கும்பிடுகிற சுப்பிரமணியர் பீட மிருக்கிறது அந்த மலைக்கு வடமேற்கு மூலையாய்ச் சென்றால் மலைச்சருவில் கணநாதர் ஆச்சிரம மும் அதன் வடபக்கம் கசிவுத் தரையில் அழுகண்ணி என்றொரு மூலிகையுண்டு அதற்கு ( ருதக்தி ) யென்றும் பெயர் அதில் நாலு வித முண்டு அவை வெண்மை சிவப்பு மஞ்சள் கருப்பு நிறங்களுண்டு இதில் எந்த வகை கிடைத்தாலும் நன்று அதனுடைய இலை சணப்பு யிலை போலிருக்கும் அதன் இலைக்கிலை தண்ணீர் விழுந்து கொண்டிருக்கும் இதைப் பூர்வ பக்ஷத்தில் நல்ல தினத்தில் கொண்டு வந்து சூரணம் பண்ணி வெருகடிப் பிரமாணம் எடுத்துத் தேனும் நெய்யும் பாலுங் கலந்து சாப்பிடவும் உப்பு புளி யாகாது காற்று வெய்யலில் போக லாகாது இப்படி நாற்பத்தெட்டுநாள் சாப்பிட நரை திரை மாறிக் கற்ப கோடி கால வரை யிருப்பான் சித்தர்களுக்குச் சித்தனா யிருப்பான்.

☞ போகர் கற்பம் 300 யென்னும் நூலில் இதன் விபரங் களைக் கூறியிருக்கிறார் பார்த்துக் கோள்ளவும்.

( இது வரையிலும் இங்கிலாச பருவத எல்கை )

## வள்ளியூர் மலை சிவானந்தர் ஆச்சிரமம்

## 53. தொழுகண்ணிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் கசிவுத் தரை கழித்து அரை நாழிகை வழிதூரம் போனால் அங்கே சித்தர் மலை இருக்கிறது அந்த

மலையில் தென்பக்கம் சிவானந்தர் ஆச்சிரமமிருக்கிறது அந்த ஆச்சிர மத்திற்கு மேல்புரமுள்ள கசிவுத் தரையில் தொழுகண்ணிச் செடிகள் முளைத்திருக்கிறது அதன் இலை அழுகண்ணிச் செடியின் இலைபோல் கொஞ்சம் நீண்டிருக்கும் அதன் தண்டு கொஞ்சங்கருப்பா யிருக்கும் சூரியன் எந்தப் பக்கத்திலிருக்கிறதோ அந்தப் பக்கம் திரும்பி யிருக்கும் இந்தச் செடி சமூலமும் நஞ்சுவேருஞ் சேர்த்தரைத்துக் கொஞ்சம் குகையில்வைத்து அதன்மேல் கெந்தகம் வைத்துக் கெந்தகத்தின் மேல் அரைத்ததை வைத்துருக்கச் செம்பாகும் அந்தச் செம்பை லோகத்திற் கொடுக்கப் பேதிக்கும் பே தித்த செம்பைச் செந்தூரஞ் செய்து சாப்பிடக் காய சித்தியாகும் மற்றொரு முறையாவது இந்தத் தொழுகண்ணி யிலையும் அழுகண்ணி யிலையும் கொட்டைக் கரந்தை யிலையும் சூரணித்து வெருகடிப் பிரமாணங் காட்டுக்குள்ளிருந்து பத்தியமாக ஒரு மண்டலஞ் சாப்பிடக் காயசித்தி யுண்டாகும் நரை திரை மாறும் இரண்டு மண்டலஞ் சாப்பிட முன்னூறு வயதிருப்பான் யானைப் பெலமுண்டாகும்.

☞ புலஸ்தியர் கற்பம் 300 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

## வள்ளியூர் மலை சூரியானந்தர் ஆச்சிரமம்.

## 54. கனை யெருமை விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் கசிவுத்தரைப் பாதை வழியே போகையில் ஒரு மனிதன் படுத்திருப்பது போல் ஒரு பாறை யுண்டு அதன் பக்கத்தில் தலையில்லாத விக்கிரகம் போல் ஒரு கல்லிருக்கிறது அக் கல்லுக்குள் மதிமானென்றொரு அரசன் புதைத்து வைத்த அனேக திரவியங்களிருக்கிறது அதற்கு வைரவன் காவலுண்டு அந்தத் திரவியத்தை எவ்விதத்திலும் எடுக்க முடியாததாகத் தெரிகிறது அதனருகில் வடபக்கம் சூரியானந்தர் ஆச்சிரமமும் அதன் பக்கத்தில் கனை யெருமை விருக்ஷமுமிருக்கிறது அம் மரத்தை வலமாகச் சுற்றி வந்து முனைக்கல்லால் குத்தினால் பால் வரும் அதைச் சிரட்டையில் பிடித்து அத்துடன் தேன் கூட்டி உண்ண மூன்றே முக்கால் நாழிகை மூர்ச்சையாகும் அதற்குத் தேனும் பாலுங் கலந்து கரண்டியினால் ஒரு நாழிகைக் கொருதரம் கொடுத்து வரவும் அப்பால் மூர்ச்சை தெளிந்து எழுந்திருப்பான் பின்பு அவனுக்கு நரை திரை மாறிக் கற்பதேகியாய் ஆயிரம் வருஷ மிருப்பான்.

ஞானசாஸ்திரத் திரட்டு 8 வது பாகம் சட்டமுனி கற்பவிதி 101 என்னும் சாஸ்திரத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## வள்ளியூர்மலே சொருபானந்தர் ஆச்சிரமம்.

## 55. தில்லே விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தத் தலேயில்லாத விக்கிரகத்தைக் கடந்து வடக்கே வருகிற பாதை வழியே போனல் வடகிழக்காக செண்பக நாதன் காவு இருக்கிறது அந்தக் காவுக்கு நடுமத்தியில் சொரூபானந்தர் ஆச்சிரமமிருக்கிறது அதனேரம் தில்லே விருக்ஷங்க ளிருக்கிறது அதனே முகம் வீங்கி மரமென்றுஞ் சொல்லுவார்கள் அவ் விருக்ஷம் கருப்பு நிறமாகவும் கிளைகள் சாம்பல் வர்ணமாகவும் சிறிதாகவும் இலே அத்தியிலே போலவு மிருக்கும் அதன் பாலேக் கரத் தாற் தீண்டாது அரைக்காற் படி கொண்டு வந்து தாமிரத்தை இலே சாய்த் தகடு தட்டி அப்பாலில் ஒரு மண்டலம் ஊறப்போட்டுப் பின்பு அதை யெடுத்து வீரம் பூரம் சேர்த்து அப்பாலேயே விட்டு அரைத்து தாமிரத் தகட்டிற்குக் கவசஞ் செய்து குக்குடப் புடமிடச் சுண்ண மாகும் அந்தச் சுண்ணத்தை ஆவின் நெய்யிற் குழப்பி மூன்று நாள் சாப்பிடக் காயசித்தியாகும் யானைப் பெலமுண்டாகும்.

கருவூரார் வாதகாவியம் 700 ல் இதன் வியரங்களைக் கூறி யிருக்கிறர் பார்த்துக் கொள்ளவும்.

## வள்ளியூர் மலே தெட்சணு மூர்த்தி ஆச்சிரமம்

## 56. நாள்வேதி உதகக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தச் செண்பகநாதன் காவுக்கு வட மேற்காகப் போனல் ஒரு மண் மலே யிருக்கிறது அந்த மலேக்கு மேல் பக்கம் தெட்சணுமூர்த்தி ஆச்சிரமமிருக்கிறது அதன் வடபக்கத்தில் அடுப்புக் கூட்டியது போல் மூன்று பாறைக் கற்கள் இருக்கிறது அதன் மத்தியில் தண்ணீர்போல் நாள்வேதி உதகமிருக்கிறது அதில் இறங்கித் தண்ணீரைத் தொடக்கூடாது தொட்டால்உதகநீர் பட்ட வுடன் கல்லாகி விடும் இதனேரமாக ஓர் மனிதன் உதகத்திலிறங்கிக் கல்லாய்க் கிடப்பதும் கொக்குவந்து தண்ணீர் குடித்துக் கல்லா யிருப் பதை அங்கே காணலாம் இதைப் பார்த்து இதுதான் உதகச் சுனே

யென்று தெரிந்துகொண்டு உதகத்திற் குள்ளிருக்கிற மண்ணை அகப்பையாலெடுத்து வெளியே காயப்போட்டுக் குகையிலிட்டு 20புடமிட்டு ஊதி யெடுக்கச் சத்துவிடும் அந்தச் சத்தைக் கல்வத்தி லிட்டரைத்து பசும்பாலில் கலக்கி மூன்று வேளை சாப்பிடக் காயசித்தி யாகும் யானைப்பெல முண்டாகும் நரை திரை மாறும் சடமழியா திருக்கும்.

( இது வரையிலும் வள்ளியூர் மலை எல்லை )

☞ ஞான சாஸ்திரத் திரட்டு 2 வது பாகத்திலுள்ள காலாங்கி நாதர் ஞானவிந்த ரகசியம் 30ல் இதன் விபரங்களை கூறியிருக்கிறது.

## களக்காடு மலை ஏகநாதர் ஆச்சிரமம்

## 57, சதுர மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த உதகச்சுனை யிருக்குமிடத்திற்கு வடபாரிசமாக வருகிற பாதையில் ஒரு நாழிகை வழி தூரம் போனால் அங்கே யிருக்கிற பெரியவனத்தின் நடு மத்தியில் ஏகநாதர் ஆச்சிரம மிருக்கிறது அதன் வடபக்கம் குடைக்காரன் கல்லிருக்கிறது அந்தக் குடைக்காரன் கல்லோரமாகச் சதுர மர மென்றொரு மர மிருக்கிறது இலை தடிப்பாயும் முறப்பாகவு மிருக்கும் கதிர் வாங்கிப் புஷ்பிக்கும் இதன் பட்டையை வெட்டினால் பால் வடியும் அந்தப்பாலை வீசம்படி பிடித்து அதில் வெள்ளைப் பாஷாணத்தைச் சுருக்குக் கொடுக்கக் கட்டும் செம்புத் தகட்டைக் காய்ச்சி இந்தப் பாலில் ஏழு தடவை சுருக்குக் கொடுத்து எடுத்துக் கரி யோட்டில் வைத்து ஊத வயது ஏழரை யாகும் அதைச் செந்தூர மாக்கிக் காலை மாலை இரண்டு வேளையும் எட்டு நாள்சாப்பிடக் காயசித்தியாகும்.

## களக்காடு மதிசீல மகா முனிவர் ஆச்சிரமம்.

## 58. சத்தவேதிக் கல்லின் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் குடைக்காரன் கல்லுக்கு நேர் வடக்காகப் போகிற பாதையில் இரண்டு நாழிகை வழி தூரம்போனால் பாதையிரண்டாகப் பிரியும் அதில் மேற்கே போகிற பாதைபோனால் மேல் மலையாளத்திற் கொண்டுபோய் விடும் ஆகையால் மேற்கே போகிற பாதையிற் போகாமல் வடக்கே போகிற பாதைவழியில் ஒரு நாழிகை வழிதூரம் போனால் களக்காடு மலையிற் கொண்டு வந்து விடும் அந்த மலையிலிருந்து கிழக்கு முகமாகப் பார்த்தால் களக்காட்

ரேர் தெரியும் அதைப் பார்த்துக்கொண்டு அம்பிடு தூரம் போனால் அனேக மரஞ் செடிகள் சூழ்ந்த, பெரிய வனமிருக்கிறது அவ் வனத்திற்குள் வடபக்கம் காட்டுமலைக் கானலிருக்கிறது அந்தக் கானலில் மதிசில மகாமுனிவர் ஆச்சிரம மிருக்கிறது அந்த ஆச்சிரமத்திற்குப் பக்கத்தில் சத்தவேதிக் கல்லுகளிருக்கிறது அந்தக்கல்லுகளின் அடையாளம் உரித்த தேங்காய்ப் பிரமாணங் கருப்பாயிருக்கும் அந்தக்கல்லை யெடுத்துக் காடாக்கினியாக நெருப்பில் மூன்று நாள் வேகவைத்துத் தண்ணீர் விட்டால் அந்தக் கல்லு நாலைந்து துண்டாக உடையும் அதைக் கல்வத்தி லிட்டரைக்க மாவாகும் அதை யெடுத்து அமுரிவிட்டரைத்து லோகங்களுக்குக் கவசஞ்செய்து புடமிடக் களிம்பற்றுப்போம் அப்படிக் களிம்பற்றுப்போன செம்புடன் சரிக்குச் சரிதாய் சேர்த் துருக்க ஏழு வயதாகும்.

( இது வரையிலும் களக்காடு மலை எல்லை. )

## பாவநாச எல்லை தீர்த்தமலை அகத்திய ராச்சிரமம்.

## 59. தும்புலா மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் காட்டுமலைக் கானலுக்கு வடகிழக்குப் பக்கம் போகிற பாதையில் மூன்று நாழிகை வழி தூரம் போனால் அங்கே தீர்த்தமலை வானமளாவி யிருக்கிறது அந்த மலைமேல் ஐந்து அருவிகள் விழுகிறது அந்த மலைமேலேறி அருவி விழுவதைப் பார்ப்பதற்கு எவ்விதமான பாதைகளு மில்லை அருவியைப் போய்ப் பார்க்கவு முடியாது அந்த அருவியில் ஓரருவி வானதீர்த்த மென்று விழுகிறது அந்த வான தீர்த்தத்திற்குப் பக்கத்தில் சொரிமுத்தய்யன் கோவிலிருக்கிறது அந்தக் கோவி லோரம் நீலகண்ட கச மிருக்கிறது அதில் ஆளிறங்கினால் உள்ளேயிழுத்துக் கொண்டு போய் விடுமாகையால் அதைக் கடந்து கீழே வருகிற பாதைவழி வந்தால் கலியாணி தீர்த்தமிருக்கிறது அதைக் கடந்து அரை நாழிகை வழி தூரம் வந்தால் அகஸ்தியர் ஆச்சிரமமும் அவர் யாகஞ்செய்த யாககுண்டம் நான்குமிருக்கிறது அந்த யாககுண்டத்தின் பக்கம் அகத்தியர் தீர்த்தம் வந்து விழுகிறது அந்தத் தீர்த்தத்தை விட்டு வட பக்கம் கூப்பிடு தூரம் வந்தால் அகத்தியர் ஆச்சிரமம் மிருக்கிறது அதைக்கண்டு தெரிசித்துக் கொண்டு வடபக்கம் போகிற பாதை வழியே வந்தால் பாவநாசர் கோவில் இருக்கிறது அந்தக் கோவி

லுக்கு முன்பாக பாவ விநாச நதி யொன்று வருகிறது அந்த நதியில் தீர்த்தமாடினல் முற்காலத்தில் செய்த பாவங்கள் யாவும் விமோசன மாகும் அந்த நதியில் அகஸ்தியர் யாககுண்டத்தி லிருந்து பிறந்த கெண்டைவ மீன்கள் துடைப் பரும னிருக் கிறது அந்த மீனை யாரும் பிடித்துச் சாப்பிடக் கூடாது சாப்பிட்டால் கண் தெரியாமல் போகக்கடவ தென்று சாப மிட்டிருக்கிரு ராகையால் அந்த மீனை யாவரும் பிடித்து சாப்பிடுவ தில்லை அந்த மீனே ஆற்றுப் படித்துறைக் கல்லின் மீது வந்து படுத் துக்கொள்ளும் துள்ளி விளையாடும் மானிடர்கள் கையில் அகப்படும் சோறு, அவல், கடலை முதலான பதார்த்தங்களை கையில் வைத்து மீன் முன்னலே காட்டினல் கையிலிருக்கிற பதார்த்தங்களை வாயினல் வாங்கிக் கொள்ளும் அந்த நதியில் எவ்வளவு தண்ணீ வந்தாலும் அந்த மீன்கள் படித்துறையை விட்டு மறுபக்கம் போகாது இப்படி ஆயிரக்கணக்கான மீன்களிருக்கிறது இதனைப்பார்த்துக் கொண்டு பாவ நாசர் கோவிலிலிருந்து தென் பக்கம் வந்தவழியே மூன்று நாழிகை வழி தூரம் போய் ஐந்தருவி தீர்த்தத்தைக்கண்டு அங்கிருந்து வடமேல் பக்கம் பாதை வழியாய் நாலு நாழிகை வழி தூரம் போனல் அங்கே வராகிமலை யொன்றிருக்கிறது அந்த மலையின் அடி வாரத்தில் செம்மண் தரையில் தும்புலா மரமிருக்கிறது அந்த மரம் சேங்கொட்டைமரம் போல் இலை முதலான திருக்கும் அதன் பட்டை யை வெட்டினல் பால் வடியும் அந்தப்பாலை பீங்கானில் பிடித்துச் சூதத்தை விட்டு வெயிலில் வைக்க வெண்ணெய் போலாகும் அதைச் செந்தூரஞ் செய்து சாப்பிடக் காயசித்தி யாகும் நரை திரை மாறும்.

☞ சதுரகிரிப் புராணத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக் கிறது பார்த்துக் கொள்ளவும்.

## பாவநாசம் தீர்த்தமலை கம்பளிநாதர் ஆச்சிரமம்

## 60. கட்டாமணக்கு மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த வராகிமலைக்கு தென் பக்கம் [illegible]கிற பாதை வழியில் அரை நாழிகை வழி தூரம் போனல் [illegible]ங்கே அனேக மரஞ்செடிகளடர்ந்த வனத்தின் மேல் பக்கம் கம்பளி [illegible]தர் ஆச்சிரம மிருக்கிறது அவரைக்கண்டு தெரிசித்து அதன் வட [illegible]க்கம் கூப்பிடுதூரம் போனல் அங்கே உதகச் சுனையிருக்கிறது அந்த

உதகச் சுனையில் ஒரு மனிதன் நீரருந்தி கல்லாய்க் கிடக்கிறான் அதைப் பார்த்துக்கொண்டு அதன் மேல் பக்கம் வருகிற பாதை, வழியில் கூப்பிடுதூரம் போனால் அங்கே குண்டாறு வருகிறது அந்த ஆற்றைக் கடந்து வடபக்கம் ஒரு நாழிகை வழி தூரம் வந்தால் அங்கே மண் கண்டமான யிடத்தில் காட்டாமணக்கு மரங்களிருக்கிறது அதன் கொம்புகளை முனியில் ஒடித்து விட்டால் பால் வடியும் அந்தப் பாலைக் கோப்பையில் பிடித்து வீரத்தைப் போட்டுப் பிசரி வெய்யிலில் வைக்க வெண்ணெய் போலாகும் அந்த வெண்ணெய்யைக் குகைக்குள் வைத்து மணல் மறைவுப் புடம்போடப் பற்பமாகும் அப் பற்பத்தை வெண்ணெய்யில் சாப்பிடத் தேக சித்தி யாகும் யானைப்பெல முண்டாகும் நரை திரை மாறும்.

☞ உரோம ரிஷி 500 யென்னும் சாஸ்திரத்தில் இதன் விபரங்களைச் கூறியிருக்கிறார் பார்த்துக்கொள்ளவும்.

## பாவ நாசம் தீர்த்தமலை புலஸ்தியர் ஆச்சிரமம்.

## 61. அருநெல்லிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த வராகி மலைக்கு வட பக்கம் போகிற பாதை வழியே நாலு நாழிகை வழி தூரம் போனால் அங்கே புலஸ்தியர் ஆச்சிரமமிருக்கிறது அதற்கு மேல் பக்கம் வருகிற காட்டாறுக்குக் கீழ் பக்கமாய் அருநெல்லி மரமிருக்கிறது அது நெல்லி மரத்தைப் போல் பெரிதாயும் காய் எலுமிச்சம் பழம் அளவுள்ளதாயுமிருக்கும் வாயிலிட்டுப் பார்க்கத் துவர்ப்பும் இனிப்புமாயும் சிறு கொட்டையாயு மிருக்கும் அக்கனியை இடித்து ஒரு படி சாறு பிழிந்து எடுத்து அதில் சூதத்தை விட்டு அடுப்பில் வைத்துச் சாறு வற்றுகிற வரை எரித்துப் பார்க்க ரசம் வெண்ணெய் போலாகும் அதைக் குப்பிக்குள் போட்டு மணலுக்குள் புதைத்துக் குப்பி வாய்க்குப் பழுப்புக்கல்லால் மூடி போட்டு இருபது எருவில் புடமிடக் குப்பி வாய்க்குள் செந்தூரம் வந்து நிற்கும் அந்தச் செந்தூரத்தை அரிசி யிடை காலை மாலை 12 நாள் தேனிற் குழப்பிச் சாப்பிடக் காயசித்தியாகும் நரை திரை மாறும் யானைப்பெலனுண்டாகும்.

☞ யாகோபு சிந்தாமணி 700 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## பாவநாச மலை திரிகாலக்கியான முனிவர் ஆச்சிரமம்

### 62. திரிவேதி உதகக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் காட்டாறுக்கு வடபக்க மாய்ப் போகிற பாதை வழியாக நாலு நாழிகை வழிதூரம் போனால் அங்கொரு குட்டமிருக்கிறது அந்தக் குட்டத்திற்கு வடபக்கம் திரி காலக்கியான முனிவர் ஆச்சிரம மிருக்கிறது அதற்கு மேல்புரம் யானை படுத்தது போல் இரண்டு கல்லுகளிருக்கிறது அந்த இரண்டு கல்லுக்கு மத்தியில் இரண்டடி அகலத்தில் திரிவேதி உதகச் சுனை யிருக்கிறது இதன் பெருமைகளை இதற்கு முன் 8-வது நிம்பரில் சொல்லி யிருக்கி றது பார்த்துக்கொள்ளவும் அந்தயானைக் கல்லுகளுக்கு வடமேற்காகப் போகிற பாதையில் அரை நாழிகை தூரம் போனால் பாவநாச மலையுங் குற்றால மலையுங் கூடுகிற இடத்தில் கொஞ்சஞ் சருவலாக யிருக்கிற வழியாகக் குற்றால மலைமீது ஏறினால் அம் மலை மேல்மொட்டையில் கொண்டு போய் விடும் அந்த மொட்டை மீதுள்ள பாதை வழியாக நாலு நாழிகை வழிதூரம் போனால் அருவி மலை யிருக்கிறது அதற்குத் தென்பக்கம் போகாமல் வடபக்கம் போகிற பாதை வழியே போனால் குற்றாலமலை மேற்சருவிற்குக் கொண்டு போய் விடும்.

☞ சட்டமுனி வாத காவியம் 1000 யென்னும் சாஸ்திரத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

( இது வரையிலும் பாவநாச மலை எல்லை )

## குற்றாலம் அருவிமலை அருட்சித்தர் ஆச்சிரமம்

### 63. ஆச்சாமரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த அருவிமலைச் சருவின் வழியாகக் கூப்பிடு தூரம் போனால் அங்கொரு பெரிய மலை யிருக்கிறது அந்த மலையின் கீழ் பக்கமாய்த் தேனருவித் தீர்த்த மிருக்கிறது அதில் தீர்த்தமாடினால் பாவங்கள் யாவுந்தீரும் அத் தீர்த்தத்திற்கு மேல் பக் கம் அம்பிடு தூரத்தில் ஆச்சாமர மிருக்கிறது அதன் தூர் பெரிதாயும் வெண்மையாயும் இலை இரண்டு விரலகலமு மிருக்கும் அம்மரத்தைத் தட்டினால் பால் வடியும் அப்பாலைப் பிடித்துத் துருசுக் கட்டிக்கு 10 தடவை சுருக்குக் கொடுக்க வெண்மையாகும் அந்தத் துருசுக் கட்டி யைச் செந்தூரஞ் செய்து சாப்பிடக் காயசித்தியாகி நரை திரை மாறும் அந்தத் தேனருவித் தீர்த்தத்திற்குக் கீழே கூப்பிடு தூரத்தில்

செம்பாநதித் தீர்த்தம் விழுகிறது அந்தத் தீர்த்தத்திற்குப் பக்கத்தி லிருக்கும் செம்பாதேவியைத் தெரிசித்துக் கீழேயிறங்கினால் குற்றால நாதர் கோவில் தெரியும் அவ்வழியாய் வந்தால் குற்றால நாதர் சன்னதி யிருக்கிறது அச் சன்னதிக்குத் தென் பக்கம் மலையிலிருந்து எந்தக் காலமும் அருவி விழுந்து கொண்டே யிருக்கும் அதில் தீர்த்த மாடினால் சகல பாவமுந் தீரும் அதன் பக்கத்தில் யானைக் கச மிருக் கிறது அதிலிறங்கினால் உள்ளே யிழுத்துக் கொள்ளு மாகையால் அதிலிறங்காமல் கோவிலுக்கு வந்து சுவாமி தெரிசனை செய்து கொண்டு கோவிலை விட்டு மேல் பக்கம் போகிற பாதை வழியாக மலையேறித் தேனருவிக்குப் போய் ஆங்கிருந்து வட பக்கம் பாதை வழி கூப்பிடுதூரம் வந்தால் அங்கே குண்டு மலையும் அருட்சித்தர் ஆச் சிரமமு மிருக்கிறது அதைத் தெரிசித்துக் கொண்டு மேல் பக்கமாய்ப் போகிற பாதை வழியாகப் போக வேண்டும்.

## குற்றாலம் அருவிமலை கெவுன குளிகைச் சித்தர் ஆச்சிரமம் 64. சரளத் தேவதாருக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் குண்டுமலையும் அருட் சித்தர் குகையும் பார்த்து அதன் வட பக்கம் போகிற பாதை வழியாக நாலு நாழிகை வழி தூரம் வந்தால் மேற்காக ஒரு பாதையும் வடக்காக ஒரு பாதையும் போகிறது அதில் மேற்காகப் போகிற பாதைவழி போனால் மேல் மலையாளத்திற்குப் போகும் ஆகையால் அந்தப் பாதை யில் போகாமல் வட பக்கம் போகிற பாதை வழி போனால் அங் கொரு பெரிய காவு இருக்கிறது அதற்குள் வட பக்கம் கெவுன குளி கைச் சித்தர் குகை யொன்றிருக்கிறது அக் குகைக்கு வட பக்கம் அம்பிடு தூரத்தில் சரளத் தேவதாரு மர மிருக்கிறது அதன் தூர் வெண்மையாயும் தேவ தாரு யிலை போலும் மரம் பெரிதாயும் புஷ்பம் வாசனையாயு மிருக்கும் அதன் இலையை யரைத்துச் சாறெ டுத்து வெள்ளைப் பாஷாணத்திற்குப் பத்து தடவை சுருக்குக் கொடுத்து அரைத்து வில்லை தட்டிக் காயப்போட்டு இருபது எருவில் புட மிடப் பற்பமாகும் இந்தப் பற்பத்தைத் தேனிற் குளப்பி எட்டு நாள் சாப்பிடக் காயசித்தி யுண்டாகும் நரை திரை மாறும்.

☞ சதுரகிரிப் புராணத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக் கிறது பார்த்துக் கொள்ளவும்.

( இது வரையிலும் குற்றாலம் அருவிமலை எல்கை )

## குற்றாலம் செங்கோட்டை மலை யெல்லை இராஜ ரிஷி ஆச்சிரமம் 65. சோதி விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தச் சித்தர் குகைக்கு வட பக்கம் இரண்டு நாழிகை வழி தூரம் போனால் செங்கோட்டை மலை யிருக்கிறது அந்த மலைக்கு வடக்கே வருகிற பாதையில் ஒரு நாழிகை வழி தூரம் வந்தால் அங்கே யிருக்கும் பெரிய வனத்திற்குள் இராஜ ரிஷி யாச்சிரமமிருக்கிறது அதற்குத் தென் பக்கம் வருகிற குண்டாற்றின் சமீபத்தில் சோதி விருட்சமிருக்கிறது அதன் தூர் பெரிதாயும் இலை வட்டமாயும் புஷ்பம் மத்தம் பூவைப்போற் சிறிதாயும் காய் கொன்றைக்காய் போலு மிருக்கும் அந்த மரத்தை வெட்டினால் பால் வரும் இரவில் சந்திர னில்லாத காலத்தில் மின்மினிப் பூச்சிகள் ஒட்டி யிருப்பது போல் சோதி மயமாய்த் தோற்றும் அந்த மரத்தினடியில் நின்று ஓம் நம சிவா வென்று 108 உருச்செபித்துக் கன்னிநூல் காப்புக்கட்டிப் பச்சரிசிப்பொங்கல் வைத்துத் தேங்காய்பழம் உடைத்துத் தீப தூபங் கொடுத்து மரத்தின் மேற்பரணியைச் சீவிவிட்டுப் பட்டையை வெட்டிக் குளித்தைல மிறக்கி அதை இரும்புப் பாத்திரத்தில் விட்டுக் காய்ச்சிச் சிவந்த பதத்தி லிறக்கி மண் பாண்டத்தில் விட்டு வேடுகட்டி நெல்லுக்குள் ளெட்டு நாள் புதைத்து வைத்தெடுத்துக் காலை யொரு களஞ்சி யிடையும் மறுநாள் இரண்டு களஞ்சி யிடையும் மூன்று நாள் மூன்று களஞ்சி யிடையும் நாலா நாள் நாலு களஞ்சி யிடையுமாகச் சாப்பிட்டால் மூர்ச்சை யுண்டாகும் மூர்ச்சை யுண்டான வுடன் படுக்க வைத்து இரண்டு கால் பெரு விரலையும் துணியினால் கட்டி கையிரண்டையும் இரண்டு பக்கத்தில் போட்டு வாழைப்பழமும் நெய்யும் பிசைந்து ஊட்டிப் பாலை வாயில் ஒழுக்கிக்கொண்டே வர ஏழா நாள் மயக்கம் நீங்கிக் கண் விழித்துப் பார்க்கலாம் அப்போது பனங் கருப்பட்டியைப் போட்டுப் பசும் பால் காய்ச்சிக் கொடுக்கவும் பின்பு பச்சரிசியும் பாசிப் பயறும் சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டு வரச் சரீரம் சோதிப் பிரகாச முண்டாகும் இவன் மல சலம் பேதிக்கும் (மற்றொரு விதம்) இந்த விருட்சத்தின் பாலைத் துணியில் நனைத்துக் காயவைத்துத் திரித்து ஒரு அகலில் நெய் யூற்றித் தீபமேற்றிப் புத் தோட்டில் மைபற்ற வைத்து அந்த மையை யெடுத்துச் சிமிளில் வைத்துப் பஞ்ச லோகங்களில் மையைத் தடவிப் புடமிடப் பழுத்துப் பத்து வயதாகும்.

☞ ஞான சாஸ்திரத்திரட்டு 9 வது பாகத்தில் சுந்தரானந்தர் குரு நூல் 110 யென்னும் சாஸ்திரத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது

## குற்றாலம் செங்கோட்டைமலை வசந்தமா முனிவர் ஆச்சிரமம் 66. கருவாழைப் பழக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் குண்டாறுக்கு வட பக்கமிருக்கிற குகை வாசல் முன்பாகத் தென் பக்கம் போகிற பாதையில் மூன்று நாழிகை வழிதூரம் வந்தால் யானைக் கெசமிருக்கிறது அந்தக் கெசத்தி விறங்கிடாமல் கிழக்காகப் போகிற பாதை வழியே வந்தால் அம்பிடு தூரத்தில் வசந்தமா முனி யாச்சிரம மிருக்கிறது அந்த ஆச்சிரமத்திற்குத் தென் பக்கம் சமதளமா யிருக்கிற செம்மண் தரையில் கருவாழை மரங்கள் ஏராளமா யிருக்கிறது அதின் பழ மட்டுங் கருப்பா யிருக்கும் தோலை யுரித்துப் பார்த்தால் பழம் அழுக்கு நிறமாயிருக்கும் ஷை பழத்தைப் பிசைந்து வீரச் சுண்ணம் வைத்து எலுமிச்சம் பழப் பிரமாணம் காலை மாலை ஒரு வாரம் சாப்பிட்டு வந்தால் சரீரமிறுகித் தேகசித்தி யாகும் நரை திரை மாறும்.

☞ போகர் கற்பம் 300 யென்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறார் பார்த்துக் கோள்ளவும்.

## குற்றாலம் செங்கோட்டைமலை போதமுனிவ ராச்சிரமம் 67. கரு வூமத்தைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தச் செம்மண் தரைக்கு வடமேற்காக வருகிற பாதையிலிருக்கும் கருங் கானலுக்குள் போதமா முனிவர் ஆச்சிரமமிருக்கிறது அதன் வடபுரம் எல்லைக்கல் குட்ட மிருக்கிறது அக் குட்டத்திற்கு வடபக்கம் வருகிற பாதையில் அரை நாழிகை தூரத்தில் தண்ணீர்ச் சதம்புத் தரை யிருக்கிறது அவ்விடத்தில் கரு வூமத்தைச் செடிகள் நாலுமுள உயரம் வரை வளர்ந்து ஊமத்தைச் செடிபோலிருக்கும் அதன் தண்டு, பூ, காய் கருப்பாயிருக்கும் அதில்பெரிய காயொன்றைப் பிடுங்கி அதற்குள் ரசம் ஒரு பலம் விட்டு வெய்யலில் காய வைத்து ஏழு சீலைமண் செய்து ஐங் தெருவில் புட மிட்டுப் பார்க்க மணியா யிருக்கும் அதை யெடுத்து வாயிலடக்கிக் கொள்ளக் கெவுன குளிகையாகும் அஷ்டாங்க யோகமுஞ்சித்தியாகும்.

☞ திருமூலர் கருக்கடை 600 யேன்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

( இதுவரையிலும் குற்றாலம் செங்கோட்டை மலை யெல்லை. )

## சுரண்டை மதிமான்மலை காங்கேய ரிஷி ஆச்சிரமம். 68. மலையாளி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் குண்டாறுக்குக் கீழ் பக்கம் போகிற பாதை வழியில் ஒன்றேகால் நாழிகை வழிதூரம் போனால் அங்கொரு மதிமான் மலையிருக்கிறது அம் மலைக்கு வட பக்கம் போகிற ஓடைக்கு வடக்கே போகிற பாதையில் அரை நாழிகை தூரத்திலிருக்கும் பெரிய காவுக்குள் காங்கேய ரிஷி யாச்சிரமமிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்கு மேல் பக்கம் போகிற பாதை வழி போய் அப்பால் வடபக்கம் போகிற பாதையில் அரை நாழிகை தூரம் போனால் அங்கே சதம்புத் தரையில் மலை யரளி மர மிருக்கிறது அம் மரத்தின் தூர் சிறிதாயும் இலை மாவிலைபோலும் பூ கொஞ்சம் வெண்மையாய் மஞ்சட் பூத்தது போலிருக்கும் இதன் யிலைச் சாற்றால் கெந்தகத்தை அரைத்து வில்லை தட்டிக் காய்ந்த பின் குகைக்குள் வைத்து மணல் மறைவுப் புடமிடப் பற்பமாகும் அந்தப் பற்பத்தை நெய்யில் குளப்பிச் சாப்பிடக் காயசித்தி யாகும்.

☞ கருவூரார் வாதகாவியம் 700 ல் இதன் வியரங்களைக் கூறி யிருக்கிறார் பார்த்துக் கொள்ளவும்.

## சுரண்டை மதிமான் மலை காஞ்சன முனிவர் ஆச்சிரமம். 69. பஞ்சவேதி உதகக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தச் சதம்புத் தரைக்கு வட கீழ்ப்பக்கம் வருகிற பாதையில் ஒரு நாழிகை தூரம் வந்தால் சுரண்டையூர் தெரியும் அதைப் பார்த்துக் கொண்டு அங்கொரு கருமலை யிருக்கிறது அதன் வட பக்கம் காஞ்சன முனிவர் ஆச்சிரம மிருக்கிறது அதற்குத் தென் பக்கம் வருகிற பாதையில் அம்பிடு தூரம் வந்தால் மலையோரத்தில் கேணி போல் பஞ்ச வேதி உதக மிருக்கிறது அதின் குணங்களை முன் 9வது நிம்பரில் உதகம் யெடுக்கு முறையையும் அதைச் சாப்பிடு முறையையுஞ் சொல்லியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும் இந்தப் பஞ்சவேதி உதகத்திற்கு வட பக்கம் வருகிற பாதை வழியாக வந்தால் பப்பரப்புளிய மரம் இருக்கிறது அப் புளிய மரத்தோரம் வட கிழக்காக வருகிற பாதையின் வழியாக வந்தால் கோமுக நதியொன்று வருகிறது அதைக் கடந்து ஒரு நாழிகை தூரம் வந்தால் புலி மலை யென்றொரு மலை யுண்டு அந்த மலைக்குக் கிழக்கே போகிற பாதை வழியாக வந்தால் குண்டாறு வருகிறது அதனோரம் பெரிய

குகை யிருக்கிறது அந்தக் குகையைக் கண்டு தெரிசித்து அதற்கு வட மேற்காகப் போகிற பாதை வழியே அம்பிடு தூரம் வந்தால் பெரிய வன மிருக்கிறது அதனைப் பார்த்துக்கொள்ளவும்.

## சுரண்டை மதிமான் மலை ஞான சமாதிச் சித்தர்

## 70. சோம விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தப் பெரிய வனத்திற்கு வட பக்கம் வருகிற பாதையில் ஒரு நாழிகை தூரம் வந்தால் திட்டாக ஒரு மலையிருக்கிறது அம் மலை மேலே வந்தால் சமாதிச் சித்தர் குகை யிருக்கிறது அந்தக் குகைக்கு நேர் கிழக்காகச் சோம விருட்ச மிருக் கிறது அதன் தூர் சிவப்பாயும் இலை கத்திபோல் சிறிதாயும் காய் பவள நிறமாய் ஆலங்காய் போலிருக்கும் அந்த மரத்தைக் கல்லால் தட்டினால் பால் வரும் அதனைக் கோப்பையில் பிடித்து அதில் ரசத் தைக் களஞ்சி ஊற்றி மூன்று நாள் வைத்தால் வெண்ணெய் போலா கும் அந்த வெண்ணெயில் சணவேதி உதகத்தை ஊற்றி வெய்யலில் வைத்தால் கட்டியாகும் அந்தக் கட்டியைச் செம்பில் நாலுக்கொன்று கொடுக்கப் பத்து வயதாகும். அந்தச் செம்பைப் பற்பஞ்செய்து சாப் பிடக் காயசித்தியாகும் நரை திரை மாறும் யானைப் பெலமுண்டாகும்.

☞ ஞானசாஸ்திரத் திரட்டு 8 வது பாகம் சட்டமுனி கற்பவிதி 101 என்னும் சாஸ்திரத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது

( இது வரையிலும் சுரண்டை மதிமான் மலை எல்லை. )

## புளியங்குடி மதிமான் மலை சாந்த மகா ரிஷி ஆச்சிரமம்

## 71. எட்டிமரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் குகையிருக்கிற இடத்திற்கு வட மேற்கு மூலை வழியாக ஒரு நாழிகை வழி தூரத்தில் தெற்கு வடக்காக வருகிற ஆற்று வழியாய் வட பக்கமாய் வந்தால் பெரிய காவுக்குள் மேல் பக்கத்தில் சாந்த மகாரிஷி ஆச்சிரம மிருக்கிறது அதற்கு மேல் பக்கம் ஒரு மண் மேடிருக்கிறது அந்த மேட்டின் மேலிருந்து பார்த்தால் புளியங்குடி தெரியும் அதைப் பார்த்துக் கொண்டு அந்த மேட்டை விட்டுக் கீழிறங்கினால் பள்ளத்தில் எட்டி மரம் இருக்கிறது அம் மரத்தூர் பெரிதாயும் இலை எட்டியிலை போலும் பழம் பெரிதாயும் சிவப்பாயும் மஞ்சள் நிறமாயு மிருக்கும் அதன் கொட்டையை யெடுத்துப் பொடியாய் நறுக்கிப் பாலிலூறப் போட்டு யெடுத்துக் காயவைத்து முதல் நாள் கடுகு வீதமும் மரு நாளிரண்டு

பங்கும் மூன்றுநாள் மூன்று பங்குமாக இருபது நாளைக்குச் சாப்பிட்டு வரத் தேக சித்தியாகும் யானைப் பெலமுண்டாகும்.

☞ திருமூலர் கருக்கடை 600 யென்னும் சாஸ்திரத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## புளியங்குடி மதிமான்மலை வாசியோகச் சித்தர் ஆச்சிரமம் 72. வெள்ளெருக்கு மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த மேட்டுக்கும் எட்டி மரத்திற்கும் வடமேற்காக வருகிற வழியில் இரண்டு நாழிகை தூரம் வந்தால் வட்டப்பாறை யிருக்கிறது அதில் நின்று பார்த்தால் ஊர்கள் தெரியும் அதைப் பார்த்துக் கொண்டு வடக்கே போகிற பாதையில் போனால் வாசி யேகாச் சித்தர் குகை யிருக்கிறது அதற்குள் அனேக சித்தர்கள் வாசஞ் செய்வார்கள் அந்தக் குகையோரம் இரவு இருந்தால் சங்குநாதச் சத்தங் கேட்கும் அந்தக் குகைக்கு எதிராக வெள்ளெருக்கு மரமிருக்கிறது அதன் மரத்தூர் பெரிதாயும் இலை எருக்கிலை யிலைபோலும் பஷ்பம் வெண்மையாயு மிருக்கும் இதன் மேல் கொப்புகளைத் தட்டினால் பால் வடியும் அந்தப் பாலைச் சிரட்டையில் பிடித்துத் துத்தத்தைப் போட்டு வெய்யலில் வைக்கப் பச்சை யில்லாமல் வெழுத்துப்போகும் அதை யெடுத்துக் குகைக்குள் வைத்துச் சீலை மண் செய்து பத்தெருவில் புட மிடச் சுண்ணமாகும் அந்தச் சுண்ணத்தை அரிசி யிடை தேனிற் கொள்ளக் காய சித்தியாகும் நரை திரை மாறும் யானைப் பெல முண்டாகும்.

☞ கருவூரார் வாத காவியம் 700 என்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

( இது வரையிலும் புளியங்குடி மதிமான் மலை எல்லை )

## வாசுதேவநல்லூர் கண்ணுற்று மலை வாத சாந்த மகா ரிஷி வனம் 73. சிவந்த கீழ்காய் நெல்லிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்தக் குகைக்கு வட பக்கம் போகிற பாதையில் இரண்டு நாழிகை தூரம் போனால் கசிவுத்தரை யிருக்கிறது அந்தக் கசிவுத் தரைக்கு மேல் பக்கமாகப் போகிற பாதையில் போனால் அங்கே மனிதன் நிற்பது போல் ஒரு கல்லிருக்கிறது அந்தக் கல்லோரம் தசவேதி உதகச் சுனை யிருக்கிறது அந்தச் சுனைக்கு வடபக்கம் கூப்பிடு தூரத்தில் பெரிய வனத்திற்குள் வாத சாந்த மகா ரிஷி ஆச்

சிரமமிருக்கிறது அதற்குத் தென்பக்கம் சிவந்த கீழ்க்காய்நெல்லிச் செடிகளிருக்கிறது அந்தச் செடி இரண்டு முழ உயரமும் கீழ்க்காய் நெல்லி இலை போலும் காய் பெரிதாயும் செடியும் புஷ்பமுஞ் சிவப்பாயுமிருக்கும் அந்த இலையும் பூவும் சிறு புள்ளடி இலையும் செங்கழுநீரிலை மூன்றுஞ் சமமெடுத்து வீசம்படி சாறு பிழிந்து கெந்தகத்திற்குச் சாறு தீரும் வரை விட்டரைத்து அப்பால் உதகநீர் விட்டரைத்துச் சுண்டைக்காய்ப் பிரமாணம் உருட்டி உலர்த்தி மண் குகையிலிட்டு உருக்கக் குளிகையாகும் அந்தக் குளிகையை வாயிலிட்டிருக்கக் கெவுன மாகும்.

☞ ஞான சாஸ்திரத் திரட்டு 9 வது பாகத்திலுள்ள கருவூரார் குருநூல் சூத்திரம் 150 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது

## வாசுதேவ நல்லூர் கண்ணுற்று மலை காலாட்டிச் சித்தர் வனம். 74. குங்கிலிய மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த வனத்திற்கு மேல் பக்கமாக வடக்கே போகிற பாதை வழியாக வந்தால் குமரிமலை யென்றொரு மலை யிருக்கிறது அதற்கு வட கிழக்காக வருகிற பாதையில் நாலு நாழிகை வழி தூரத்தில் ஒரு மண் திட்டிருக்கிறது அந்தத் திட்டில் நின்று பார்த்தால் வாசுதேவ நல்லூர் தெரியும் அங்கிருந்து வடக்கே போகிற பாதை வழியே போனால் அரை நாழிகை தூரத்தில் காலாட்டிச் சித்தர் குகை யிருக்கிறது அந்தக் குகைக்குத் தென் பக்கமுள்ள மயிலாடும் சோலைக்கு வட பக்கம் குங்கிலிய மர மிருக்கிறது அந்த மரத்தூர் பெரிதாயும் அநேக கிளைகளோடும் இலை இரண்டு விரல் அகலமாய் ஒரு விரல் நிகளத்தில் கத்திபோலு மிருக்கும் மரத்தை வெட்டினால் பால் வடியும் பால் உறைந்தால் வெள்ளைக் குங்கிலியமாகும் உறையாவிட்டால் குங்கிலியப் பாலாகவு மிருக்கும் இந்தப் பாலை ஒரு சிரட்டையில் பிடித்துச் சரிக்குச் சரி பசும்பால் விட்டுச் சாப்பிடக் காயசித்தி யாகும் யானைப் பெல முண்டாகும்.

☞ சதுரகிரி ஸ்தலப் புராணத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## வாசுதேவநல்லூர் கண்ணுற்று மலை சத்தரிஷி யாச்சிரமம் 75. தான்றிமரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே அந்த உதகச் சுனைக்குக் கீழ் பக்கமாகப் போகிற பாதையில் நாலு நாழிகை தூரம் போனால் அங்கே

அநேக மிருகங்கள் வசிக்குங் கண்ணுற்று மலை யிருக்கிறது. அம்மலைக்கு நேர் வடக்காக இருக்கும் மிருகப் பாதையிற் போகாமல் அதன் மேல் புறம் வடக்காகப் போகிற பாந்த வழியே போனால் குண்டாறு போகிறது அதற்கு வட பக்கம் போகிற பாதை வழியிலுள்ள பெருங் கானலுக்குள்ளிருக்கிற சத்த ரிசி யாச்சிரமத்திற்கு மேல் பக்கமாய்த் தான்றி மரங்களிருக்கிறது. அதன் தூர் பெரிதாயும், இலை யிரண்டு விரற்கடை யகலமாய் முனை நீண்டும், காய் கடுக்காய்ப் பிஞ்சு போலு மிருக்கும். அந்தக் காயைப் பிடுங்கி உரலிலிட்டு உதக நீர் விட்டிடித்து இரும்புப் பாத்திரத்தில் போட்டு வெய்யலில் வைத்து உண்டை செய்து எடுத்து வைத்துக் கொண்டு அந்த உண்டையைச் செம்பு உருக்கு முகத்திற் கொடுக்க ஆறு வயதாகும்.

☞ அகஸ்தியர் மாந்திரீக காவியம் 1000 த்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறார் பார்த்துக் கொள்ளவும்.

## வாசுதேவநல்லூர் கண்ணுற்று மலை தேவ மகா ரிசி ஆச்சிரமம். 76. காயாமரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தப் பெருங்கானலுக்கு மேல் பக்கம் போகிற பாதையில் நாலு நாழிகை தூரம் போனால் அங்கே உயர்ந்த மலை யிருக்கிறது. அதன்மேல் ஏறாமல் வட கிழக்காகப் போகிற பாதையில் நாலு நாழிகை தூரம் போனால் அங்கிருக்கும் வெள்ளைக் கற்பாறைக்குச் சமீபத்தில் தண்ணீர்ச் சுனை யிருக்கிறது. அந்தச் சுனைக்குள் செம்பு மட்டும் நுழையும். எவ்வளவு தண்ணீர் முகந்தாலும் வற்றாது. அதை எல்லோருஞ் சாப்பிடலாம். அந்தச் சுனைக்கு மேல் பக்கம் போகிற பாதையில் அம்பிடு தூரத்தி லிருக்குங் கருங்கானலுக்கு வட பக்கம் தேவ மகா ரிசி யாச்சிரம மிருக்கிறது. அதனோரத்திற் காயா மரங்களிருக்கிறது. அதன் தூர் பெரிதாயும், கருப்பாகவும், இலை வட்டமாக முனை நீண்டும், புஷ்பஞ் சிறிதாயு மிருக்கும் காய் காய்க்காது. ஆகையா லிதற்குக் காயாமர மென்று பெயருண்டாகின்று. இம் மரத் தூரின் மேற் பரணியைச் சீவி விட்டு அடிப்பட்டையை வெட்டி உதக நீர் விட்டிடித்து விசம்படி சாறெடுத்துப் பீங்கானில் விட்டுச் சூதமுங் கூட விட்டுப் புடமிடக் குளிகை யாகும் அதை வாயிலடக்கிக் கொள்ளத் தேக சித்தி யுண்டாகும்.

## வாசுதேவ நல்லூர் கண்ணூற்று மலை பற்ப மகா ரிசி ஆச்சிரமம் 77. சிவந்த தூது வேளைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கருங்கானலைக் கடந்து கூப்பிடு தூரம் வட கிழக்காகப் போனால் குளிர் கானலென்றொரு வன மிருக்கிறது. அவ்விடத்தில் சகிக்க முடியாத குளிர் காற்றடிக்கும் அதற்கு வட புறமுள்ள பெரிய வனத்திற்கு மேல் பக்கம் பற்ப மகா ரிசி யாச்சிரம மிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்கு மேல் பக்கம் போகும் பாதை வழி போனால் அங்கொரு மண் மலை யிருக்கிறது. அதனடி வாரத்தில் வட கிழக்கு மூலையில் சிவந்த தூதுவேளைச் செடிகள் படர்ந்திருக்கிறது. அந்தச் செடியானது தூதுவேளைச் செடி போற் சகலமு மிருந்தாலும் புஷ்பமும், காயும், சிவப்பாயும், பெரிதாயு மிருக்கும். அதைச் சமூலம் பிடுங்கி உதக நீர் விட்டிடித்துப் பிங்காணில் அரைக்காற்படி சாறு விட்டு அத்துடன் இரசமும் விட்டு வெய்யலில் வைக்கக் குளிகை யாகும். அதைப் புடமிட்டுச் செந்தூரமாக்கிச் சாப்பிட்டு வரக் காயசித்தியாகும் யானைப் பெல னுண்டாகும்.

☞ ஞானசாஸ்திரத் திரட்டு 8 வது பாகம் சட்டமுனி கற்பவிதி 101 என்னும் சாஸ்திரத்தில் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்

( இது வரையிலும் வாசுதேவநல்லூர் கண்ணூற்று மலை எல்லை. )

## சங்கரன்கோவில் பாதர் மலை நவநாதச் சித்தர் ஆச்சிரமம் 78. செங்கரிப்பான் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மண் மலையடிவார மிருந்து வட பக்கம் போகிற பாதையில் ஒரு நாழிகை தூரம் போய் அங்கிருக்கும் கூடற் பாறையின் மேலேறிப் பார்த்தால் சங்கரன் கோவிலுங் கோபுரமுந் தெரியும். அதைப் பார்த்துக்கொண்டு அப் பாறையின் வட பக்கம் போகிற பாதையில் வந்தால் குண்டாறு வருகிறது. அக் குண்டாற்றுக்கு மேல் பக்கம் போகிற பாதையில் நாலு நாழிகை தூரம் போனால் அங்கொரு கல் மலை யிருக்கிறது அதனோரமாயுள்ள குகையில் நவ நாதச் சித்தரும் இன்னும் அனேக சித்தர்களு மிருப்பார்கள். அதன் பக்கத்தில் இரு நாள் வேதி உதகச் சுனை யிருக்கிறது அதைப் பார்த்துக்கொண்டு நேரே வடக்குமுகமாகப் போகிற பாதை வழியாகப் போனால் அவிடத்தில் செங்கரிப்பான் செடிகளிருக்கிறது. அதைச் சமூலம் பிடுங்கி உதகநீரைக் கொஞ்சமாக விட்டிடித்து அரைக்

காற்படி சாறெடுத்து அதில் சமன் பசு நெய் விட்டுக் காய்ச்சிப் பத மாகப் பீங்கானில் வடித்து வைத்துக் கொண்டு காலையில் உண்ணுக்கில் தடவி வர அமுதங் கசிந்து வரும் அதைச்சாப்பிடக் காயசித்தியாகும்.

☞ ஞான சாஸ்திரத் திரட்டு 4 வது பாகத்திலுள்ள சூரியானந்தர் கற்ப ஞான சூத்திரம் 25 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது.

## சங்கரன்கோவில் பாதர் மலை அடவிச் சித்தர் ஆச்சிரமம்

## 79. வெள்ளை வேம்புமரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குகை வாசலுக்கு மேற்கே போகிற பாதை வழியே போனால் ஒரு நாழிகை தூரத்திற் கப்பால் அனேக மரஞ் செடிகளடர்ந்த பாதர் மலை வெகு உன்னதமாக வளர்ந் திருக்கும் அதன் வட பக்கம் அடவிச் சித்தர் குகை யிருக்கிறது அம் மலைக்குக் கீழே யுள்ள செவ்வல்த் தரையில் வெள்ளை வேம்பு மர மிருக்கிறது. இதற்குச் சர்க்கரை வேம் பென்றும் பெயருண்டு. அம் மரத்தூர் வெண்மையாயும், இலை பொன்னிறமாயும், காய்,பழம், வெண் மையாயு மிருக்கும் அந்த மரத்தூரில் வெட்டிவிட்டு ஒரு மாதங்கழித் துப் பார்த்தால் வெட்டின இடத்தில் பால் வடிந்து வெண்மையாய்க் கருவேலம் பிசின் போலிருக்கும் அதில் ஒரு பலம் பிசி னெடுத்துத் தூள் செய்து அரைக்காற் படி பாலிற் போட்டுக் கலக்கிச் சாப்பிடத் தேக சித்தியாகும் யானைப் பெல னுண்டாகும்.

☞ அகத்தியர் தத்துவம் 300 யென்னுஞ் சாத்திரத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்க்கவும்.

## சங்கரன்கோவில் பாதர்மலை நாதாந்தச் சித்தர் வனம்.

## 80. வன்னிமரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் செவ்வல்த்தரைக்கு வடக்கே போகிற பாதையில் இரண்டு நாளிகை தூரத்தில் கரும்பாறை யிருக் கிறது. அப் பாறைமேலேறிப் பார்த்தல் அங்குள்ள ஊர்கள் தெரி யும், அப் பாறையை விட்டுக் கீழிறங்கித் தென் மேற்கு மூலையில் ஒரு நாழிகை தூரம் போனால் கல்லூற்றிருக்கிறது. அதன் வட பக்கம் அம் பிடு தூரத்திலிருக்கும் பெரிய காவிற்கு மத்தியிலிருக்குந் திட்டோரத் தில் ஒருகுகை யிருக்கிறது. அதற்குள் நுளைந்தால் போவதற்கு இடங் கொடுக்கும் அங்கே நாதாந்தச் சித்தர் முதலான அநேக சித்தர்களிருப் பார்கள் அவர்களைத் தெரிசித்துக்கொள்ளவும். அந்தக்குகை முன்பாக

அநேக வன்னிமரங்க ளிருக்கிறது. அம்மரத்தூர் பெரிதாயும், கருப்பா யும், கடுக்காய் மரத்தி னிலை போலும், புட்பஞ் சிறிதாகவு மிருக்கும். அதன் இலையை உரலிலிட்டுக் கொஞ்சம் உதகநீர் விட்டிடித்து வீசம் படி சாறு வாங்கி லிங்கத்திற்குச் சுருக்குக் கொடுக்கக் கட்டும் அதைச் செந்தூரஞ் செய்து பத்து நாட் சாப்பிடக் காய சித்தியாகும்.

( இது வரையிலும் சங்கரனயினார் கோவில் பாதர் மலை எல்லை )

## ஊற்றுமலை திரிகூட பருவதம் சோதி ரிசி யாச்சிரமம்

## 81. மருதமரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குகைக்கு வட பக்கம் போகிற பாதை வழியே போனால் கூப்பிடு தூரத்தில் வயிரவன் கோவிலிருக் கிறது. அக் கோவிலுக்கு மேற்கே யிருக்கும் மண் மலைக்கு வட மேல் மூலையிற் போகிற பாதை வழியே போனால் ஒரு தண்ணீர்ச்சுனை யிருக் கிறது. அச் சுனைக்கு நேர் வடக்காக ஒரு நாழிகை தூரத்தில் திரிகூட மலையும் அதன் வடபக்கஞ் சோதி ரிசி ஆச்சிரமமு மிருக்கிறது. அதற்கு வடபக்கம் மருதமரங்க ளிருக்கிறது. அதன் தூர் பெரிதாயும், வெண்மையாயும், இலை யிரண்டு விரலகலமாயும் புஷ்பம் மொட்டாகவு மிருக்கும். அதின் மேற் பட்டையைச் சீவி விட்டு அடிப் பட்டையை எடுத்து உதக நீர் விட்டிடித்து அரைக்காற்படி சாறெடுத்து லிங்கக் கட்டிக்குச் சாறு பூருவுஞ் சுருக்குக் கொடுக்கக் கட்டிப்போகும் அதை யெடுத்துச் செந்தூரஞ் செய்து அரிசி இடை தேனிற் குளப் பிக் காலை மாலை பன்னிரண்டு நாட் சாப்பிட்டுவரக் காயசித்தியாகி யானைப் பெலனுண்டாகும்.

## ஊற்றுமலை திரிகூட பருவதம் பிரமானந்த ரிசி ஆச்சிரமம் 82. இரத்தப் பலாசுமரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! திரிகூட மலைக்கு வட கிழக்காகப் போகிற பாதையில் ஒரு நாழிகை வழி தூரத்திலிருக்கும் பஞ்சவர்ண மலைக்கு மேற்காக ஒரு சுனை யிருக்கிறது. அந்தச் சுனையில் எந்தக் காலமும் ஊற்றுப் பெருகித் தண்ணீர் கசிந்து கொண்டிருக்கும். அந் தச் சுனைக்கு வடபக்கமுள்ள மண் திட்டின் மேல் நின்று பார்த்தால் ஊற்றுமலை யென்ற ஊர் தெரியும். அதைக் கடந்து வடக்கே அரை நாழிகை தூரம் போனால் மரஞ் செடி யடர்ந்த வனத்தின் மத்தியில் பிரமானந்தர் ஆச்சிரம மிருக்கிறது. அதற்குத் தென் பக்கம் இரத்தப்

பலாசு மரங்களிருக்கிறது. அந்த மரத்தூர் பெரிதாயும், சிவப்பாகவு மிருக்கும். அதன் தூரில் வெட்டினால் பால் வரும். அப்பாலைச் சிரட்டையிற் பிடித்து வெய்யலில் வைத்து மூன்று நாட் சாப்பிட்டு வரக் காயசித்தி யாகுஞ் சட்டை களறும் தேகம் பொன்போலாகும்.

☞ போகர் கற்பம் 300 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொஸ்ளவும்.

( இதுவரையிலும் ஊற்றுமலை திரிகூட பருவத யெல்லை )

## சிவகிரி கெந்த பருவதம் அனுமாதிச் சித்தர் ஆச்சிரமம்

### 83. நீலகண்டி விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மண் திட்டு மலைக்கு வடபக்கம் வருகிற பாதையில் இரண்டு நாழிகை வழி தூரத்திலுள்ள மணிகட்டிக் குட்டத்திற்கு வட கிழக்காகப் போகிற பாதையிலிருந்து நாலுநாழிகை தூரத்தில் மிருகப் புடவிருக்கிறது. அந்தப் புடவைக் கழித்து ஒரு நாழிகை தூரத்தி லிருக்குங் கருங் கானலின் தென் பக்கம் அனுமாதிச் சித்தர் குகையிருக்கிறது. அக் குகைக்கு வட பக்கம் தூர் பெரிதாயும் "வெண்மைநிறமாயும்" இலைஇரண்டு விரலகலத்தில் முனை நீண்டதாயும், பஷ்பஞ் சிறிதாயும், வெண்மையாயும், சுகந்த வாசனையாகவு முள்ள நீலகண்டி மரமிருக்கிறது. அம்மரத்தின் புஷ்பத்தை யெடுத்து உதக நீர் விட்டிடித்துச் சாறெடுத்து வேளை யொன்றுக்கு அரை வீசம்படி சாப்பிடத் தேக சித்தியாகும். நரை திரை மாறும். பத்தியம் பாலுஞ் சோறுஞ் சாப்பிட்டுச் சரீரத்தில் காற்று, மழை, வெய்யல் படாமல் ஒரு மண்டல மிருக்கவேண்டியது.

☞ அகஸ்தியர் தத்துவம் 300 யென்னும் சாஸ்திரத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## சிவகிரி கெந்த பருவதம் செகராச ரிசி ஆச்சிரமம்

### 84. கீரி விருட்சக் கற்பம்

கேளுங்கள் முனிவர்ளே! அந்தக் கருங்கானலுக்கு மேல் பக்கமாய் வடக்கே போகிற பாதையில் இரண்டு நாழிகை வழி தூரத்தில் வருகிற காட்டாற்றைக் கடந்து வடமேற்காகப் போனால் ஆங்குள்ள வனதேவதை கோயிலுக்கு முன்பாகத் தண்ணீர்ச் சுனை யிருக்கிறது. அந்தச் சுனையில் மூன்று கையளவு தண்ணீர் அள்ளிச் சாப்பிடச் சரீரம் பொன்னிற மாகும். அந்தச் சுனையைக் கடந்து அம்பிடு தூரம் வந்தால்

குமரி குட்ட மிருக்கிறது அதில நின்று பார்த்தால் சிவகிரி யென்ற ஊர் தெரியும். அதை விட்டிறங்கி ஒரு நாழிகை வழிதூரம் வந்தால் செகராசரிசி யாச்சிரமமிருக்கிறது. அதற்கு வடக்கேயுள்ள கசிவுத் தரையில் கிரி விருட்சமிருக்கிறது. அம் மரம் பெரிதாயும், இலை ஒரு விரல் நீளத்தில் முனை நீண்ட தாயும் பச்சைநிறமாயு மிருக்கும். அம் மரத்தின் பட்டையை வெட்டி இடித்துச் சாறெடுத்து நிலைப்பனைக் கிழங்கும், உப்பிலி வேரும் சமனெடுத்து ஷை சாறு விட்டரைத்துப் பன்னிரெண்டு உண்டை செய்து நிழலுலர்த்தி வைத்துக்கொண்டு தினம் ஒரு உண்டையாக ஒரு மண்டலம் சாப்பிட்டு வரக் கொடிய எவ்விதமான விஷங் கடித்தாலும் விஷ மேறாது. பாம்புகளைக் கையில் பிடித்தாட்டலாம்.

( இது வரையிலும் சிவகிரி கெந்த பருவத எல்லை. )

## சேற்றூர் கெந்த பருவதம் நாதமுனி ஆச்சிரமம்

## 85. தேவதாரு விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குட்டத்தையுங் கசிவுத் தரையையுங் கடந்து சென்றால் அடுத்தாப் போற் சோலைமலையன் புத்தூர் மலை யிருக்கிறது. அம் மலையையுங் கடந்து வந்தால் வாசி மலை தோணும். அம் மலைக்குக் கீழ்பக்கஞ் சத்த கன்னியர்கள் நீராடுகிற நாழிக்கிணற் சுனைக்குத் தென் மேற்காக அடவிச் சித்தர் குகையிருக்கிறது. அதன் பக்கத்திலுள்ள பாதாளக் குகையில் நாதமுனிவர் வாசஞ் செய்கிறார். அதன் வட பக்கம் நாலு நாழிகை தூரத்திலுள்ள மரங்கள் சூழ்ந்த கானலுக்குள்ளிருக்கும் நாதமுனிவராச்சிரமத்திற்குப் பக்கத்தில் தேவதாரு மரமிருக்கிறது அதன் தூர் பெரிதாயும், இலை வட்டமாய்ச் சிறிதாயும், புஷ்பம் அழுக்கு நிறமாயும், வாசனையாயு மிருக்கும். அப் புஷ்பத்தை எடுத்துக் கார் எள்ளெண்ணை வீசம்படி விட்டு அதில் கரிச்சான் கண் விழியும் தொட்டாற் சிணுங்கி யிலையும் போட்டு அரைக்காற் படி காராம் பசுவின் பால் விட்டு வற்றக் காய்ச்சிக் காயவைத்துக் கல்வத்திலிட்டு அரைத்து அத்தோடு புனுகு, சவ்வாதுஞ் சேர்த்துக் கொம்புச் சிமிளில் வைத்துத் திலதமிடத் தன்னுருவம் யாருக்குந் தெரியாதிருக்கும்

☞ கருவூரார் வாத காவியம் 700 என்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

( இது வரையிலும் சேற்றூர் கெந்த பருவத எல்லை. )

## இராசபாளையம் கெந்த பருவதம் வாசுதேவம கரிசி ஆச்சிரமம். 86. இந்திரவீர மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த நாதமுனிவ ராச்சிரமத்திற்கு வட பக்கம் போகிற பாதையில் அரை நாழிகை தூரத்திலிருக்குஞ் சவுரிமலைக்குத் தென் பக்கம் பெரிய தேக்குமரக் கானலிருக்கிறது. அதைக் கடந்து அரை நாழிகை தூரம் போனால் அங்கொரு காளி பாறை யிருக்கிறது. அப் பாறைமேல் நின்று பார்த்தால் இராச பாளைய மென்னும் ஊர் தெரியும். அந்தப் பாறைக்கு வடக்காகச் சொரிமுத்தன் கோயிலிருக்கிறது. அதன் பக்கத்தில் பண்டாரக் கிழவன் கோவிலுண்டு. அதைக் கடந்து மலை மேலிருக்கும் அடர்ந்த கானலுக்குக் கீழ் பக்கம் வாசுதேவ மகரிஷி ஆச்சிரம மிருக்கிறது. அதற்கு வடபுரம் இந்திரவீர மர மிருக்கிறது அம் மரத்தூர் பெரிதாயும், இலை கையகலமும், புஷ்பம் வெண்மையாய் நாலிதளோடு மிருக்கும். அந்த மரத்தை வெட்டினால் பால் வரும். அப் பாலைச் சிரட்டையிற் பிடித்து வெள்ளாட்டுக் கோமயம் விட்டுக் கலக்கிச் சாப்பிட மூர்ச்சையாகும். மூர்ச்சை தெளியும் வரை பசுவின் பால் கொடுத்துக் கொண்டேவர மூன்று நாளைக்குப் பின்றுற் தெளி வுண்டாகும். அதன் பின் பச்சரிசியுடன் பாசிப் பயர் கலந்து சமைத்துச் சாப்பிட்டு வரத் தேகத்திற் சட்டை கழன்று பொன் போற் காந்தி யுண்டாகிக் காய சித்தி யாகும்.

(இது வரையிலும் இராசபாளையம் கெந்த பருவதம் எல்லை)

## மம்முசாபுரம் பேமலை பாலையானந்தர் ஆச்சிரமம் 87. வேம்பின் மேற் புல்லுருவிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்ளே! அந்தக் கானலுக்கு நேர் வடக்காக அரை நாழிகை வழி தூரத்திலுள்ள பன்றி மலைக்கு வட பக்கமாய்ப் போகிற பாதை வழியில் போனால் கூப்பிடு தூரத்தில் பேமலையிருக்கிறது. அதன் கீழ் பக்கம் வருகிற பாதையில் ஒரு நாழிகை தூரத்திலுள்ள ராக்காயி அம்மன் கோவிலுக்கு மேல்புரம் அம்பிடு தூரத்தில் பாலையானந்தர் குகை இருக்கிறது. அக் குகைக்குத் தென் பக்கமுள்ள வெள்ளைக்கல் பாறைமேலேறிப் பார்த்தால் மம்முசாபுரமென்ற ஊர் தெரியும். அங்கிருந்து வட பக்கம் போகிற பாதையில் கூப்பிடு தூரம் போனால் வேப்பமரங்க ளனந்த மிருக்கிறது. அத்துடன்

வேம்பின் மேற் புல்லுருவி மரமு மிருக்கிறது. அம் மரம் சகலமும்
வேப்ப மரத்தைப் போலவே யிருந்தாலும்; இலைகளில் மாத்திரம் இலை
கள் பேதித்து வேறு இலைகளைப் போலிருக்கும். இந்த அடையாளத்
தைக் கண்டு ஞாயிற்றுக் கிழமை யன்று வருகிற அமாவாசையில் காப்
புக்கட்டி சேவல் பலிகொடுத்து மரத்தின் மேலேறிக் கிளையை வெட்டி
வந்து மரத்தடியில் வைத்துத் தேங்காய் பழம் வைத்துத் தூபதீபங்
கொடுத்து அதில் மூன்று மணி யாகச் செய்து கோர்த்துக் கையில்
கட்டிக்கொள்ளச் சகல சித்து முண்டாகும்.

☞ கருவூரார் வாதகாவியம் 700 யென்னும் நூலில் இதன்
விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

## மம்முசாபுரம் பேமலை தொழுகண்ணிச் சித்தர் வனம்

### 88. கல்லத்திமரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த வெள்ளைக்கல் பாறையி லிருந்து
வட பக்கம் மலைமேல் ஒரு நாழிகை தூரம் போனால் பேமலை யுச்சி
யில் தொழுகண்ணிச் சித்தர் வாசஞ் செய்யும் குகை யிருக்கிறது.
அதன் பக்கத்தில் அம்பிடு தூரத்தில் ஒரு சுனை யிருக்கிறது அதில்
மூன்று கையளவு தண்ணீர் சாப்பிடச் சகல குட்டரோகமுந் தீரும்.
அச்சுனையை விட்டுக் கீழ் பக்கமாய் வருகிற பாதை வழியில் கூப்பிடு
தூரத்திலிருக்கிற ஆற்றுக்கரை யோரமாய்க் கல்லத்தி மரங்களிருக்கி
றது. அம்மரம் தூர் பெரிதாயும் இலை இரண்டு விரலகலத்தில் முனை
நீண்ட தாயும் மரக் கணுக்களில் நெல்லிக்காய்ப் பருமனுள்ள காய்கள்
கொத்துக் கொத்தாய் முளைத்திருக்கும் அதைப் பிடுங்கி உரலில்
போட்டு உதக நீர் விட்டிடித்துச் சாறெடுத்து அதில் வெள்ளைப் பாசா
ணக் கட்டியைச் சுருக்குக் கொடுக்கக் கட்டும் அதைச் சுண்ணஞ்
செய்து சாப்பிடக் காயசித்தி யாகும்.

( இது வரையிலும் மம்முசாபுரம் பே மலை யெல்லை. )

## ஸ்ரீவில்லிபுத்தூர் குண்டு மலை சாங்கிய மகாரிசி வனம்.

### 89. குருக்கத்திக் கொடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த ஆற்றுக்கு வட பக்கம் போகி
றபாதையில் அரை நாழிகை தூரம் போனால் புலிக்கானலிருக்கிறது.
அந்தக் கானலின் கீழ்பக்கத்தில் பேச்சியம்மன் ராக்காயம்மன், வயிர
வர் கோயில்கள் இருக்கிறது. அந்தக் கோவிலுக்கு வடபுரமாக
சாங்கிய மகாரிசி வனமும் அதனோரங் குண்டு மலையுமிருக்கிறது.

அந்த மலையின் மேல் நின்று பார்த்தால் திருவண்ணுமலைக் கோயி லும், பூஞ்சுனையும், அதன் பக்கத்தி லிருக்கிற நரிப்புடவு மலையுந் தெரி யும். அந்த நரிப் புடவின் உட் பக்கம் ரெம்பவும் விசாலமாயிருக் கிறது. அதிலநேக சித்தர்கள் வாசஞ் செய்வார்கள். அந்தக் குண்டு மலையின் அடிவாரமாயுள்ள கர்னலுக்கு வடபக்கத்தில் குருக்கத்தி மரங் களிருக்கிறது. அம் மரத்தூர் பெரிதாயும், இலை கல்லத்தியினிலை போலுமிருக்கும் மரத்தைத் தட்டினால் பால் வரும். அந்தப் பாலைச் சிறட்டையில் பிடித்து அதிலரைப் பங்கு உதக நீர் விட்டுக் கலக்கிச் சூரியபுட மிட்டுக் குழம்பான வுடன் நெல்லிக் காய்ப் பிரமாணம் காலை யில் சாப்பிட்டு வரக் காயசித்தி யுண்டாகும் தேகம் பொன்னிறமாகும்.

( இது வரையிலும் ஸ்ரீவில்லிபுத்தூர் குண்டு மலை யெல்லை. )

## ஸ்ரீவில்லிபுத்தூர் கோட்டை மலை மார்நாட்டுச் சித்தர் வனம். 90. சேங்கொட்டைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குண்டு மலைக்கானலிலிருந்து வடக்கே போகிற பாதையில் ஒரு நாழிகை தூரத்திலிருக்கும் மிருகங் கள் வாழும் வனத்திேனாம் திருகைக்கல் மொட்டையானது கோபுரம் போலிருக்கிறது. அதற்கு மேற்குப் பக்கம் போகிற பாதை வழியே ஒரு நாழிகை வழி தூரத்திற் கோட்டை மலை யிருக்கிறது. அம்மலை க்கு நடு மத்தியில் ஒரு பாதை போகிறது. அந்தப் பாதையில் அரை நாழிகை தூரம் போனால் கருப்பணசாமி கோவிலிருக்கிறது. அந்தக் கோவிலுக்குப் பின் பக்கமிருக்கும் மார் காட்டுச் சித்தர் வனத்தோரஞ் சேங்கொட்டை மரங்களிருக்கிறது. அதில் இரண்டு சாக்குச் சேங் கொட்டை கொண்டுவந்து பெரிய மிடாப்பானை இரண்டிற் கொட்டி அது நிறையத் தண்ணீர் விட்டு வைத்து ஒரு மாதஞ் சென்ற பின் ஒரு குளி தோண்டி நாலுபாத்தி பிடித்து அதில் இரண்டு பாத்தி களுக்கு ஒரு பானையாக நாலு பாத்தியிலுஞ் சேங்கொட்டையைக் கொட்டிப் பரத்தி அதன் மேற் சாணுயாம் மண் போட்டு மூன்று மாதஞ் சென்ற பின் அதன் மேல் எருப்போட்டுப் பரத்தித் தண் ணீர் விட்டு வெங்காயத்தை நட்டு வைத்து முளைத்துப் பூத்த பின் விளைந்த வெங்காயத்தை எடுத்துக் காலை மாலை வேளை ஒன்றுக்கு நாலு வெங்காயமாகச் சாப்பிட்டு வர நரை திரை மாறிக் காயசித்தியாகும்.

☞ போகர் சென்ன சாகரம் யென்னும் நூலில் இதன் விபரங் களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

( இது வரையிலும் ஸ்ரீவில்லிபுத்தூர் கோட்டை மலை எல்லை )

## ஸ்ரீவில்லிபுத்தூர் காட்டழகர் கோவில் மலை இராமரிசி ஆச்சிரமம் 91. சீந்திக் கொடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கருப்பணசாமி கோவிலுக்கு நேர் கிழக்கே ஒரு ஆறு வருகிறது. அந்த ஆற்றுக்கு மேல் பக்கமாய் ஒரு நாழிகை வழி தூரத்திலுள்ள சந்தன மரக் காவுக்குள்ளாக அரை நாழிகை வழி தூரம் போனால் பெரிய மலையின் அடிவாரத்தி லிருந்து எக்காலத்தும் தீர்த்தம் விழுந்து கொண்டே யிருக்கும். அதில் ஸ்நானஞ் செய்தாற் சகல பாவங்களுந் தீரும். அதிலிருந்து தெற்கே அரை நாழிகை தூரத்தில் பாறை மலை மேலிருக்கிற அழகர் கோயிலைக் கண்டு தெரிசித்துக் கொண்டு, அங்கிருந்து கீழிருக்குந் தீர்த்தக்கட்டத்திற்கு வந்து அதிலிருந்து வடக்கே போகிற பாதையின் கீழ் பக்கத்திலுள்ள இராமரிசி ஆச்சிரமத்திற்கு வட பக்கமாக அரை நாழிகை தூரம் போனால் அவ்விடத்திற் சீந்திக்கொடிகள் படர்ந்திருக்கிறது. அதை எடுத்து உரலிலிட்டு யிடித்து ஒரு மிடாவிற் போட்டுப் பிசைந்து வைத்து நாலா நாட் பார்க்கச் சீந்தியுப்புப் பூத்திருக்கும் அதை எடுத்து உலர்த்தி வைத்துக்கொண்டு காலை மாலை ஒரு வாரம் வரையிலுஞ் சாப்பிட்டு வரக் காயசித்தி யுண்டாகித் தேகம் பொன்னிறமாகும்.

☞ அகஸ்தியர் பரிபூரணம் 1200 யென்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## ஸ்ரீவில்லிபுத்தூர் காட்டழகர் கோவில் மலை பிராணாயாமச் சித்தர் வனம் 92. வேர்ப்பலா மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தத் தீர்த்தத்திற்கு வடபுறம் போகிற பாதையி லிரண்டு நாழிகை தூரத்திலிருக்கும் அரி யூற்றிற்கு வட மேற்காகப் பிராணாயாமச் சித்தர் குகை யிருக்கிறது. அந்தக் குகையி லனேக சித்தர்களிருப்பார்கள். அவர்களைத் தெரிசித்துக் கொண்டு அக் குகைக்கு மேல் பக்கம் போகிற பாதைவழி போனால் கானற் பலாக் காடுகளிருக்கிறது. அதன் வட பக்கமாக வேர்ப்பலா மரமிருக்கிறது. அம் மரம் பெரியதாயிருக்கும். இதன் வேர் போன யிடங்களிற் பலாப்பழங்கள் பழுத்துப் பூமிவெடித்திருக்கும். அவ்வடையாளங்கண்டு பழத்தை வெளியே யெடுத்து அதன் சுளையைச் சாப்பிட்டுக் கொட்டையைக் குளித் தைலமிறக்கி வைத்துக்கொண்டு காலை

யில் சிறு கரண்டியளவு சாப்பிட மூர்ச்சையாகும். அதற்குத் தேனும் பாலுங்கலந்து கொடுத்துவர மூன்று நாட் கழித்து மூர்ச்சை தெளியும். திரேகத்திற் சட்டை கழன்று பொன் போலாகுங் காயசித்தி யுண்டாகும்

☞ கருவூரார் வாத காவியம் 700 ல் இதன் விபரங்களைக் கூறி யிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

( இது வரையிலும் ஸ்ரீவில்லிபுத்தூர் காட்டழகர் கோயில் எல்லை )

## கூமாப்பட்டி தளவாய் மலை மணிகட்டிச் சித்தர் வனம்

## 93. கருங்கொடிவேலிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குகைக்கு வட பக்கமாகப் போகிற பாதையில் ஒரு நாழிகை தூரத்தில் அநேக துஷ்ட மிருகங்கள் வசிக்கக் கூடிய பெரிய கருங் கானலுக்குக் கீழ் பக்கம் போகிற பாதை வழியில் குண்டாறு வருகிறது. அந்த ஆற்றுக்கு வடபுரமாக யிருக்கும் மணிகட்டிச் சித்தர் குகைக்குப் பக்கத்தில் கரும்பாறை யிருக்கிறது. அப் பாறையைக் கடந்து ஒரு நாழிகை தூரம் போனால் அங்கே சதம்புத் தரையில் கொடி வேலி யிலையைப் போலத் தண்டு, புஷ்பம் கருப்பாயும் இரண்டு முள உயரமாயுமுள்ள கருங்கொடிவேலிச் செடிகள் ஏராளமாக முளைத்திருக்கிறது. அந்தச் செடியைச் சமூலம் பிடுங்கி யிடித்துச் சாறெடுத்துக் குருவை அரிசி போட்டுச் சமைத்துப் பொங்கி வருகிற சமயத்தில் இந்தச் சாற்றை விட்டுச் சமைத்துச் சாப்பிட நரை திரை மாறிக் காயசித்தி யாகும்.

☞ போகர் கற்பம் 300 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

( இது வரையிலும் கூமாப்பட்டித் தளவாய் மலை எல்லை )

## கொடிக்குளம் தளவாய் மலை கணையாளிச் சித்தர் வனம்.

## 94. கருந்துத்திக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சதம்புத்தரைக்கு வடமேற்காக வருகிற பாதையில் ஒரு குண்டாறு வருகிறது. அந்த ஆற்றுக்கு மேல்புரமிருக்கும் வாரண மலைமேலேறி வந்தால் அங்கொரு வட்டப் பாறை யிருக்கிறது. அந்தப் பாறைக்கு வடக்காக வருகிற பாதையில் அம்பிடுதூரம் வந்தால் கணையாளிச் சித்தர் குகையிருக்கிறது. அதற்குள் அநேக சித்தர்கள் வாசஞ் செய்திருப்பார்கள். அவர்களைக்கண்டு

தெரிசித்து அதிலிருந்து மேற்கே போகிற பாதையிற் போனால் மேல் மலையாளத்திற்குப் போய்ச்சேரும். வடதிசையாகப் போனால் வரிசை நாட்டு மலைக்குப் போய்ச்சேரும். ஆகையால் நேர் கிழக்காக வருகிற பாதையில் வந்தால் சதம்புத் தரையில் கருந்துத்திச் செடிகள் ஏராளமாக முளைத்திருக்கிறது. அந்தச் செடி மூன்றுமுள உயரமாய்த் தண்டு, புஷ்பம், கருப்பாயும் இலை துத்தி இலைபோலுமிருக்கும். இதைச் சமூலம் பிடுங்கி உதகநீர் விட்டிடித்துச் சாறெடுத்து அரை வீசம்படி சாப்பிடத் தேகத்திற் சட்டை கழன்று நரை திரைமாறும்.

( இது வரையிலும் கொடிக்குளம் தளவாய் மலை யெல்லை )

## வத்திராயிருப்பு வடகிரி மலை கலிங்கநாதர் வனம்

## 95. செந்தகரைச் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சதம்புத் தரைக்கு நேர் கிழக்காக வுள்ள மல்ல நாட்டு மலைமேல் வந்தால் அங்கே ஒரு ஓடை யிருக்கிறது. அந்த ஓடையைக் கடந்து இரண்டு நாழிகை தூரம் போனால் அவ்விடத்தில் மச்சு வீட்டரங்கு போலாகச் சதுரமான பெரிய கல் லிருக்கிறது. அந்தக் கல்லை மலையடி வாரத்திலிருந்து பார்த்தால் பெரிய கட்டடத்தின் சுவர் போலாகத் தெரியும். அந்தக் கல்லின் மேல் நின்று பார்த்தால் வத்திராயிருப்பு யென்ற ஊர் தெரியும் அதை விட்டிறங்கித் தென் பக்கம் வருகிற பாதையில் போனால் கலிங்கநாதர் குகை யிருக்கிறது. அக் குகைக்கு வட பக்கம் ஒரு நாழிகை வழி தூரத்தில் சதம்புத் தரையில் செந்தகரைச் செடிகள் ஏராளமாய் முளைத்திருக்கிறது. அந்தச் செடி, தண்டு, இலை, புஷ்பம் யாவுஞ் சிவப்பு நிறமாயும், இரண்டு முள உயரமாயும் வளர்ந்திருக்கும் அதைச் சமூலம் பிடிங்கி உதகநீர் விட்டிடித்துச் சாறெடுத்து வீசம்படி சாப்பிடத் திரேகத்தில் சட்டை கழன்று நரை திரை மாறிக் காயசித்தி யாகும் சரீரம் தங்க நிறமாயிருக்கும்.

( இது வரையிலும் வத்திராயிருப்பு வடகிரி மலை யெல்லை )

## சதுரகிரி தாணிப்பாறை மலை அத்திரி மகா ரிஷி ஆச்சிரமம் 96. செங்கடுக்காய்க் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கலிங்கநாதர் குகைக்குக் கீழ் பக்கம் இரண்டு நாழிகை தூரத்திலுள்ள தாணிப்பாறை மலையிலிருந்து வடக்குமுகமாய்ப் போகிற பாதை வழி வந்தால் அம்பிடு தூரத்தில்

கருப்பண சுவாமி கோவிலிருக்கிறது. அதைக் கடந்து கூப்பிடு தூரம் வந்தால் குதிரை குத்திப்பாறை யிருக்கிறது. அந்தப் பாறைக்கு வடபக்கமாய்ப் போகிற ஆற்றைக் கடந்து வடபக்கம் கூப்பிடு தூரத்தில் படி வெட்டிப்பாறை யிருக்கிறது. அதையுங் கடந்து அம்பிடுதூரம் வந்தால் ஒரு காட்டாறு வருகிறது. அதற்கு வட பக்கம் போகிற பாதையில் அரை நாழிகை வழி தூரம் போனால் கவுண்டின்னிய ஆறு வருகிறது அந்த ஆற்றுக்கு மேல்புரம் பத்தடி தூரத்திலிருக்கிற அத்தி ஊற்றுக்கு வடபக்கம் அத்திரிமகாரிசி யாகஞ்செய்த பாறையும், அதன் மேல் பக்கம் அவருடைய ஆச்சிரமமுமிருக்கிறது. அதன் பக்கத்தில் செங்கடுக்காய் மரங்களிருக்கிறது. அதன் காய் மட்டுஞ் சிவப்பாயிருக்கும். காயைப் பசுவின் கோமயம் விட்டு அவித்துக் கொட்டையை யெறிந்து விட்டுச் சதையையுந் தோலையும் உலர விட்டுச் சூரணித்து அத்துடன் சீனிச் சர்க்கரை சமன் சேர்த்து வைத்துக்கொண்டு தினசரி காலை ஒரு வேளை மட்டும் வெருகடிப் பிரமாணஞ் சாப்பிட்டு வரக் காய சித்தியாகும்.

ஞானம் 9 வது பாகத்திலுள்ள சுந்தரானந்தர் குருநூல் 110 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## சதுரகிரிப்பாதை கயிலாகிரி மச்ச முனிவர் ஆச்சிரமம்

## 97. வெள்ளைப்புனல் முருங்கைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த அத்திரி மகாரிசி ஆச்சிரமத்திலிருந்து கிழக்கே யிருக்கிற மலைமேல் பாதை வருகிறது. அவ்வழியில் கிழக்கு மார்க்கமாய் அரை நாழிகை தூரத்தில் கோண வாசல் பாதையிருக்கிறது. அதைக் கடந்து மேடேறினால் பசுமிதிப் பாறையும், அந்தப் பாறைக்குக் கிழக்கே கணபதி சாயையு மிருக்கிறது. அதைக்கண்டு தெரிசித்துக் கிழக்கே வருகிற பாதையில் அரை நாழிகை வழிதூரம் வந்தால் பாதைக்குத் தென் பக்கம் அம்பிடு தூரத்தில் மச்சமுனி ஆச்சிரமமிருக்கிறது. இதன் தென்பக்கம் கூப்பிடு தூரத்தில் வெள்ளைப் புனல் முருங்கை மர மிருக்கிறது. அதன் பூ மட்டும் வெண்மையாயிருக்கும். அதன் பட்டையின் மேல் பரணியைப் போக்கிப் பட்டையைமட்டும் பாக்கு வெற்றிலை சுண்ணாம்புடன் சேர்த்து மென்று இரையகல நீளமுள்ள இரும்புத் தகட்டைப் பழுக்கக் காய்ச்சித் தம்பல யெச்சியைத் துப்பவும். இப்படியாகத் தகடு பழுக்கும் வரையிலும் துப்பி யெடுத்துச் செந்தூர மாக்கித் தேனிற் குழப்பிச் சாப்பி

டக் காயசித்தியாகும். மேலும் இதன்காயை யெடுத்துத் தூள்செய்து பண விடை தேனிற் குளப்பிச் சாப்பிட்டுவரக் காயசித்தி யாகும். பாலுஞ் சாதமும் சாப்பிடவும்.

☞ ஞானம் 9 வது பாகத்திலுள்ள கருவூரார் குருநூல் சூஸ்திரம் 150 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கோள்ளவும்.

## சதுரகிரிப்பாதை கயிலாசகிரி மச்ச முனிவர் ஆச்சிரமம்

## 98. பேய்ச்சுரை விரைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தப் புனல் முருங்கை யிருக்கிற இடத்திற்கு மேல் பக்கம் அம்பிடுதூரத்தில் சமதளப் பாறையிருக்கிறது. அதற்குத் தென்பக்கமாய் வருகிற ஓடையைக் கழித்துக் கீழ் பக்கமாய் அம்பிடு தூரத்திலிருக்கும் மண் கண்டத்துக்குத் தென்புரம் பெரிய காவிருக்கிறது. அந்தக் காவுக்குக் கீழ் பக்கம் மரஞ் செடிகளடர்ந்த கானலுக்கு மேல் சருவில் பேய்ச் சுரைக்கொடிகள் படர்ந்திருக்கிறது, இதன் குணங்களையும், சாப்பிடு முறைகளையும், 43-வது நிர் ல்; விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. பார்த்துக்கொள்ளவும்.

☞ கருவூரார் வாதகாவியம் 700 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

## சதுரகிரீப்பாதை கயிலாசகிரி மச்ச முனிவர் ஆச்சிரமம்

## 99. குருவரிக் கற்றாழைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த பேய்ச் சுரை படர்ந்துள்ள இடத்துக்குத் தென் மூலைச் சார்பில் போகிற பாதை வழியே வந்தால் மரமும் செடிகளும் அடர்ந்திருக்கிற வனத்தின் மேல் பக்கத்தில் குருவரிக் கற்றாழை முளைத்திருக்கிறது. அது பெருவிரல் கன மிருக்கும். ஒன்றரைச் சாண் உயரம் வளர்ந்து குருக்கே வரி வரியாக யிருக்கும். அதைச் சமூலம் பிடுங்கி வந்து இடித்துச் சாறெடுத்து இரும்பை இலேசாகத் தகடு தட்டி அந்தத் தகட்டை மேல்படிச் சாற்றில் ஊர வைத்து எடுக்கத் தாமிர மாகும். அதைச் செந்தூரஞ் செய்து சாப்பிடக் காயசித்தி யாகும்

☞ சதுரகிரித் தலப்புராணத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

( இது வரையிலும் சதுரகிரி கயிலாயகிரி எல்லை )

சதுரகிரிப் பாதை சந்திரகிரி கோரக்க மகா முனிவர் வனம். 100. மஞ்சட் பூத்தைவேளைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குருவரிக் கற்றாழை இருக்கிற இடத்திற்கு நேர் வடக்கே வருகிற பாதை வழியாய் வந்தால் கூப்பிடு தூரத்தில் கிழக்கே ஒரு பாதையுண்டு. அந்த வழியாய் வர அங்கொரு மேடிருக்கிறது. அந்த மேட்டின் மேலேறிச் சமதளப் பாதையில் அரை நாழிகை வழி தூரம் வந்து பாதைக்குத் தென் பக்கம் பார்த்தால் நமது ஆச்சிரமந் தெரியும். அதன் நேர் வடக்காக ஆற்றுக்குள் இறங்கினால் தென்புரம் மலைச் சருவில் என்னுடைய குகையும், அதன் கிழக்காக ஆற்றின் நடு மத்தியில் கஞ்சாக்கடைந்த குண்டாவும், அதன் நேர்கிழக்கே எக்காலத்தும் வற்றாத பொய்கையு மிருக்கிறது. இவைகளைப் பார்த்து மேடேறி நமது ஆச்சிரமத்திற்கு வந்து அம்பிடுதூரந் தெற்கே போனால் மஞ்சள் பூத்தைவேளை யிருக்கிறது இதன் குணங்களையும் சாப்பிடும் முறைகளையும் 50வது நிர் ல் விபரமாகச் சொல்லி யிருக்கிறது. அதன்படி செய்தால் சித்தியாகும்.

☞ சதுரகிரித்தல புராணத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

சதுரகிரிப் பாதை சந்திரகிரி கோரக்க மகா முனிவர் வனம். 101. செங்கற்றாழைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மஞ்சள் பூத்தைவேளை இருக்கிற இடத்திற்கு மேற்குப் பக்கத்தில் ஒரு பாதை போகிறது. அந்தப் பாதையில் அம்பிடு தூரம் போனால் கசிவுத் தரை இருக்கிறது. அதற்கு வட பக்கம் ஓடைக்கு மேல் பக்கத்தில் செங்கற்றாழை முளைத்திருக்கிறது. இதன் குணங்களையும் சாப்பிடும் முறைகளையும் 32வது நிர் ல் விபரமாகச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படிச் செய்யச் சித்தியாகும்.

☞ புலத்தியர் கற்பம் 300 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

சதுரகிரிப் பாதை சந்திரகிரி கோரக்க மகா முனிவர் வனம். 102. செந்நாயுருவிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் செங்கற்றாழை முளைத்திருக்கிற இடத்திற்குப் பக்கத்திலிருக்கிற சதம்புத் தரைக்கு வட பக்கம் போகிற பாதை வழியாய்ப் போனால். ஒரு மண் கண்டமான மேடும்

பக்கத்தில் ஓடையும் இருக்கிறது, அந்த ஓடைக்கு வட பக்கம் சம தளமான மண் தரையாயிருக்கும். அதில் செந்நாயுருவி முளைத்திருக்கிறது. இதன் குணங்களையும்: சாப்பிடும் முறைகளையும் 21வது நிர். ல் விபரமாய்க் கூறியிருக்கிறது. அதன்படி செய்யக் காயசித்தியாகும்.

☞ கருவூரார் வாத காவியம் 700 என்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

## சதுரகிரிப்பாதை சந்திரகிரி கோரக்க மகா முனிவர் வனம்

## 103. அமுத வல்லிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் செந்நாயுருவிச் செடி முளைத்திருக்கிற சமதளமான இடத்திற்குப் பக்கத்தில் கரும்பாறை இருக்கிறது. அந்தப் பாறைக்கு வடபக்கம் ஓடை யிருக்கிறது. அந்த ஓடையின் வட பக்கமாய் மேற்கே அம்பிடு தூரம் போனால் அவ்வழியில் அமுதவல்லிச் செடி முளைத்திருக்கிறது. அது குப்பை மேனிச் செடி போலவும், இலை பழம்பாசி இலை போலவும், புஷபம் கொட்டான் கறந்தை புஷ்பம் போலவு மிருக்கும். அந்தப் புஷ்பத்தை மட்டும் எடுத்துத் தினமும் சிறிது சிறிதாகப் பத்து நாளைக்கு சாப்பிட்டு வந்தால் வாயிலமுரி ஊரிக்கொண்டே யிருக்கும். அதைச் சாப்பிட்டு வரக் காயசித்தி யாகும்.

( இது வரையிலும் சதுரகிரி மலை சந்திரகிரி எல்லை. )

## சதுரகிரிப் பாதை விட்ணுகிரி இராமதேவர் ஆச்சிரமம்

## 104. உரோம விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த அமுத வல்லிச் செடிக்கு நேர் வடக்கே வந்து கிழக்கே போகிற பாதை வழியே போனால் ஒரு மேடிருக்கிறது. அந்தமேட்டு முகப்பில் இரட்டை லிங்க மிருக்கிறது. அந்த லிங்கத்திற்குத் தென் கீழ் மூலையில் இராமதேவர் ஆச்சிரமமும். அதன் பக்கத்தில் ஒரு ஆறுமிருக்கிறது அதன் மத்தியில் உரோம விருட்சமிருக்கிறது. அம் மரம் சாம்பல் நிறமாகவும், அதில் ரோமம் போல் சட்டை சட்டையாயுந் தொங்கும் அதைத் தொட்டால் பஞ்சு போலிருக்கும். அதன் பட்டையைத் தட்டி யெடுத்துச் சூரணித்து திரிகடிப் பிரமாணம் தேனில் கலந்து புசிக்க நரை திரை மாறும். தேக சித்தியாகும் அவன் அமுரி பஞ்சலோகத்தையும் பேதிக்கச் செய்யும் அந்த மரத்தின் தூரில் துளைத்து அதற்குள் ரசத்தைவிட்டு அம் மரத்

திறைல் மூடி 45 நாள் கழித்துப் பார்க்க அச் சூதம் கட்டியாயிருக்கும். அதை எடுத்து முழப் புடமிட உருகி மணியாகும். அந்த மணியை வாயிலிட்டுக் கொண்டால் சரீரத்தில் கத்தி வெட்டு, குண்டு, முதலாகிய ஆயுதங்கள் பாயாது. யானைப் பெலம் உண்டாகும்.

☞ ஞான சாஸ்திரத் திரட்டு 8 வது பாகத்திலுள்ள சட்டமுனி கற்பவிதி 101 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது.

## சதுரகிரிப் பாதை விட்ணுகிரி இராமதேவர் ஆச்சிரமம்

## 105. கருநெல்லி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த உரோம விருட்ச மிருக்கிற இடத்திற்குப் பக்கத்தில் ஓடை யிருக்கிறது. அந்த ஓடைக்குத் தென் பக்கம் அடர்ந்த காடும் அந்தக் காட்டுக்கு மேல் பக்கம் நசுவல் தரை யில் கருநெல்லி விருட்சமு மிருக்கிறது. அம் மரமானது சாதாரண நெல்லி மரம்போலிருக்கும். காம்பு, தூர், கிளை, முதலியவைகள் எல்லாம் கருப்பா யிருக்கும். அதன் பட்டையை இரும்பு படாமல் தட்டி எடுத்துச் சூரணஞ் செய்து காராட்டுப் பாலுங் குருவை யரிசியும் இச் சூரணமும் போட்டுச் சமையல் செய்து சாப்பிட்டுவரத் தேக சித்தி யாகும். நரை திரை மாறும்.

☞ கருவூரார் வாத காவியம் 700 ல் இதன் விபரங்களைக் கூறி யிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## சதுரகிரிப்பாதை விட்ணுகிரி இராமதேவர் ஆச்சிரமம்

## 106, நாகபடக் கற்றாழைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கருநெல்லி விருட்சத்திற்குப் பக்கத்தில் நாகபடக் கற்றாழை யிருக்கிறது. அந்தக் கற்றாழை பாம்பு படமெடுத்தது போலும், மடலில் வரி வரியாயும், வரிக்குவரி நீர் வடிந்துகொண்டு மிருக்கும். அந்தக் கற்றாழையைச் சமூலம் பிடுங் கிப் பால் விட்டு அரைத்துக் கலக்கிச் சாப்பிட ஒரு முகூர்த்த நேரம் வரை மூர்ச்சை யாகும். அந்தச் சமயத்தில் பக்கத்தில் ஒரு ஆள் கூடவே யிருந்து மூர்ச்சை தெளியும் வரை ஒரு காண்டி வீதம் அடிக் கடி பால் கொடுத்துக் கொண்டு வர மூர்ச்சை தெளியும். பின் நரை திரை மாறிக் காயசித்தி யாகும். யானைப் பெல னுண்டாகும்.

☞ சதுரகிரித் தலப்புராணத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக் கிறது பார்த்துக் கொள்ளவும்.

( இது வரையிலும் சதுரகிரிப்பாதை விட்ணுகிரி எல்லை )

## சதுரகிரிப் பாதைமேருகிரி தூர்வாசரிசி ஆச்சிரமம்

### 107. தில்லை விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! இந்த நாகபடக் கற்முழை இருக்கிற இடத்திற்கு வடக்கேயுள்ள சமதளமான இடத்திலிருந்து, கிழக்கே போகிற பாதையில் போனால் பெரிய பசுக்கிடை யிருக்கிறது. அது கடந்து கிழக்கே போகிற பாதையிற் போனால் எக்காலத்தும் வற்றாத நல்லவூற்றுச் சுனையும் பாறையு மிருக்கிறது. அதனோரம் பாம்புக் கேணி யிருக்கிறது. அதைக் கடந்து கிழக்கே கூப்பிடு தூரத்தி லுள்ள வழுக்கைப் பாறையையும், அப்பால் சரளைப் பாதையையும், அதன் பக்கத்தி லிருக்கிற பச்சரிசி மேட்டையும் கடந்து தேக்கம் பண்ணைமலை வழியாகக் கிழக்கே அரை நாழிகை வழிதூரம் போனால் சின்னப் பசுக்கிடையும் ஓட்டைப் பலாவும் ஒப்பிலாச் சாயையு மிருக் கிறது. அது கடந்து கிழக்கு முகமாகப் போனால், அங்கிருக்கும் காளாற்றுக்குத் தென் பக்கம் பலா மரமுங் கருப்பண சுவாமி கோவிலு மிருக்கிறது. அந்தக் கருப்பண சுவாமிக்குப் பின் பக்கம் காலாங்கி முனிவர் வைத்த தைலக் கிணற்றுக்குக் கற் கதவு போட்டு மூடி அதன் மேல் பாறைக் கல்லைத்தூக்கி வைத்திருக்கிறது. அந்தத் தைலம் எடுக்க வேண்டுமானால் காவல் பலாவடிக் கருப்பனுடைய உத்திரவின் பேரி லெடுக்கலாம். அந்த ஆற்றுக்குள் பேச்சிப் பாறை யிருக்கிறது. அந்த ஆற்றைக்கடந்து வடபக்க மேடேறினால் அங்குள்ள தூர்வாச ரிசியாச் சிரமத்திற்கு வடபக்கம் தில்லைமர மிருக்கிறது. அந்த மரத்தின் குணங் களையும் சாப்பிடும் முறைகளையும் 55 கிர். ல் விபரமாய்ச் சொல்லியிருக் கிறது. அந்தப்படிச் செய்யச் சித்தி யாகும்.

☞ சதுரகிரித் தலப்புராணத்தில் இதன் விபரங்களைக் கூறி யிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## சதுரகிரி சுந்தர மகாலிங்கங் கோவில் வனம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த தூர்வாச ரிசி வனத்தை விட் டுக் கிழக்கே போகிற பாதையில் கூப்பிடு தூரத்தில் வெள்ளைப் பாறை யும் சந்தன மகாலிங்க சுவாமி கோவில் ஓடையுமிருக்கிறது. அதைக் கடந்து மேடேறிக் கிழக்கே போகிற பாதையில் கூப்பிடுதூரம் போனால் அந்த யிடத்தில் முச்சந்தியான பாதை யிருக்கிறது. அதில் ஒரு பாதை தெற்காகவும் ஒரு பாதை வடக்காகவும் மற்றொருபாதை மேற்காகவுமாகப் பிரிந்துபோகிறது. அதில் தெற்கே போகிற பாதை

யிற் போய் அங்குள்ள ஆற்றைக் கடந்து மேடேறினல் அந்த யிடத்தில் சுந்தரர் கோவிலிருக்கிறது. அவரைச் சேவித்துக் கொண்டு தெற்கே ஆற்றோரமாய்க் கூப்பிடுதூரம் போனல் மகாலிங்கங் கோவிலிருக்கிறது. அந்தக் கோவில் மலை வளங்கள் தெரியவேண்டு மானல் சதுரகிரித் தலப்புராணத்தைப் பார்க்க நன்கு விளங்கும். இந்தக் கோயிலினுடைய மகுத்துவத்தையும் மலை வளங்களையும் சொன்னல் விரியுமாதலால் சுருக்கிச் சொல்லுகிறேன் கேளுங்கள். இந்த மலைக்குச் சதுரகிரியெனப் பெயர்வந்த காரணமாவது. இதன் மேல்புக்கம் மேருகிரி, கைலாயகிரி, சந்திரகிரி விஷ்ணுகிரி ஆக நான்கு கிரிகளும் வடபக்கம் கும்பகிரி, மயேந்திரகிரி, சஞ்சீவிகிரி, இந்திரகிரி, ஆக நான்கு கிரிகளும். கீழ் பக்கம் சூரியகிரி, குபேரகிரி, சிவகிரி, சத்திகிரி ஆக நான்கு கிரிகளும். தென் பக்கம் பிரமகிரி, சித்தகிரி, இராமகிரி, உதையகிரி, ஆக நான்கு கிரிகளுமிருக்கிறது. அதனு லிதற்குச் சதுரகிரியென்று சித்தர்கள் பெயர் கொடுத்திருக்கிறார்கள்.

( இது வரையிலும் சதுரகிரிப் பாதை மேருகிரி எல்லை. )

## மகாலிங்கங் கோவிலுக்கு வடக்கு சந்தண மகாலிங்க மலை சட்டை முனிவர் குகை 108. வெண்ணாவல் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! இந்தச் சுந்தர மகாலிங்க சுவாமி கோவிலுக்கு வட பக்கம் போகிற பாதை வழியே கூப்பிடுதூரம் போனல் அங்கொரு ஆறு வருகிறது அந்த ஆற்றைக்கடந்து வட பக்கம்போகிற பாதைவழி போனல் அம்பிடு தூரத்திற் கப்பால் அந்தப் பாதையானது மேற்கு முகமாகச் செடிகளடர்ந்த காட்டுக்குள் போகும் அதைக்கழிந்து அரை நாழிகை வழிதூரம் போனல் பெரிய காவு இருக்கிறது. அந்தக் காவுக்குள் நுழைந்து அரை நாழிகை வழி தூரத்தில் சந்தண மகாலிங்க சுவாமி கோவிலிருக்கிறது. அந்தக் கோவிலுக்கு வட பக்கம் காளி கானலிலிருந்து ஓடைபோலத் தீர்த்தம்வந்து விழுந்து கொண்டிருக்கிறது. அதில் தீர்த்தமாடி சுவாமியைத் தெரிசித்துக்கொள்ளவும் இந்த சந்தண மகாலிங்கத்திற்கு மானிடர் பூசை கிடையாது. தேவ ரிசி முனிவர்கள் பூசை தான் எக்காலமும் நடந்து கொண்டே வருகிறது. அந்தச் சந்தண மகாலிங்கத்திற்குத் தென் மேற்கு மூலையாகக் கூப்பிடு தூரத்தில் சட்டை முனிவர் குகை யிருக்கிறது. அந்தக் குகைக்குந் தென் பாரிசத்தில் கூப்பிடு தூரத்திலிருக்கிற சமதளத்தில் வெண்ணாவல் மரமிருக்கிறது. அந்த மரத்தின்

குணங்களையும் சாப்பிடு முறைகளையும் 37 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

☞ அகத்தியர் பூரணசூத்திரம் 216 ல் இதன்விபரங்களைக் கூறி யிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

## சந்தண மகாலிங்கங் கோவில் மலை சட்டை முனிவர் குகை

## 109. வனப் பிரமிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த வெண்ணுவலிருக்கிற இடத் திற்குப் பக்கத்தில் குமுடம் போல் ஒரு மண் மலை இருக்கிறது. அந்த மலைக்குத் தென்புரம் சமதளமான மண் கண்டமிருக்கிறது. அந்த மண் கண்டத்திற்குப் பத்துமுள நீளத்திற்குள் வனப்பிரமி யென்ற மூலிகை இருக்கிறது. அம்மூலிகை கொடியாகப் படர்ந்து இலை நெல்லி இலையைப்போல் தடிப்பாக யிருக்கும். அதை ஞாயிற்றுக் கிழமையும், பூச நட்சத்திரமுங் கூடிய சுபதினத்தில் சாப நிவர்த்தி செய்து, சமூலம் பிடுங்கிச் சூரணஞ் செய்து, புளித்த காடியில் கலக் கித் தினம் ஒரு கரண்டி வீதம் சாப்பிட்டு வரக் காயசித்தி யாகும்.

☞ போகர் கற்பம் 300 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

## சந்தண மகாலிங்கங் கோவில் மலை சட்டை முனிவர் குகை

## 110. முப்பிரண்டைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த வனப்பிரமி யிருக்கிற இடத் திற்குப் பக்கத்தில் முப்பிரண்டைக் கொடி படர்ந்திருக்கிறது. அந்தப் பிரண்டை சாதாரணமான பிரண்டை போற் தெரியும். அதைப் பிடித் துப் பார்த்தால் மூன்று பட்டையா யிருக்கும். இதுதான் முப்பிரண் டைக்கு அடையாள மாகும். இதைக் கொண்டு வந்து இடித்துச் சாரெடுத்துச் சூதத்திற்குச் சுருக்கிடச் சூதங் கட்டும், அதை எடுத்துச் சமனிடை நாகத்திற் கொடுக்க இரண்டும் உருகி நிற்கும். இந்த இடைக்குக் கெந்தி கூட்டி ஷை பிரண்டைச் சாற்றாலாட்டி, வில்லை தட்டிக் காயவைத்துக் குகையிலிட்டுச் சீலை மண் செய்து பத் தெருவில் புடமிடச் செந்தூரமாகும். அந்தச் செந்தூரத்தைத் தேனிற் குளப்பிச் சாப்பிடக் காயசித்தி யாகும். நரை திரை மாறும்.

☞ கருவூரார் வாதகாவியம் 700 ல் இதன் விபரங்களைக் கூறியிருக் கிறது பார்த்துக் கொள்ளவும்.

( இது வரையிலும் சந்தணமகாலிங்கம் சட்டமுனிவர் குகையின் எல்லை )

## மகாலிங்கங் கோவில் வடபக்கம் கும்ப மலை கும்ப முனிவர் குகை 111. கரிப்பான் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சட்டை முனிவர் குகையிலிருந்து நேர் கிழக்கே வருகிற பாதையில் ஒரு நாழிகை வழிதூரம் வந்தால் வடக்கே போகிற பாதை சந்திக்கும். அந்தப் பாதையில் நாலு நாழிகை வழிதூரம் போனால் அங்கே கும்ப மலை யிருக்கிறது. அந்த மலையோரம் பெரிய குகை யிருக்கிறது. அந்தக் குகைக்குள் அகத்தியர் வாசஞ் செய்கிறார். அந்த மலைமேல் ஒரு நாழிகை வழி தூரம் போனால் அங்கே கரிப்பான் செடிகளிருக்கிறது. அந்தச் செடியின் குணங்களையும் சாப்பிடும் முறைகளையும் 42 நிர். ல் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. அதன்படி செய்து சாப்பிடக் காயசித்தி யாகும்.

☞ ஞானம் 4 வது பாகம் சூரியானந்தர் கற்பஞான சூத்திரம் 25ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## கும்பமலை கும்ப முனிவர் குகை 112. சோதிப்புல் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கும்பமலைக்கு மேலே கரிப்பான் செடி யிருப்பதற்குப் பக்கத்தில் இண்டஞ் செடிகள் படர்ந்திருக்கிறது. அதற்குள் நுழைந்து கூப்பிடுதூரம் போனால் அதன் வட பக்கம் மண் கண்டமிருக்கிறது. அதின் தென் மேற்கு மூலையில் சோதிப் புல்கள் ஏராளமாய் முளைத்திருக்கிறது. அந்தப் புல்லின் குணங்களையும், சாப்பிட வேண்டிய முறைகளையும், 23 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படிச் செய்யச் சித்தியாகும்.

☞ கருவூரார் வாத காவியம் 700 என்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

( இது வரையிலும் கும்பமலை கும்ப முனிவர் குகை எல்லை )

## மகாலிங்கங் கோவில் வடபக்கம் மயேந்திரகிரி போக மகா ரிசி ஆச்சிரமம். 113. தில்லை விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கும்பமலையையும் அகஸ்தியர் குகையையுங் கடந்து மேற்குப்பாதையாக அநேக வனங்களையும், மலை ஆறுகளையுங் கடந்து வந்தால் முனீசுவரன் எல்கைக்குக் கொண்டு வந்து விடும். அதிலிருந்து படி வெட்டிப் பாதை வழியே இரண்டு நாழிகை வழி தூரம் போனால் காற்றுடி மேடை போய்ச் சேரும். அக்காற்றுடி மேடையைக் கடந்து கூப்பிடு தூரத்திலுள்ள கொடைக்கா

ரன் கல்லும், முடங்கி வழியும், கங்கண ஆற்றையும், கடந்து அம்பிடு தூரம் போனால் குளிராட்டிப் பொய்கை யிருக்கிறது. அப்பொய்கையில் தீர்த்தமாடிய பின்பு அப் பொய்கைக்குத் தென் மேற்கு மூலையிலிருக்கிற போக முனிவர் வனத்தைக் கண்டு அவரைத் தெரிசித்து அதற்கு மேற்றிசையில் போனால் அம்பிடு தூரத்தில் தில்லை விருட்சமிருக்கிறது. இந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிட வேண்டிய முறைகளையும், 55 நிர். ல் விபரமாய்ச் சொல்லி இருக்கிறது. அந்தப்படிச் செய்யச் சித்தியாகும்.

☞ போகர் சென்ன சாகரம் யென்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## மகாலிங்கங் கோவில் வட பக்கம் மயேந்திரகிரி போக மகாரிசி ஆச்சிரமம், 114. சிவந்த இலைக்கள்ளிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தத் தில்லை விருட்ச மிருக்கிற இடத்திற்குத் தென் பக்கத்தில் சீயக்காய்ச் செடிகள் இருக்கிறது. அந்தச் சீயக்காய்ப் புதையைக் கழித்து அப்பாற் போனால் வட்டப் பாறை இருக்கிறது. அந்தப் பாறைக்கு மேல்பக்க மிருக்கும் பெரிய வனத்தின் கீழ் பக்க முள்ள ஓடைக்குச் சமீபத்தில் சிவந்த இலைக் கள்ளி யிருக்கிறது. இந்தக் கள்ளியின் குணங்களையும், சாப்பிட வேண்டிய முறைகளையும் 20 வது நிர். ல் விபரமாய்ச் சொல்லி இருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

☞ அகத்தியர் பூரணம் 216 யென்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

(இதுவரையிலும் மயேந்திரகிரி போகமகா ரிசி ஆச்சிரமத்தின் எல்லை)

## மகாலிங்கங் கோவில் வட பக்கம் சஞ்சீவிகிரி புசுண்ட மகாரிசி ஆச்சிரமம், 115. அழுகண்ணிச் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தப் போக மகாரிசி ஆச்சிரமத்திற்குத் தென்திசையாக வருகிற பாதை வழியில் அரை நாழிகை வழி தூரம் வந்தால், அழகிய பூஞ்சோலை தெரியும். அதற்குள் நுழைந்தால், புசுண்டர் ஆச்சிரம மிருக்கிறது அவரைக் கண்டு தெரிசித்துக்கொண்டு அந்த ஆச்சிரமத்திற்கு வடமேற்கு மூலையில் கூப்பிடு தூரத்தில் மாதவேதி உதகச் சுனை யிருக்கிறது. அந்தச் சுனைக்கு மேல் பக்கம் அழு

கண்ணிச் செடிக ளிருக்கிறது. அந்தச் செடியின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும் 52 நிர். ல் விபரமாகச் சொல்லியிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

☞ புலத்தியர் கற்பம் 300 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

## மகாலிங்கங் கோவில் வடபக்கம் சஞ்சீவி கிரி புசுண்டர் மகாரிசி ஆச்சிரமம் 116. தொழுகண்ணிச் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த அழுகண்ணிச் செடி யிருக்கிற இடத்திற்கு மேல் பக்கம் பாதை போகிறது. அந்தப் பாதையில் கூப்பிடு தூரம் போனால் அங்கே மண் திட்டு இருக்கிறது. அத்திட்டுக்கு வடபுரம் போகிற பாதையிற் போனால் அம்பிடு தூரத்தில் குண்டுக் கல்லுகளான பாதை யிருக்கிறது. அந்த பாதைவழியே கல்லெறி தூரத்தில் அங்கே தொழுகண்ணிச் செடி இருக்கிறது. அந்தச் செடியின் குணங்களையும் சாப்பிடும் முறைகளையும் 53 நிர். ல் விபரமாய்ச் சொல்லி இருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

☞ கருவூரார் வாதகாவியம் 700 யென்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

( இது வரையிலும் சஞ்சீவிகிரி புசுண்ட மகா ரிசி ஆச்சிரமத்தின் எல்கை )

## மகாலிங்கங் கோவில் வடபக்கம் இந்திரகிரி உரோம ரிசி ஆச்சிரமம். 117. ஏரழிஞ்சி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த புசுண்ட மகாரிசி ஆச்சிரமத்திற்குத் தென் மேற்குத் திசையில் அரை நாழிகை வழி தூரம் போனால் எல்லைக்குட்டமும் மண் மலைக்காடு மிருக்கிறது. அவ்வழியே போகிற பாதையில் கூப்பிடு தூரம் போனால், பல மரங்கள் சூழ்ந்த உரோமரிசி ஆச்சிரம மிருக்கிறது. அதற்குள் சென்று அவரைத் தெரிசித்துக்கொண்டு அந்த ஆச்சிரமத்திற்குக் கீழ் பக்கம் அம்பிடுதூரத்தில் ஏரழிஞ்சிமர மிருக்கிறது. இந்த மரத்தின் குணங்களையும் சாப்பிடும் முறைகளையும் 49 நிர். ல் விபரமாய்ச் சொல்லி இருக்கிறது. அதன்படி செய்யச் சித்தியாகும்.

☞ சதுரகிரித்தல புராணத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

## மகாலிங்கங் கோவிலுக்கு வடபக்கம் இந்திரகிரி உரோம ரிசி ஆச்சிரமம், 118. செங்கொடி வேலிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த ஏரழிஞ்சி மரமிருக்கிற இடத்திற்குப் பக்கத்தில் வட பக்கம் பாதை போகிறது. அந்தப் பாதைவழியில் அம்பிடு தூரம் போனால், கரும்பாறை இருக்கிறது. அந்தப் பாறைக்கு மேல் பக்கம் போகிற பாதையில் கூப்பிடு தூரத்தில் பேச்சிப்பாறை இருக்கிறது. அந்தப் பாறைக்குக் கிழ்பக்கம் போகிற கசிவுத் தரையிலிருந்து அம்பிடு தூரம் போனால் அங்கே செங்கொடி வேலிச் செடிகளிருக்கிறது. அந்தச் செடியின் குணங்களையும் சாப்பிடும் முறைகளையும் 27 நிர். ல் விபரமாய்ச் சொல்லி இருக்கிறது. அதன்படி செய்யச் சித்தியாகும்.

☞ கருவூரார் வாதகாவியம் 700 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கோள்ளவும்.

## மகாலிங்கங் கோவிலுக்கு வட பக்கம் இந்திர கிரி உரோம ரிசி ஆச்சிரமம், 119. கருங்கொடிவேலிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் செங்கொடி வேலிச் செடிகளின் பக்கத்தில் அம்பிடு தூரத்திலிருக்கிற திட்டுக்கு வட பக்கம் பெரிய கெவி யிருக்கிறது. அந்தக் கெவியைக் கழித்து மேடேறினால் பின்னுமொரு வாத மேடிருக்கிறது. அந்த மேட்டுக்கு வட பக்கமிருக்கிற சதம்புத் தரைக்கு மேல் பக்கம் கருங்கொடி வேலிச் செடிகளிருக்கிறது. அந்தச் செடியின் குணங்களையும் சாப்பிடு முறைகளையும் 93 நிர். ல் சொல்லி இருக்கிறது. அதன்படி செய்யச் சித்தியாகும்.

☞ அகத்தியர் பரிபூரணம் 1200 யென்னும் சாத்திரத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

(இது வரையிலும் இந்திரகிரி உரோம ரிசி ஆச்சிரமத்தின் எல்லை)

## மகாலிங்கங் கோவில் வட பக்கம் இந்திரகிரி யூகி முனிவர் ஆச்சிரமம், 120. சாயா விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்ளே! அந்த உரோம ரிசி வனத்திற்குத் தென் பக்கம் கூப்பிடுதூரம் போனால் மண்மலைச் சருவான பள்ள மிருக்கிறது. அதற்குள்ளிறங்கிக் கொஞ்சதூரம் போனால் அநேக மரஞ்செடிகள் சூழ்ந்த யூகி முனிவர் வனமிருக்கிறது. அதற்குள் சென்று அவரைத் தெரிசித்துக்கொண்டு அதன் பின் வடமேற்கே போனால் மண் திட்டி

ருக்கிறது அதன் வடக்குப் பக்கமுள்ள ஓடையில் சாயா விருட்ச மிருக்கிறது. அம் மரத்திற்குக் காந்தமர மென்று பெயர். அவ்விருட்சத்தின் நிழல் சாயாமல் இருந்த மாதிரியே யிருப்பதா லிதற்குச் சாயா விருட்ச மென்றும் பெயர். அம் மரம் சாம்பல் நிறமாயிருக்கும். இலை புன்னை மரத்து இலை போலும், காய், சுருண்ட வெள்ளரிக்காய் போலு மிருக்கும். அம் மரத்தின் பட்டையைச் சீவினால் நீல நிறம்போல் பால் வரும். அப் பாலை எடுத்து அதில் சூதம்விட்டுச் சூரிய புடம் வைத்தெடுக்கச் சூதங்கட்டும் கட்டும் பால் பிசின் போலாகிவிடும். அதைப் புசித்து வந்தால் நாதங் கட்டி இருகிவிடும். கட்டிய சூதத்தைச் செந்தூரமாக்கி, நெய்யில் குழப்பிப் பத்து நாள் காலை, மாலை, சாப்பிடக் காய சித்தியாகும்.

☞ மச்சமுனி 800 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

## மகாலிங்கங் கோயில் வட பக்கம் இந்திரகிரி யூகி முனிவர் ஆச்சிரமம், 121. சேந்தாடு பாவைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சாயா விருட்சமிருக்கிற இடத்திற்குப் பக்கத்தில் அம்பிடு தூரத்தில்,செம் மண் தரையில் சேந்தாடு பாவைச்செடி இருக்கிறது. அந்தச் செடி குத்துக் காற்சம்மட்டிச் செடிபோலும், இலை பொடியாயு மிருக்கும். அதன் இலையை அரைத்துத் தனிச் சாறெடுத்துச் சூதத்திற்குச் சுருக்குக் கொடுக்கச் சூதம் கட்டும் கட்டின சூதத்தைச் சாயா விருட்சத்தின் பாலில், ஏழு நாள் ஊறவைத்து எடுத்துப் புடமிட்டுச் செந்தூர மாக்கி ஆவின் நெய்யில் குழப்பிச் சாப்பிடத் தேக சித்தியாகும் நரை திரை மாறும்.

☞ சதுரகிரித் தலப்புராணத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

( இது வரையிலும் மகாலிங்கம் இந்திர கிரியின் எல்லை )

## மகாலிங்கங் கோயில் சதுரகிரி சுந்தரானந்தர் ஆச்சிரமம் 122. கற்பக விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த யூகி முனி வனத்திற்கு நேர் மேற்காக வந்து தெற்கே போகிற பாதையில் அரை நாழிகை வழி தூரம் வந்தால் ஒரு ஆறு வருகிறது. அந்த ஆற்றிலிறங்கி மேடேறினால் பளிஞர் குடிசையும், அதன் பக்கத்தில் சுந்தரலிங்கர் சந்நிதியும்

இருக்கிறது. அச் சந்நிதிக்கு தெற்கு வடக்காக வருகிற ஆற்றுக்கு மேல் பாரிசம் சுந்தரானந்தர் குகை இருக்கிறது. அவரைத் தெரிசித்துக்கொண்டு மேட்டேறினல் தேற்கே ஒரு பாதை போகிறது. அந்தப் பாதையில் கூப்பிடுதூரம் போனல், மகாலிங்கர் சந்நிதி இருக்கிறது. அவரைத் தெரிசித்துக் கொண்டு சந்நிதிக்குப் பின்பக்கம் கற்பகத் தருவிருக்கிறது. அதனைப் பஞ்ச தருவென்றும் சொல்லுவார்கள். அந்த மரத்திற்குத் தூர் ஒன்ருயிருக்கும். அத்தூரிலிருந்து ஐந்து கொப்புகளாகப் பிரிந்து ஒவ்வொரு கொப்புகளுக்கு ஒவ்வொரு விதமான இலைகளிருக்கும். அதன் பட்டையைத் தினம் ஒரு காசிடை வீதம் பால் விட்டரைத்துப் பாலில் கலக்கிச் சாப்பிடத் தேக பெல முண்டாகும். இந்த மரத்தைத் தட்டிப் பாலெடுத்துக் காசிடை வீதம் 45 நாள் வரை சாப்பிட்டுவரத் தேகசித்தி யாகும்.

☞ சதுரகிரித் தலப்புராணத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

( இது வரையிலும் மகாலிங்கம் சதுரகிரியின் எல்கை. )

**மகாலிங்கங் கோயில் மேல் பக்கம் கயிலாசகிரி சுந்தரானந்தர் ஆச்சிரமம் 123. செங்கடுக்காய்க் கற்பம்.**

கேளுங்கள் முனிவர்ளே! அந்தத் தருவிற்கு மேல் பக்கம், கூப்பிடு தூரத்தில் வட்டச் சுனை யிருக்கிறது. அந்தச் சுனைக்கு மேல் பக்கம் போகிற பாதையில் அரை நாழிகை வழி தூரம் போனல் ஒரு ஓடை வருகிறது. அந்த ஓடைக்கு மேல் பக்கம், கானலிருக்கிறது. அந்தக் கானலுக்குக் கீழ்பக்கம் கரும்பாறை இருக்கிறது. அந்தப் பாறைக்கு வட பக்கம் செங்கடுக்காய் மர மிருக்கிறது. அந்த மரத்தின் குணங்களையும், அதைச் சாப்பிட வேண்டிய முறைகளையும், 96 நிர். ல் விவரமாய்ச் சொல்லி இருக்கிறது. அதன்படி செய்யச் சித்தியாகும்.

☞ ஞானம் 9 வது பாகம் சுந்தரானந்தர் குருநூல் 110 என்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

**மகாலிங்கங் கோயில் மேல் பக்கம் கயிலாசகிரி சுந்தரானந்தர் ஆச்சிரமம், 124. சஞ்சீவி மூலிகைக் கற்பம்.**

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் செங்கடுக்காய் மரத்திற்கு மேல் பக்கம் கூப்பிடு தூரத்தில் செம்மண் தரையில் சஞ்சீவி மூலிகையிருக்கிறது. அம் மூலிகைக்கு எமனை வென்ருனென்னும் பெயரு

முண்டு. அச் செடிகள் சிறிதாகவும், இலை சாவல் முள்ளுபோலு மிருக்கும். இதைக் கசக்கி முகர்ந்தால் வாசனை இருக்கும். அந்த இலையைச் சூரணித்து பேய்ச் சுரைக் குடுக்கையி லடைத்து வைத்து அகால மரணமானவர்களுக்கு ஷை தூளைக் குழாய்க்குள் போட்டு நாசியில் ஊதினால் உயிர்பெற் றெழுந்திருப்பார்கள். சரீரத்தில், வெட்டுண்டவர்களுக்கு வெட்டுண்ட சதையில் இந்த இலைச்சாற்றைப் பிழிய சதை வெட்டுப்பட்ட இடந் தெரியாமல் மறைந்து விடும். இந்தச் சாற்றை மூர்ச்சை யானவர்களுக்கு மூக்கில் நசியமிட உயிர்பெற் றெழுந் திருப்பார்கள்.

☞ சதுரகிரித்தல புராணத்தில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

## மகாலிங்கங் கோயிலுக்கு மேல் பக்கம் கயிலாசகிரி அழகானந்தர் ஆச்சிரமம், 125. கருநெல்லிமரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சஞ்சீவி மூலிகை இருக்கிற இடத்திற்கு மேற்காக மஞ்ச ளூற்றிருக்கிறது. அந்த ஊற்றுக்கு வட பக்கம் அம்பிடு தூரத்தில் கல் புட விருக்கிறது. அதன் கீழ்பக்கம் சதம்புத் தரையும் சாதாரண நெல்லி மரங்களு மிருக்கிறது. அந்த இடத்திற்குக் கீழ்பக்கம் கசிவுத்தரையில் அழகானந்தர் ஆச்சிரம மிருக்கிறது. அதற்கு வட புரம் கருநெல்லி மர மிருக்கிறது. அந்த மரத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 105 நிர். ல் சொல்லியிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

☞ ஞான சாத்திரத்திரட்டு 9 வது பாகத்திலுள்ள சுந்தரானந்தர் குருநூல் 110 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## மகாலிங்கங் கோயில் மேல் பக்கம் கயிலாசகிரி அழகானந்தர் ஆச்சிரமம், 126 அருநெல்லிமரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கரு நெல்லிக் காட்டுக்குக் கிழக்காகக் கூப்பிடு தூரத்தில், கருங்கான விருக்கிறது. அந்த ஓடைக்கு மேல் பக்கம் கரையில் மாவுலிங்க மரங்களிருக்கிறது. அதன் மத்தியில் அருநெல்லி மரங்களுமிருக்கிறது. அந்த மரத்தின் குணங்

களையும், அதைச் சாப்பிடும் முறைகளையும், 61 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படிச் செய்யச் சித்தியாகும்.

☞ மச்சமுனி 800 என்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறி யிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

(இதுவரையிலும் மகாலிங்கம் கைலாச கிரியின் எல்லை)

## மகாலிங்கங் கோயில் தென் பக்கம் சதுரகிரி சன்னாசி வனம், 127. கருங் கழுகிறகுக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த அரு நெல்லி மர மிருக்கிற இடத்திலிருந்து நேர் கிழக்காக வந்தால் மகா லிங்கர் சந்நிதியில் கொண்டுவந்து விடும். அந்தச் சந்நிதிக்குத் தென்பக்கமாகப் போனால் அநேக மரஞ்செடிகள் சூழ்ந்த சன்னாசி வன மிருக்கிறது. அந்த வனத்தில் பறவைப் பாம்பு பறவைக்கிரி, பறவைக் காட்டான், முதலானவை பறந்து விளையாடும். அவ்வனத்தின் மேற்கு மூலையில் அத்திமர மிருக்கிறது. அந்த அத்தி மரத்தில் கருங் கழுகுகள், ஏராளமாக இருக்கும் அந்தக் கழுகுகள் ஆள் வாடை தட்டினால் ஒடி விடுமாகையால் அந்த மரத்தினடியில் அதன் இறகுகள் உதிர்ந்து கிடக்கும். அந்த இறகுகளை எடுத்துச் செய்யு முறைகளையும், அதன் குணங்களையும், 35 நிர். ல் விபரமாய்ச் சொல்லி இருக்கிறது. அந்தப்படிச் செய்யச் சித்தியாகும்

☞ கருவூரார் வாதகாவியம் 700 யென்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

(இதுவரையிலும் மகாலிங்கம் சதுரகிரியின் எல்லை)

## மகாலிங்கங் கோயில் தென் பக்கம் பிர்ம கிரி, பிர்ம முனிவர் ஆச்சிரமம், 128. உரோம வேங்கை மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சன்னாசி வனத்திற்கு தென் பக்கம் போகிற பாதையில் ஒரு நாழிகை வழிதூரம் போனால் ஓடையும் சங்கிலிப் பாறையு மிருக்கிறது. அதைக் கடந்து கூப்பிடு தூரத்தில் அநேக மரங்கள் சூழப் பிர்ம முனி ஆச்சிரம மிருக்கிறது. அவரைத் தெரிசித்துக் கொண்டு அந்த வனத்திற்குத் தென் கிழக்காகப் போனால் அவ்விடத்திலிருக்கும் மண் திட்டில் ரோமவேங்கை மர மிருக்கிறது. (அதனடையாளம்) சகலமும் வேங்கை மாம் போலவே இருக்கும். அதன் விழுதுகள் கமரிமான் ரோமம் போல் சடை சடையாய் முழ நீளம் தொங்கும், அவ் விருட்சத்தின் பட்டையை வெட்டினால் இரத்

தம்போல் பால் வடியும். அந்தப் பாலை எடுத்து, பொன்னுக்குச் சுருக்குக் கொடுத்துப் பற்பம்செய்து சாப்பிடத் தேக சித்தியாகும். இதுவன்றி அந்தப்பாலில் சாதிலிங்கத்தை 2 நாள் ஊறவிட் டெடுக்கக் கட்டும். அதை உமிக் காந்தலில் வைக்க மெழுகாகிவிடும். அதில் கொஞ்சம் வெள்ளி உருக்கு முகத்தில் கொடுக்கப் பழுத்துப் பத்து வயதாகும். அதைச் செந்தூரம் செய்து சாப்பிடக் காயசித்தி யாகும்.

☞ போகர் கற்பம் 300 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

## மகாலிங்கங் கோயில் தென் பக்கம் பிர்மகிரி பிர்ம முனிவர் ஆச்சிரமம், 129. இருப்பவல் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த ரோம வேங்கை மர மிருக்கிற இடத்திற்குப் பக்கத்தில் அம்பிடு தூரத்தில் செவல்த் தரையில் இருப்பவல்செடி இருக்கிறது. அதன் இலை அவலைப் போலிருக்கும். அதைச் சமூலம் பிடுங்கி அரைத்து இரும்புத் தகட்டிற்குள் பொதிந்து பழுக்கக் காய்ச்சி இதன் சாற்றில் சுருக்கிட்டு எடுத்து உருக்கிப் பயற்றங் கள்ளிச் சாற்றில் சாய்த்திட வெள்ளி போலாகும். மறுபடியும் அந்தச் சாற்றில் சுருக்கிட்டு இலையை அரைத்துக் கவசஞ் செய்து கெசபுடமிடச் செம்பாகும். அதைச் செந்தூரமாக்கிச் சாப்பிடத் தேகசித்தி யாகும்.

☞ கருவூரார் வாதகாவியம் 700 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

( இது வரையிலும் மகாலிங்கம் பிர்மகிரியின் எல்லை. )

## மகாலிங்கங் கோயில் தென்பக்கம் சித்தகிரி காலாங்கி நாதர் குகை, 130. சோதி விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தப் பிர்ம முனி வனத்திற்குத் தென் பக்கம் போகிற பாதையில் ஒரு நாழிகை வழி தூரம் மலைமேலேறினால் மலைச்சருவில் காலாங்கி நாதர் குகை இருக்கிறது. அக் குகைக்குப் போயவரைத் தெரித்துக்கொண்டு அந்தக் குகைக்குக் கீழ் பக்கம் அம்பிடு தூரத்திலிருக்குந் தசவேதி உதகச் சுனைக்குக் கீழ் பக்கமாகப் போனால் அம்பிடு தூரத்தில் சோதி விருட்ச மிருக்கிறது. அந்த விருட்சத்தின் குணங்களையும், அதைச் சாப்பிடும் முறைகளையும், 65 ம் நிர். ல் விபரமாகச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

☞ அகத்தியர் பூரணசூத்திரம் 216 ல் இதன்விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## மகாலிங்கங் கோயில் தென் பக்கம் சித்தகிரி காலாங்கி நாதர் தவசுக் குகை 131. சுணங்க விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் காலாங்கி நாதர் குகையி லிருந்து தெற்குமுகமாய்க் கூப்பிடுதூரத்தி லிருக்குந் தவசுக்குகைக்கு வட பக்கம் கற்குண்டு மலைகளிருக்கிறது. அந்த மலைக்கு கீழ் புரம் அடிவாரத்தில் சுணங்க விருட்ச மிருக்கிறது. அந்த விருட்சத்தின் தூர் கருப்பாகவும், இலை விரல் நீளத்தில் கருக்குகளுடன் தடிப்பாகவு மிருக்கும். அதன் கனி நாய்க்குட்டி போலிருக்கும் அந்தக் கனி பழுத்து கீழே விழும்போது நாய்க்குட்டி குலைத்தது போல் குலைத் துக் கொண்டு விழும் அப்படி விழுந்த பழம் 10 விநாடி நேரம் கிடந்து பின்னும் அவ்விருட்சத்தில் போய் ஒட்டி ரேகித்துக் கொள்ளும். அக் கனியைப் பரித்து அறுத்துப் பார்க்க வெண்ணை போலிருக்கும். அதைத் துட்டிடை வீதம் சாப்பிடப் பன்னிரண்டு நாள் வரைப் மூர்ச்சை யுண்டாகும் அந்தச் சமயம் சமீபத்தில் ஒரு ஆளிருந்து தேனும், பாலும், கலந்து மூர்ச்சை தெளியும் வரை கொடுத்து வரப் பதின்மூன்றும் நாளில் மூர்ச்சை தெளியும். தேக சித்தியாகும். சகல சித்துகளு முண்டாகும்.

☞ புலத்தியர் கற்பம் 300 ல் இதன் வியரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

(இது வரையிலும் மகாலிங்கம் சித்த கிரியின் யெல்லை)

## மகாலிங்கங் கோயில் கீழ் பக்கம் சத்தகிரி நந்தீசுபரர் ஆச்சிரமம், 132 கணை யெருமை விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தத் தவசுக் குகைக்கு வட பக்கம் வருகிற பாதை வழியே வந்தால், மகாலிங்கர் சந்நிதி வந்து சேரும். அதை விட்டுக் கிழக்கே போகிற பாதை வழியே வந்தால் அரை நாழிகை தூரத்தில் கன்னிமார் கோவிலும் பளிங்கர் குடிசைகளு மிருக் கிறது. அதிலிருந்து தெற்கே அரை நாழிகை தூரம் வந்தால் அநேக மரஞ் செடிகள் சூழ்ந்த நந்தீசுபரர் வன மிருக்கிறது. அவ் வனத் திற்கு மேற்றிசையில் அம்பிடு தூரத்தி லிருக்கும் மண் திட்டில் கணை யெருமை விருட்சமிருக்கிறது அந்த மரத்தின் குணங்களையும், சாப் பிடும் முறைகளையும், 54 நிர் ல் விபரமாகச் சொல்லி யிருக்கிறது. அந் தப்படி செய்யச் சித்தியாகும்.

☞ போகர் கற்பம் 300 ல் இதன் வியரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## மகாலிங்கங் கோயில் கீழ் பக்கம் சத்தகிரி நந்தீசுபரார் ஆச்சிரமம், 133. பவளத் துத்திச் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மண் திட்டுக்கு வட பக்கம் கூப்பிடு தூரம் வந்தால் பாங்கான மணல் தரை யிருக்கிறது. அதின் மேல் பக்கம் ஒரு ஓடை வருகிறது. அவ்வோடைக்கு மேல் பக்கம் நீர்த்தரை யிருக்கிறது. அந்த யிடத்திற்கு வட பக்கம் கூப்பிடு தூரத்தில் பவளத்துத்திச் செடிகளிருக்கிறது. அச் செடியானது ஒரு ஆள் உயரத்தில் வளர்ந்து துத்திச்செடி போலிருக்கும் அதனுருவ முழுவதுஞ் சிவப்பா யிருக்கும். இதனிலையைச் சூரணித்து வெருகடிப் பிரமாணம் ஆவின் நெய்யிற் குழப்பி ஒரு வாரம் சாப்பிடக் காய சித்தியாகும்.

( இது வரையிலும் மகாலிங்கம் சத்த கிரியின் எல்லை )

## மகாலிங்கங் கோயில் கீழ் பக்கம் சிவகிரி தன்வந்திரி ஆச்சிரமம், 134. உதிரவேங்கை மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த நந்தீசுபரார் வனத்திற்கு வட பக்கமாக வந்தால் கிழக்கே போகிற பாதையில் வந்து கூடும். அந்தப் பாதை வழியே அரை நாழிகை தூரம் வந்தால் பளிங்கர் பாறை இருக்கிறது. அப் பாறைக்கு நேர்முகமாகத் தெற்கே போனால் அநேக மரஞ்செடிகள் சூழ்ந்த வனத்தில் தன்வந்திரி முனிவர் ஆச்சிரமமிருக்கிறது. அவரைத் தெரிசித்துக் கொண்டு அதன் தென் பக்கமாக அம்பிடு தூரம் வந்தால். அங்கே உதிர வேங்கை மரமிருக்கிறது. அம் மரம் பெரியதாகவும், தூர் கருப்பாகவு யிருக்கும். அதை வெட்டினும் இரத்தம் போல் பால் பிறிட்டு வரும். அந்தப் பாலை எடுத்து வைத்துக் கொண்டு லோகங்களை யுருக்கிச் சாய்க்கக் களிம்பற்றுப் போம். அதைச் செந்தூரமாக்கி நெய்யிற் குழப்பிச் சாப்பிடத் தேக சித்தியாகும்.

☞ கருவூரார் வாதகாவியம் **700** ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## மகாலிங்கங் கோயில் கீழ் பக்கம் சிவகிரி தன் வந்திரி ஆச்சிரமம், 135. பொற்றலைக் கரிப்பான் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த உதிர வேங்கை மரத்திற்குப் பக்கத்தில் அம்பிடு தூரத்தில் கரும்பாறை யிருக்கிறது. அந்தப்

பாறைக்கு நேர் மேற்காக அடர்ந்த காடுகளிருக்கிறது. அந்தக் காட்டுக்குக் கீழ் பக்கம் ஒரு சுனை யிருக்கிறது. அந்தச் சுனைக்குத் தெற்கே கொஞ்சதூரம் போய் வடக்கே வந்தால் மண் தரை யிருக்கிறது. அதில் பொற்றலைக் கரிப்பான் செடிகளிருக்கிறது. அந்தச் செடியின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 25கிர். ல் விபரமாகச் சொல்லி யிருக்கிறது. அதன்படி செய்யச் சித்தியாகும்.

☞ யாகோபு சுண்ணக்காண்டம் 600 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

(இது வரையிலும் மகாலிங்கம் சிவ கிரியின் எல்லை)

## மகாலிங்கங் கோயில் கீழ் பக்கம் குபேரகிரி குருராச ரிசி ஆச்சிரமம், 136. கருநொச்சிச் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த தன்வந்திரி வனத்திலிருந்து வடக்கே வந்தால், நேரே கிழக்கே போகிற பாதைக்கு வந்து சேரும். அந்தப் பாதையிலிருந்து தெற்கே போகிற பாதைக்குப் போனால் வட பக்க மிருக்கிற கானலுக்கு எமபுரம் கானலென்று பெயர். இந்தக் கானலுக்குள் போகாமல், தென்புரம் கிழக்கே போகிற பாதை வழியே போனால், கூப்பிடுதூரத்தில், வாத மேடும் வெள்ளைப் பிள்ளையார் கோவிலு மிருக்கிறது. அவரைத் தெரிசித்துக் கொண்டு அதைக் கடந்து அம்பிடு தூரம் வந்தால் சதம்புத் தரை யிருக்கிறது. அதிலிருந்து நேரே தெற்காக வந்தால் அநேக மரங்கள் சூழ்ந்த குருராசரிசி வன மிருக்கிறது. அதற்குள் நுழைந்து அவரைத் தெரிசித்துக் கொண்டு அந்த வனத்திற்கு வட பக்கம் போய்ப் பார்த்தால் கருநொச்சிச் செடிகளிருக்கிறது. அந்தச் செடி மூன்றடி உயரத்தில் இலை கருப்பாக இருக்கும். இதன் வேரை எடுத்துச் சூரணம் செய்து, சிறு நீரிற் பிசைந்து, வெள்ளியுஞ் செம்பும் சேர்த்து உருக்கு முகத்திற் கொடுக்கப் பேதிக்கும். அதைச் செந்தூர மாக்கிச் சாப்பிடத் தேக சித்தியாகும்.

☞ புலத்தியர் கற்பம் 300 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

## மகாலிங்கங் கோயில் கீழ் பக்கம் குபேரகிரி குருராச ரிசி ஆச்சிரமம், 137. கருநாரத்தை மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கரு நொச்சிச் செடிக்குத் தென் பக்கம் அம்பிடு தூரத்தில், கரு நாரத்தை மரமிருக்கிறது. அம் மரம்

தூர் பெரிதாயும், கருப்பாயும், காய் பனங்காய் போலும், இலை இரண்டு பிளவாயும், புட்பம் கலர் வர்ணமாயு மிருக்கும். இதன் பழத்தைப் பிழிந்து சாரெடுத்துத் தலையிற் தேய்த்து முழுகி வர நரை திரை மாறும். செம்பை உருக்கி இந்தப் பழச்சாற்றிற் சாய்க்கப் பேதிக்கும். அதைச் செந்தூர மாக்கி நெய்யிற் குழப்பிச் சாப்பிடத் தேக சித்தியாகும். யானைப் பெலனுண்டாகும்.

( இது வரையிலும் மகாலிங்கம் குபேரகிரியின் எல்லை )

## மகாலிங்கங் கோயில் கீழ் பக்கம் சூரியகிரி கொங்கண மகா முனிவர் ஆச்சிரமம், 138. சோதி விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்ளே! அந்தக் குரு ராச ரிஷியின் வனத்திலிருந்து நேரே வடக்கு முகமாக வந்து கிழக்கே போகிற பாதையில் அரை நாழிகை வழி தூரம் போனால் அங்கே மண் மேடிருக்கிறது. அம் மேட்டுக்குப் பக்கத்தில் அநேக மரஞ்செடிகள் சூழ்ந்த வனத்தில் கொங்கணவ ராச்சிரம மிருக்கிறது. அங்கு போய் அவரைத் தெரிசித்துக் கொண்டு அதன் தென்பக்கம் அரை நாழிகை தூரம் போனால் அவ்விடத்தில் சோதி விருட்ச மிருக்கிறது. அந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 65 நிர். ல் விபரமாகச் சொல்லி யிருக்கிறது. அதன்படி செய்யச் சித்தி யாகும்.

## ம்காலிங்கங் கோயில் கீழ் பக்கம் சூரியகிரி கொங்கண மகா முனிவர் ஆச்சிரமம், 139. நாகதாளிச் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சோதி விருட்சத்தின் வட பக்கம் அம்பிடு தூரத்தில் பூஞ் சுனை யிருக்கிறது. அந்தச் சுனைக்கு வடபக்கம் சீயக்காய்ச் செடிப் புதரிருக்கிறது. அந்தப் 'புதருக்குத் தென்பக்கம் குத்துக்கல்லுபோலுள்ள பெரிய கல் இருக்கிறது. அந்தக் கல்லுக்குத் தென் பக்கம் போகும் பாதையில் அரை நாழிகை தூரம் போனால் மணல் தரை இருக்கிறது. அதில் நாகதாளி என்றொரு மூலிகை யுண்டு. அந்த நாகதாளியின் குணங்களையும், அதைச் சாப்பிடுகிற முறைகளையும், 51 நிர். ல் விபரமாகச்சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## சதுரகிரி மலை அடிவாரம் தபோவன மென்னும் மாவூற்று உதயகிரிச் சித்தர் 140. சோதி விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கொங்கணமகா முனிவரின் வனத்தை விட்டுக் கிழக்கே போனால் எல்லைக்கல் குட்ட மிருக்கிறது.

அதிலிருந்து தெற்கே போகிற பாதை வழியே போனால், மலைமேத் தாப்பிற்குப் போய்ச் சேரும். அம் மெத்தாப்பிற்குத் தென் பக்கச் சருவில் மூன்று நாழிகை தூரம் வந்தால் தபோவன மென்று பெயர் வழங்கும் மாவூற்றுக்குப் போய்ச் சேரலாம். அந்த மாவூற்றானது, சிவ பெருமான் சடா மகுடத்திலிருந்து, சித்தர்களுக்காக ஒரு துளி தீர்த்தத்தை விட அத் துளி தீர்த்தமானது ஊற்றாகி நாளடைவில் பெரிய தெப்பக்குளமாகப் பெருகி இருக்கிறது' அதில் ஒரு முறை தீர்த்தமாடினால் அநேக பாவங்கள் நீங்கும். ஏனென்றால் இந்தத் தலத்தில் அநேக முனிரிசிகளிருந்து யாகசாலை செய்து ஓமம் வளர்த்துத் தவஞ் செய்து சிவபெருமானைத் தெரிசித்த பின் நாங்கள் எப்பொழுதும் நீங்காமற் தெரிசிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டதற்காக எம்பெருமான் கிருபை கூர்ந்து மகாலிங்க மூர்த்தியாகத் தெரிசனங் கொடுத்துக் கொண்டிருப்பதால் புண்ணிய ஸ்தலங்களிற் சிரேட்டமானது மாவூற்றாகும் இந்த மாவூற்றுக்கு வட பக்க மிருக்கிற உதயகிரியில் நேர் வடக்காக மலைமேல் அம்பிடு தூரம் போனால் அங்கே குகையிருக்கிறது. அக் குகையில் உதயகிரிச் சித்தரிருக்கிறார். அவரைத் தெரிசித்துக்கொண்டு அதன் வட பக்கம் போனால் அங்கே சோதி விருட்சமிருக்கிறது. அந்த மரத்தின் குணங்களையும், சாப்பிடுகிற முறைகளையும், 65 நிர். ல் சொல்லியபடி செய்தால் சித்தியாகும்.

☞ அகத்தியர் பூரணம் 216 யென்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

( இது வரையிலும் தபோவன மென்னும் மாவூற்று யெல்லை )

## மகாலிங்கங் கோவில் கிழக்கே சூரியகிரி எல்லைக்குட்டம் பிருஞ்சக ரிசி ஆச்சிரமம் 141. சஞ்சீவி மூலிகைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குகைக்குக் கீழ்பக்கம் வருகிற பாதை வழியே அம்பிடு தூரம்போய், பின்பு வடக்கே போகிற பாதை வழியில் அரை நாழிகை தூரம் வந்தால், எல்லைக்குட்டமும், எமபுரம் கானலு மிருக்கிறது. அந்தக் கானலுக்கு மேல் பக்கம் கூப்பிடுதூரத்தில் சதம்புத்தரை யிருக்கிறது. அதின் வடபக்கம் பிருஞ்சக முனிவர் ஆச்சிரம மிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்கு வடகிழக்கு மூலையில் சதம்புத் தரையில் சஞ்சீவி மூலிகை யிருக்கிறது. அந்த மூலிகையின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 124 நிர். ல் விபரமாகச் சொல்லியிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

( இது வரையிலும் மகாலிங்கம் சூரிய கிரியின் யெல்லை. )

## மகாலிங்கங் கோவில் கிழக்கே குபேரகிரி ஆகாய கெவுனரிசி ஆச்சிரமம். 142. சிவந்தபுனல் முருங்கைக் கற்பம்

கேளுங்கள் முனிவர்களே! அந்த சதம்புத்தரைக்கு மேல் பக்கம் போகிற பாதை வழியே அம்பிடுதூரம் போனால், அங்கே ஒரு கல் யானை படுத்திருப்பதுபோலிருக்கிறது. அந்தக் கல்லுக்குத் தென்புரம் அம்பிடு தூரத்தில் சாலைத்தரையாயிருக்கிறது அந்தத் தரைக்கு வடபுரம் ஆகாய கெவுனரிசி ஆச்சிரமமிருக்கிறது. அந்தஆச்சிரமத்திற்குத் தென்புரம் அம்பிடு தூரத்தில் மண் கண்டமான தரையில் சிவந்தபுனல் முருங்கை மரங்களிருக்கிறது. அந்த மரங்களின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 45 நிர் ல் விபரமாகச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படிச் செய்யச் சித்தியாகும்.

( இது வரையிலும் மகாலிங்கம் குபேர கிரியின் எல்லை )

## மகாலிங்கங் கோவில் கிழக்கே சிவகிரி வெள்ளைப்பிள்ளையார் கானல் மேக சஞ்சாரரிசி ஆச்சிரமம்.

## 143. சேங்கொட்டை மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சாலைத்தரைக்கு நேர் மேற்காகக் கூப்பிடுதூரம் போனால் மலையோடை யிருக்கிறது. அந்த ஓடையைக்கடந்து அம்பிடு தூரத்தி லிருக்கிற ஆற்றோரத்தில் யானைக்குட்டியைப் போல், வெள்ளைப் பிள்ளையாரிருக்கிறார். அதைக் கிட்டப்போய் பார்த்தால் வெள்ளைப் பாறை போலும், கொஞ்சம் தூரத்தி லிருந்து பார்த்தால் பிள்ளையார் உருவமாயுந் தெரியும். அவரைக் கண்டு தெரிசித்து அதற்கு மேல்புரம் போகிற பாதைக்கு வடபக்கமாகப் பெரிய வனமிருக்கிறது. அந்த வனத்திற்குள் ளிருக்கிற மேக சஞ்சார ரிசி ஆச்சிரமத்திற்குப் பக்கத்தில் சேங்கொட்டை மரங்களிருக்கிறது. அந்த மரங்களின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 90 நிர். ல் விபரமாகச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

( இது வரையிலும் மகாலிங்கம் சிவகிரியின் யெல்லை )

## மகாலிங்கம் கிழக்கே சத்தகிரி வாதமேட்டுக்கானல் தத்துவ ஞானச் சித்தர் ஆச்சிரமம்,

## 144. சோம விருட்ச மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த வெள்ளைப் பிள்ளையார் கோயிலுக்கு மேற்காகப் போகிற பாதையில் ஒரு நாழிகை வழி தூரட

போனால் அங்கே பாதைக்கு வடபுரம் வாத மேடிருக்கிறது. அந்த மேட்டில் 18 சித்தர்களுஞ் சேர்ந்து ரசவாதம் செய்து பார்த்த இடம். இதில் வாதம் சுட்ட கல்லுகள், கருப்பு நிறத்துடன் குவியல் குவியலாகக் கிடக்கிறது. அது உருக்குக் கல்லுகளின் நிறம்போலிருக்கிறது அதை அடையாளமாகப் பார்த்துக்கொண்டு மேல் பக்கம் போகிற பாதை வழியே போனால், அம்பிடுதூரத்திற்குத் தென் பக்கமாகத் தத்துவஞானச் சித்தர் குகை இருக்கிறது. அந்தக் குகைக்கு மேல்புரம் சோம விருட்சமிருக்கிறது. அந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 70 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## மகாலிங்கங் கோயில் கிழக்கே சத்தகிரி காள மகா ரிசி ஆச்சிரமம், 145. கருவூமத்தைச் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குகையிலிருந்து வடக்கே போகிற பாதை வழியே, அரை நாழிகை வழி தூரம் போனால் அங்கே சிறு குட்ட மிருக்கிறது. அந்தக் குட்டத்தி லிருந்து நேர் மேற்குப் பாதையில் முக்கால் நாழிகை தூரத்திலிருக்கும் கன்னிமார் கோவிலுக்குத் தென்பக்கம் அம்பிடுதூரத்திலுள்ள காள மகா ரிசி ஆச்சிரமத்திற்கு மேல்பக்கம் கருவூமத்தைச் செடியிருக்கிறது. அந்தச் செடியின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 67 நிர். ல் சொல்லியிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும். அந்தக் கன்னிமார் கோயிலிலிருந்து கூப்பிடு தூரம் மேற்குமுகமாகப் போனால் மகாலிங்க சுவாமியின் சந்நிதிக்குப் போய்ச் சேரும்.

( இது வரையிலும் மகாலிங்கம் சத்தகிரியின் யெல்லை )

## சதுரகிரி மகாலிங்கங் கோயில் சுந்தர லிங்கம்.

கேளுங்கள் முனிவர்களே! இந்த மகாலிங்க மூர்த்தி யானவர் தபோ வன மென்னும் மாவூற்றில், கண்ணுவ மகா ரிசி முதலான தேவ ரிசிகள் அருந்தவஞ் செய்ததற்காக, சிவபெருமான் சித்தர் வேடம் தாங்கி வந்து, அநேக திருவிளையாடல் புரிந்து அந்த ரிசிகளுக்குத் தேவலோக வாழ்வைக் கொடுத்தனர். பின்னு மங்கிருந்த ரிசி முனி சித்தர்கள் வேண்டுதலுக்காக, அந்த மாவூற்றிலேயே மகாலிங்க மூர்த்தியாக அமர்ந்து வேண்டிய வரப்பிரசாதங் கொடுத்தும், பச்சைமா லென்ற யாதவனுக்குத் தெய்வ லோக வாழ்வு கொடுக்க வேண்டு மென்று, இந்தச் சதுரகிரிக்கு வந்து, பச்சமால் கோனுக்குத்

தெய்வலோக வாழ்வையும் கொடுத்து மகாலிங்க சொரூபமாயிருக்கிறு ராகையால், மாவூற்றிலிருக்கிற மகா லிங்கமும், இந்த மகாலிங்கமும் ஒன்றுதா னென்பதை அறியவும்

( இது வரையிலும் மகாலிங்கம் சதுரகிரியின் எல்லை )

## மகாலிங்கங் கோவில் வட பக்கம் இந்திரகிரி வீடண முனிவர் ஆச்சிரமம், 146. பாற்பட்டை மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த சதுரகிரி மகாலிங்கர் சந்நிதியி லிருந்து நேர் வடக்காகப் போகிற பாதை வழியே போனால் ஒரு ஆறு இருக்கிறது. அவ்வாற்றுக்குத் தென் புரமாக இரண்டு பாதை பிரிந்து போகிறது. அதில் மேற்கே போகிற பாதை தாணிப்பாறைக்குப் போகிற பாதையாகையால் அந்தப் பாதை செல்லாமல் வடக்கே போகிற பாதை வழியே போனால் 2 நாழிகை வழி தூரத்தில் குளி ராட்டிப் பொய்கை இருக்கிறது. அதற்குத் தெற்காக எல்லைக்குட்ட மிருக்கிறது. அந்த எல்லைக் குட்டத்தி லிருந்து மேற்கேகூப்பிடு தூரத் திலுள்ள வீடணமுனிவர் ஆச்சிரமத்திற்கு வட பக்கம் பால் பட்டை மரமிருக்கிறது. அம் மரத்தின் தூர் பெரிய தாயும், வெண்மை நிற மாயும். இலை இரண்டு விரற் கடை அகலமாயும், புட்பஞ் சிறிதாயும், காய் கடுக்காய்ப் பிரமாணமாகவும், பழம் வெண்மையாகவு மிருக்கும். இந்தப் பழத்தை பட்சிகள் சாப்பிடும். இந்த மரப் பட்டையின் மேற் பரணியைச் சீவிவிட்டு அரைத்துப் பாலில் கலக்கிச் சாப்பிடத் தேக சித்தியும் யானைப் பெலமு முண்டாகும்.

( இது வரையிலும் மகாலிங்கம் இந்திரகிரியின் யெல்லை )

## திருகைக்கல் பாறை துலுக்கன் மொட்டை யாகோபு முனிவர் ஆச்சிரமம் 147. அகில் மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தப் பால் பட்டை மரத்திலிருந்து வடக்கே ஒரு பாதையும் மேற்கே ஒரு பாதையும் போகிறது. அதில் வடக்கே போகிற பாதை வழியே போனால் முனீசுவரன் எல்லைக்குப் போகு மாகையால் அந்தப் பாதை வழியே போகாமல் மேற்கே போகிற பாதையில் அரை நாழிகை வழி தூரம் போனால் குபேரகிரி மலைக்குப்போய்ச் சேரலாம். அந்த மலைமேலிருந்து மேற்கு முகமாய்ப் போனால் அம்பிடு தூரத்தில் திருக்கைக் கல் பாறையும் அப் பாறைக் குச் சற்று தூரத்தில் துலுக்கன் மொட்டை யூரணியு மிருக்கிறது. அந்த ஊரணியில் தான் அம் மலையிலிருக்கிற மிருகங்களெல்லாம்

போய்த் தண்ணீர் குடிக்க வேண்டும். இந்த ஊரணியில் எந்தக் காலமும் தண்ணீர் வற்றாது இவ்வூரணிக்கு மேல்புரமாக யிருக்கும் யாகோபு முனிவர் ஆச்சிரமத்திற்கு வட பக்கம் அம்பிடு தூரத்தில் அகில் மரமிருக்கிறது. அந்த மரம் பெரியதாயும், இலை ஒரு அங்குல நெடுகமாகவும், காய் சுண்டைக்காய் போலவும் பருத்திருக்கும். இதைப் பட்சிகள் சாப்பிடும். இதன் கட்டையைச் சந்தணம் போல் அரைத்துத் தேகத்திற் பூசிவந்தால் சத்தில்லாமற் பருத்திருக்கிற தூலதேகத்தை இருகச் செய்து தேகத்திலுள்ள துர் நாற்றம், கால், கை முதலிய அசதியையும் நீக்கித் திட சரீரமாக்கும்.

( இது வரையிலும் சதுரகிரி திருகைக்கல் பாறை எல்லை )

கட்டளைக் கோம்பை மலை பிருங்கி மகா ரிசி ஆச்சிரமம்,

148. பாதிரி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த யாகோபு முனிவர் ஆச்சிரமத்திற்கு மேற்கே போகிற பாதையி லிருந்து அம்பிடு தூரத்தில், எருது விறட்டிக் கான விருக்கிறது. அக் கானலைக் கடந்து அரை நாழிகை வழி தூரம் போனால் சின்னவாழி பெரிய வாழி என்னுங் கானலுக்குட் போய்ச் சேரும். அவ்விடத்திற் பிருங்கி மகா ரிசி ஆச்சிரம மிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்கு மேல் பக்கமாக அரை நாழிகை வழி தூரத்தி லிருக்குந் தேக்கம்பண்ணை எல்லை யிலிருந்து வடக்கே போகிற பாதை வழியே போனால் அப்பாதை பண்டாரப்பன் கோவிலுக்குப் போய்ச் சேரும். அதிலிருந்து வட பக்கமாகக் கீழே யிறங்கி கூப்பிடு தூரம் போனால் வாழி மெத்தை தொழுக்கான விருக்கிறது அங்கிருந்து மேற்கே போகிற பாதை மார்க்கமாகப் போனால் கட்டளை கோம்பைக்குப் போய்ச் சேரலாம். அக் கோம்பைக்கு ஒரு நாழிகை வழி தூரத்தி லிருக்கிற யானைக் கெசத்திற்குள் பாதிரி மர மிருக்கிறது. அந்த மரத்தின் தூர் பெரிதாயும் இலை இரண்டு விரற்கடை யகலமும், புட்பம் மஞ்சள் நிறமாயும், குளிர்ந்த வாசனையாயு மிருக்கும். இதன் வேரைக் குளித்தைல மிறக்கிப் பணவிடை தைலமும், தேனுங் கலந்து மூன்று நாள் காலையில் மட்டும் சாப்பிடத் தேகசித்தி யாகும்

( இது வரையிலும் கட்டளைக் கோம்பை மலை எல்லை ]

வரிசை நாட்டு மலை காளிங்க மகா ரிசி

149. கடுக்காய் மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த யானைக் கெசத்தைக் கடந்து அரை நாழிகை வழி தூரம்போனால் கரும்பாறை யிருக்கிறது. அதி

விருந்து நேர் மேற்கே போனால், வரிசை நாட்டு மலைமேல் போய்ச் சேரும். அந்த மலைமேல் இரண்டு நாழிகை வழிதூரம் போனால் அங்குள்ள ஊர்கள் தெரியும் அதைப் பார்த்துக்கொண்டு ஒரு நாழிகை வழி தூரம் போனால், பால்வண்ணன் கோயிலிருக்கிறது. அதைக் கண்டு தெரிசித்துக் கொண்டு மேற்கே போகிற பாதை வழியே போனால் அங்கே பெரிய வனமும் அதற்குள் காளிங்க மகா ரிசி யாச்சிரமமும் இருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்குப் பக்கத்தில் கூப்பிடு தூரத்தில் சதம்புத் தரையில் கடுக்காய் மரங்களிருக்கிறது. அந்த மரத்தின் நிறம் கருப்பாகவும், இலை புரசு இலை போல் சிறிதாகவும், காய் வாதங்கொட்டை யளவில் வழு வழுப்பாயும் மஞ்சள் நிறமாயு மிருக்கும். இதன் பிஞ்சுக் காயை வெந்நீர்க் கிசாயமிட்டுக் கொடுக்க மல மிளகும் நுரை யீரல் நோய் விலகும். ஷெ கடுக்காயைப் பன்னிரெண்டு பல மெடுத்துக் கொட்டையை நீக்கி விட்டு அரைப்படி தண்ணீர் ஊற்றிக் காற்படியாக வற்றவைத்து இறக்கிக் கிசாயத்தில் சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், இஞ்சி, சிவதை, வகைக்கு ஒரு ரூபாயிடை சூரணித்துப் போட்டு ஆவின் நெய் அரைக்கால் படி விட்டுச் சர்க்கரை கொஞ்சம் போட்டு லேகியமாய்க் கிண்டிப் புன்னைக் காயளவு சாப்பிட்டுவரக் காயசித்தி யாகும்.

☞ போகர் கற்பம் **300** ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும்.

### வரிசை நாட்டு மலை கடமலைக் குண்டு மார்ச்சால மகா முனிவர் வனம், 150. தேற்று மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த சதம்புத் தரைக்கு மேற்கே பாதையில் இரண்டு நாழிகை வழி தூரம் போனால் மயிலாடும் பாறையிருக்கிறது. அப் பாறைக்கு மேற்கேயுள்ள சிற்றாறும் ஓடையுங் கடந்து ஒரு நாழிகை வழி தூரத்திலிருக்குங் கருங் கானலுக்குள் மார்ச்சால மகாரிசி ஆச்சிரம மிருக்கிறது. அதைக் கடந்து அரை நாழிகை தூரம் போனால் நரசிங்கபுரங் கோட்டை தெரியும். அந்த இடத்திலிருந்து கொங்கு ரேவுக் கானலுக்குப் போகிற பிரிவு பாதையுண்டு. அதைக் கடந்து போனால் ஒரு நாழிகை தூரத்தில் கடைமலைக் குண்டு இருக்கிறது. அதற்கு மேற்கே 2 நாழிகை வழி தூரத்தில் சோலை மலையான் கோம்பை யிருக்கிறது. அந்தக் கோம்பைக்கு வடபுறம் அம்பிடு தூரத்தில் தேற்று மரங்களிருக்கிறது. அந்த மரத்தின் தூர் சிறிதாயும், சாம்பல் நிறமாயும், இலை நவ்வல் இலைபோல்

வெண்மையாயும், சிறு புட்ப மாயும், காய் சுண்டக்காய் பெருமனு மிருக்கும். இதனுடைய கொட்டை வெண்மை நிறமயாயும், உருண்டையாயு மிருக்கும். இதன் கொட்டையைப் பாலில் ஊறவைத்து அரைத்துப் பாலில் கலக்கிச் சாப்பிடப் பித்தகாசம், ஈளை, இருமல் நீங்கிக் காயசித்தி யாகும்.

## வரிசை நாட்டு மலை கங்காள மகா முனிவர் ஆச்சிரமம் 151. சுரபுன்னை மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச்சோலை மலையான் கோம்பைக்கு மேற்கே போகிற பாதையில் 2 நாழிகை வழி தூரத்தில் போனால் எருது விறட்டி மலை யிருக்கிறது. அந்த எருது விறட்டி மலைக்கு வட பக்கம் ஒரு நாழிகை தூரத்தில் குதிரை மலைக் கானவிருக்கிறது. அதிலிருந்து பார்க்கச் சிப்பாலைக் கோட்டை தெரியும். அதிலிருந்து மலைமேலே இரண்டு நாழிகை வழிதூரம் போனால் செடி மரங்களடர்ந்த வன மிருக்கிறது. அந்த வனத்திற்குள் கங்காள மகா முனிவராச்சிரம மிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்கு வட பக்கம் ஒன்றரை நாழிகை வழி தூரம் போய் வடபுரமாய் நின்று பார்க்க வட்டப் பாறை தெரியும். அந்த வட்டப் பாறைக்கு மேற்கே கூப்பிடு தூரத்தில் சுரப்புன்னை மர மிருக்கிறது. அந்த மரம் புன்னை மரத்தைப் போலவே யிருக்கும். இலை புன்னை இலையைப் போற் சற்று பெரிதாயும். காய் புன்னைக்காய் போலுமிருக்கும். இதன் வேரைக் கியாயம் போட்டுச் சாப்பிட்டு வரச் சுரம் நீங்கும் காயசித்தி யாகும்.

( இதுவரையிலும் வரிசை நாட்டு மலை எல்லை )

## சுருளிமலை தேவ லோக கிரி கமலமா முனிவர் ஆச்சிரமம், 152. கல் தாமரைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தவட்டப் பாறையிலிருந்து சுருளிமலை எல்லை யாகும். இந்த வட்டப் பாறைக்கு வடபுரம் மேற்காகப் போகிற பாதையில் ஒரு நாழிகை வழி தூரம் போனால் குண்டாறு யிருக்கிறது. அந்தக் குண்டாறுக்கு வட புரம் சுனவேதி உதகச்சுனை யிருக்கிறது. அந்த உதகச் சுனைக்கு மேல் புரம் அம்பிடு தூரத்தில் கமலமா முனிவர் குகை யிருக்கிறது. அந்தக் குகையோரம் வட பக்கம் கல்தாமரை யிருக்கிறது. இந்தத் தாமரையின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும் 44 நிர். ல் விபரமாய் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## சுருளிமலை தேவலோககிரி வேதாந்த முனிவர் ஆச்சிரமம், 153. முண்டக விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கமல முனிவர் குகைக்கு மேல் பக்கம் போகிற பாதையில் ஒரு நாழிகை வழி தூரம் போனால், வன்னியூற் றிருக்கிறது. அந்த வன்னி யூற்றுக்கு மேல் பக்கம் அரை நாழிகை வழி தூரம் போனால், களாக்காய் வன மிருக்கிறது. அவ் வனத்திற்கு வட புரம் வேதாந்தச் சித்தர் குகை யிருக்கிறது. அந்தக் குகைக்கு வட பக்கம் வருகிற காநற்றுக்கு வட கரையின் கீழாக முண்டக விருட்ச மிருக்கிறது. அந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 46 நிர். ல் விபரமாகச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## சுருளிமலை தேவலோக கிரி பூத நாராயணச் சித்தர் ஆச்சிரமம், 154. செங்கொடி வேலிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் காநறுக்கு மேல்புரமாக உதகச்சுனை யிருக்கிறது. அந்த உதகச் சுனைக்குப் பக்கத்திலிருக்கிற மூங்கில் வனத்திற்கு வட பக்கம் இருநாள் வேதி உதகச் சுனை யிருக்கிறது. அந்தச் சுனைக்குப் பக்கத்தில் பன்னிப்பாறை யிருக்கிறது. அந்தப் பாறையி னருகாமையிலுள்ள காளி கானலுக்குள் பூத நாராயணச் சித்தர் குகையிருக்கிறது. அந்தக் குகைக்கு மேல் பாரிசம் செங்கொடி வேலிச்செடி யிருக்கிறது. இந்தச் செடியின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 27 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## சுருளிமலை தேவலோககிரி வியாச முனிவர் ஆச்சிரமம், 155. சுணங்க விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தப் பூத நாராயணச் சித்தர் குகைக்கு வட பக்கம் கூப்பிடு தூரத்தில் யானை படுத்திருப்பதுபோல் ஒரு கல்லிருக்கிறது. அந்தக் கல்லுக்கு மேற்குப் பக்கம் போகிற பாதையில் அரை நாழிகை வழிதூரம் போனால் வியாச முனிவர் குகை யிருக்கிறது. அந்தக் குகையோரமாயுள்ள ஓடையைக்கழித்து மேடேறினால் சமதளமான இடமிருக்கிறது. அந்த இடத்தில் சதம்புத் தரையில் சுணங்க விருட்ச மிருக்கிறது. அதன் குணங்களை யெல்லாம் 131 நிர். ல் சொல்லியிருக்கிறது அதன்படிச் செய்யச் சித்தியாகும்.

## சுருளிமலை தேவலோக கிரி கண்ணுவ மகா ரிசி ஆச்சிரமம், 156. சாயா விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சதம்புத்தரைக்கு வடபக்கமாய்ப் போகிற பாதை வழியாய்ப் போனால், மணல் தரை யிருக்கிறது. அந்த மணல் தரைக்குத் தென்புரமா யிருக்கிற அரியூற்றுக்கு மேல்புரம் பூஞ் சோலைகள் நிறைந்த கண்ணுவ மகா ரிசி வன மிருக்கிறது. அதற்குள் நுழைந்து தெரிசித்துக் கொண்டு போனால் அந்த வனத்திற்கு மேல் பக்கம் பூஞ்சுனை யிருக்கிறது. அந்தப் பூஞ் சுனைக்கு வட பக்கம் சாயா விருட்ச மிருக்கிறது. அந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 120 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## சுருளிமலை தேவ லோககிரி வசிட்ட மகா ரிசி ஆச்சிரமம் 157. செங்கற்றாழைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சாயா விருட்ச மிருக்கிற இடத்திற்குத் தென்பக்கம் மிருகப் புட விருக்கிறது. அந்த மிருகப் புடவுக்குப் பக்கத்தில் உதகச் சுனை யிருக்கிறது. அதற்கு வட பக்கம் அரை நாழிகை வழி தூரம் போனால்,வசிட்ட மகா ரிசி ஆச்சிரமமும், அதன் கீழ்பக்கம் செங் கற்றாழையு மிருக்கிறது. அந்தக் கற்றாழையின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 32 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## சுருளிமலை தேவலோக கிரி கபால நாதர் ஆச்சிரமம், 158. சோதி விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த வசிட்ட மகாரிசி ஆச்சிரமத்திற்கு வடபுரம் போகிற பாதையில் அம்பிடு தூரத்தில் ஒரு ஆறு வருகிறது. அந்த ஆற்றுக்குத் தென் கரையில் சமதளப் பாறை யிருக்கிறது. அந்தப் பாறை வழியே அம்பிடு தூரம் போனால் முண்டக வன மிருக்கிறது. அந்த வனத்திற்குத் தென் பக்கம் கபால நாதர் குகை யிருக்கிறது. அந்தக் குகைக்கு மேல் பக்கம் அம்பிடு தூரத்தில் திரிகாள் வேதி உதகச் சுனையும், அதற்கு வடபக்கம் கூப்பிடு தூரத்தில் சோதி விருட்சமு மிருக்கிறது. அந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 65 நிர். ல் விபரமாகச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

சுருளிமலை தேவலோக கிரி கைலாசப் புடவு இமயகிரிச் சித்தர், வனம் 159. செந்நாயுருவிச் செடிக் கற்பம்

கேளுங்கள் முனிவர்களே! அந்த ஆற்றுக்கு வடபுற மிருக்கிற மலையிலிருந்து கீழ் பக்கம் வருகிற பாதை வழியாக இறங்கினால் மலையடிவாரத்திற்குப் போய்ச் சேரலாம் அந்த அடிவாரத்தில் மலைமே லிருந்து ஒரு ஆறு வருகிறது. அந்த ஆற்றோரம் மகா கைலாசப் புடவும், அதன் முன்னாகப் பூத நாராயணச் சித்தர் ஆச்சிரமமு மிருக்கிறது அந்தப் புடவுக்குள் அனேக சித்தர்க ளிருக்கக்கூடிய விசாலமான இடமிருக்கிறது. என்று சொல்வதைக் கேட்ட நாகார்ச்சுன முனிவர்கள் சுவாமி இது வரை எத்தனையோ புடவுகளும், குகைகளும் ஆச்சிரமங்களுஞ் சொல்லி வந்தீர்கள். இந்தப் புடவை மட்டும் கைலாசப்புட வென்று சொன்னீர்களே அதன் விருத்தாந்தத்தைச் சொல்ல வேண்டு மென்று கேட்கக் கோரக்க முனீசுவரர் சொல்லுகிறார்.

கேளுங்கள் முனிவர்களே! கைலாசத்தில் இமயகிரிச் சித்தரென் றொருவ ரிருந்தார் அவர் சிவபெருமானைத் தினம் பூசிக்கப் பெற்றவர். அவர்மீது சிவபெருமானுக்குப் பிரிய முண்டு. அப்படி யிருக்கிற காலத்தில் துர்வாசமகா ரிசி, கண்ணுவ மகா ரிசி, முதலான ரிசிகள் சதுரகிரி யடிவாரம் தபோவன மென்னும் மாவூற்றில் யாகங்கள், எக்கியங்கள், வளர்த்துத் தவஞ் செய்தார்கள். அத் தவத்தை சிவபெருமான் கண்டு தவஞ் செய்த ரிசிகளுக்குத் தேவ லோக வாழ்வைக் கொடுத்துத் தாமும் அவ்விடத்தில் மகாலிங்க சொரூபமாய் அமர்ந்திருந்தார். அந்தச் சொரூபந்தான் இங்கே யிருக்கிற மகாலிங்க மாகும்.

பின்பு தேவலோக வாழ்வைப் பெற்ற ரிசி முனிவர்கள் மனமகிழ்வோடு கெவுன குளிகை யிட்டு அந்தர வெளியிற் போகையில் சுருளி மலையில் அனேக ரிசிகளும், முனிவர்களும் அருந்தவஞ் செய்துகொண் டிருப்பதையும், அந்த வன விசேடங்களையும், தேவலோகக் கானல்களையும், வனப் பூஞ்சோலைகளையும் சத்த கன்னிமார்கள் சிவ பெருமானுக்கு புட்ப மெடுத்துப் போகிற நேர்மைகளையும், உதகங்கள் மிகுதியா யிருப்பவைகளையும், அந்த உதகத்தி லிறங்கின மனிதர்கள் கல்லா யிருப்பவைகளையும் தெரிந்து சுருளிமலையி லிறங்கி யாவும் பார்த்து இந்தத் தலம் முக்கியமெனத் தெரிந்து அந்தச் சுருளிமலையில் சில வருடமிருந்து பின்பு தேவ லோகம் போய்ச் சேர்ந்திருக்குங் காலத்தில் ஓர் நாள் இமயகிரிச் சித்தர் கண்ணுவ மகா ரிசி முதலான

வர்களைக் கண்டு நமஸ்கரித்து சுவாமி நீங்களெங்கிருந்து வருகிறீர்களென்று வினவ, அதற்கு ரிசிகள் சொன்னதாவது. நாங்கள் தபோவனமென்னும் மாவூற்றி லிருந்து அருந்தவஞ் செய்து சிவபெருமானால் தேவ லோக வாழ்வைப் பெற்று வருகையில் சுருளி மலையிலிறங்கி அதன் பெருமைகளெல்லாம் பார்த்து மகிழ்வுற்று ஆங்கு சில வருடங்களாக யிருந்து வந்தோமென்று சொன்னதைக் கேட்ட இமயகிரிச் சித்தர் மனமகிழ்வு கொண்டு உடனே புறப்பட்டுச் சுருளிமலைக்கு வந்து ஆங்கு தவஞ் செய்து கொண்டிருக்கிற ரிசி முனி சித்தர்களையும் ஆச்சிரமங்களையும் வனச் சிறப்புகளையும் பார்த்து இங்கு சில வருடமிருக்கவேண்டு மென்று நினைத்து அங்கிருந்த சித்தர்களில் பூத நாராயணச் சித்தரை யழைத்துக்கொண்டு மலையிலிருக்கிற வனப் பூஞ்சோலைகளைக் கண்டு மகிழ்வுற்று மலையடி வாரம் வந்து தான் குகைவாசஞ் செய்வதற்குப் புடவு செய்வதாய் இடம் பார்த்து ஆற்றோரமிருக்கிற குண்டு மலையில் தலை மட்டும் நுழையும் படியாகவும் உள்ளே விசாலமாகவும் புடவு செய்து குகைக்கு முன்னாலே பூத நாராயணச் சித்தரைக் காவலிருக்கவைத்துச் சொன்னதாவது; இந்தக் குகைக்குள் வரவேணுமென்று விருப்ப முள்ளவர்கள் தவசிரேட்டரா யிருந்தால் மட்டும் இடங்கொடுக்கும் உள்ளே வரலாம். அல்லாதவர்கள் குகைக்குள்ளே தலையை யிட்டால் தலை நுழையாதென்று சொல்லி குகைக்குள் நுழைந்து தவஞ் செய்துகொண்டிருக்குங் காலத்தில் கைலாயத்தில் சிவபெருமானனவர் நம்மைத் தினந்தோறும் பூசிக்கிற இமயகிரிச் சித்தர் வரக்காணோமென்று ஞான திருஷ்டியால் சுருளிமலையி லிருக்கிறதாகத் தெரிந்து சித்தருக்கு வரப்பிரசாதங் கொடுக்கவேண்டுமென்று நினைத்து அம்மையாரும் சுவாமியும் சுருளிமலைக்கு வந்தார்கள். அப்போது ஆங்கு தவஞ்செய்து கொண்டிருந்த ரிசி முனி சித்தர்களுக்குத் தெரிந்து ஆச்சிரமத்தை விட்டுவந்து சிவபெருமானைக் கண்டு தெரிசித்திருக்கையில் அப்போது சிவபெருமான் சித்தர்களைப் பார்த்து அருந்தவ ரிசி முனி சித்தர்களே உங்கள் தவம் முடிந்தவுடன் தேவலோக வாழ்வு கொடுப்போமென்று சொல்லி விட்டு மாயா சொரூபமாய் இமயகிரிச் சித்தரிருக்கிற குகைக்குள் நுழைந்தார். அப்போது அங்கிருந்த ரிசி முனி சித்தர்க ளெல்லாரும் பார்த்துச் சிவ பெருமானே இந்தப் புடவுக்குள் நுழைந்தமையால் இந்தப் புடவு கைலாசப் புடவாகு மென்றுசொல்லிப் பெயர் வைத்தார்கள். அன்று முதல் இந்தப் புடவுக்குக் கைலாச புடவென்று பெயருண்டாயிற்று.

அந்தப் புடவுக்குள்ளே வந்த சிவபெருமானை இமைய கிரிச் சித்தர் கண்டு மெய் பதறி நடுநடுங்கி அடி வணங்கித் தெண்டனிட அவரைக் கூட்டிக்கொண்டு இருவரும் புடவை விட்டு வெளியே வந்து மைதானத்தில் பார்வதி சமேதராய் நின்று கொண்டு சித்தரைப் பார்த்து உனக்கு என்ன வரம் வேண்டுமென்று கேட்க அதற்குச் சித்தரானவர் சொன்னதாவது சுவாமி நான் இந்தச் சுருளிமலைப் புடவில் சில நாள் வசிக்கலாமென்று நினைக்கிறேன் ஆகையால் தாங்களை யான் கைலாயத்தில் தினமும் பூசித்துக்கொண்டு வந்த வழக்கப்படி இங்கேயும் பூசித்துக் கொண்டிருக்கும் படியான வரந்தான் வேண்டுமெனக் கேட்க அதற்குச் சிவபெருமானும் அம்மையும் அப்படியே கொடுத்தோமென்று வாக்கருளி சுவாமி லிங்க சொரூபமாயும், தாய் அம்மை சொரூபமாயும், அமர்ந்தனர். அதுகண்ட இமயகிரிச் சித்தர் அன்புற வணங்கித் தவராது பூசித்துக் கொண்டு வரும் நாளில் அதற்குத் திருப்பணி வேலையை முடித்துச் சித்தர்களெல்லா மிருந்து கும்பாபிசேகஞ் செய்து சுவாமிக்குச் சுருளியாண்டவ ரென்றும், அம்மனுக்குச் சுருளியம்மையென்றும் பெயரிட்டழைத்துப் பூசித்து வருகிறார்கள். அக் கைலாசப் புடவுக்கு நேராக அம்பிடு தூரத்தில் செந்நாயுருவிச் செடிகள் முளைத்திருக்கிறது. அந்தச் செடிகளின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 21 நிர். ல் சொல்லியிருக்கிறது. அந்தப் படி செய்யச் சித்தியாகும்.

## சுருளிமலை தேவலோக கிரி சுகப் பிர்ம ரிசி ஆச்சிரமம்,

## 160. அமுத வல்லிச் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கைலாசப் புடவுக்கு மேற்கு முகமாய்க் கூப்பிடு தூரம் போனால் ஒரு ஓடை யிருக்கிறது. அவ்வோடைக்கு வடபக்கமாகத் தெற்கே அம்பிடு தூரம் போனால் பாறை மலை யிருக்கிறது. அப் பாறை மலைக்குத் தென் மேற்காகப் போகிற பாதையில் அரை நாழிகை வழி தூரத்தில் சுகப்பிர்ம ரிசி ஆச்சிரமமிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்குத் தென் பக்க மிருக்குஞ் சரளைத் தரைக்கு மேல் பக்கமாகப் போகிற பாதையில் கூப்பிடு தூரத்திலிருக்கும் பக்கவேதி உதகச் சுனைக்கு வட பக்கம் அம்பிடு தூரத்திலுள்ள மண் கண்டத்தில் அமுதவல்லிச் செடிகளிருக்கிறது. அந்தச் செடிகளின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 103 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## சுருளிமலை தேவ லோக கிரி விசுவாமித்திர ரிசி ஆச்சிரமம், 161. இந்திரவீர மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மண் கண்ட மிருக்கிற இடத்திற்குத் தென் பக்கமாகப் போகிற பாதை வழியே போனால், அம்பிடு தூரத்திலிருக்கும் பெரிய வனத்திற்குள் விசுவாமித்திரர் ஆச்சிரம மிருக்கிறது. அவரைக்கண்டு தெரிசித்துக்கொண்டு அதற்கு மேல் பக்கம் போகிற பாதைவழியில் கூப்பிடு தூரம் போனால் உதகச் சுனை யிருக்கிறது. அச் சுனைக்குத் தென் பக்கம் அம்பிடு தூரத்திலுள்ள சதம்புத் தரையில் இந்திர வீர மரம் இருக்கிறது. அந்த மரத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 86 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## சுருளிமலை தேவ லோக கிரி மதங்க மகா ரிசி ஆச்சிரமம், 162. சிவந்த கீழ் காய் நெல்லிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சதம்புத் தரைக்கு மேல் பக்கம் போகிற பாதையில் அரை நாழிகை வழி தூரம் போனால் அங்கொரு ஓடை வருகிறது. அந்த ஓடையை வடக்கே தள்ளித் தெற்கே போகிற பாதையில் அம்பிடு தூரம் போனால் அங்கே குவிந்த மேடிருக்கிறது. அம் மேட்டின் மேலேறிக் கீழே இறங்கினால் அங்கே மாஞ் செடிகள் சூழ்ந்த கானலுக்குள் மதங்க மகா ரிசி ஆச்சிரமமிருக்கிறது. அவரைத் தெரிசித்துக்கொண்டு அதற்குத் தென்புரமாக யிருக்கும் பெரிய மலைமேலேறிப் பார்த்தால் அங்கிருக்கும் மண் கண்டத்தில் சிவந்த கீழ்காய் நெல்லிச் செடிகளிருக்கிறது அந்தச் செடியின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும் 73 நிர். ல் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## சுருளிமலை தேவ லோககிரி சாங்கிய மகா முனிவர் ஆச்சிரமம் 163. வசுவாசி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மண் கண்டத்தையும் சுருளி மலைச் சரிவையுந் தாண்டிச் சுருளிமலையின் மேலே போகிற பாதையில் போனால் அரை நாழிகை தூரத்தில் மாமுஞ் செடிகளு மடர்ந்த தேவ கானலும், வட்டப் பாறையு மிருக்கிறது. அந்தப் பாறைதான் தேவர்களிருந்து இரகசியம் பேசின இடமாகும். அதனோரமாகக் காசிப முனிவர் ஆச்சிரம மிருக்கிறது. அவ்வாச்சிரமத்திற்கு மேல் பக்கமாக ஒரு ஆறு வருகிறது. அந்த ஆற்றில் ஒருவரும் இறங்கக் கூடாது.

ஏனென்றால் அநேக உதக நீர்களும் இந்த ஆற்றில் வந்து சேர்ந்து வருகிறதாகையால் அதில் விழுந்த இலைகள் குச்சிகள் கல்லாகிக்கிடப்பதை அடையாளமாகக் காணலாம். சில குச்சிகளைப் பார்த்தால் பாதி குச்சியாகவும், பாதி கல்லாகவு மிருக்கும். அதைப் பார்த்துக் கொண்டு அவ்வாற்றுக்கு மேல் பக்கமாக வசுவாசி மர மிருக்கிறது. அம் மரத்திற்கு மீனை மரமென்றும் ஒரு பெயருண்டு அந்த மரம் பெரியதாயும், இலை விரலகலத்தில் சுணையுள்ளதாயு மிருக்கும். இதன் வேரைக் கிசாயம் போட்டுச் சாப்பிடக் காய சித்தியாகும்.

( இதுவரையிலும் சுருளி மலை எல்லை )

## குமிளி மலை கடுவெளிச் சித்தர் ஆச்சிரமம்,

### 164. கூமா மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! இந்தச் சுருளிமலையி லிருந்து நாலு நாழிகை வழி தூரம் போனால் குமிளி மலை யிருக்கிறது. அக் குமிளி மலை மெத்தாப்பில் கடுவெளிச் சித்தர் குகை யிருக்கிறது அக் குகைக்கு வட பக்கம் போகிற பாதை வழியிலிருக்குங் கருங் கானலுக்குள் நுழையாமல் மேல் பக்கம் போகிற பாதை வழியில் அரை நாழிகை வழி தூரத்தில் கசிவுத்தரையில் கூமா மரமிருக்கிறது. இந்த மரம் சிறியதாய் மாமரம் போலும், இலை மாவிலை போல் மினு மினுப்பாயு மிருக்கும். இதன் வேரை அரைத்துச் சாறெடுத்துத் தாமிரத்தை உருக்கிச் சாய்க்கச் சுத்தி யாகும். அதைச் செந்தூரம் செய்து சாப்பிடக் காயசித்தி யாகும்.

## குமிளி மலை அழுகண்ணிச் சித்தர் ஆச்சிரமம்,

### 165. கூட்டப் பிராமரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கசிவுத்தரைக்கு வட பக்கமிருந்து இரண்டு நாழிகை வழி தூரம் போனால் தேக்கடிக் கானலிருக்கிறது. அக் கானலுக்குக் கீழ் பக்கம் போகிற பாதையிலிருந்து அம்பிடு தூரத்தில் அழுகண்ணிச் சித்தர் குகை யிருக்கிறது. அந்தக் குகைக்குத் தெற்குப் பக்கத்தில் கூப்பிடுதூரத்தி லிருக்கிற களாவனத்திற்கு வட பக்கம் கூப்பிடு தூரத்தில், கூட்டப் பிராமர மிருக்கிறது. அதற்குச் சூளப் பிராமரமென்றும் பெயர். இம் மரம் சிறிதாயும் இலை மாவிலை போலு மிருக்கும். இதன் இலையை இடித்துச் சாறு வாங்கி வெள்ளைப் பாசாணத்திற்குச் சுருக்குக் கொடுக்கக் கட்டும். அதைக் கல்வத்திலிட்டு ஷை இலைச்சார்விட்டு அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து

இருபது எருவில் புடமிடப் பற்பமாகும். அதை மூன்று நாளைக்குத் தேனிற் குழப்பிச் சாப்பிடக் காயசித்தி யாகும்.

( இது வரையிலும் குமிளி மலையின் எல்லை )

## தேவி மலை கல்லுளிச் சித்தர் ஆச்சிரமம்,

### 166. சதுரக் கள்ளிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் களா வனத்திற்குக் கீழ் பக்கம் வருகிற பாதையில் மூன்று நாழிகை வழிதூரம் வந்தால் தேவி மலை யிருக்கிறது. அந்த மலைமேலேறி ஒரு நாழிகை வழி தூரம் வந்தால் குளிர் கான லிருக்கிறது. அக்கானலுக்கு வட பக்கம் வருகிற பாதை வழியில் பூஞ்சுனையும் அப் பூஞ்சுனைக்குக் கீழ்பக்கம் அம்பிடு தூரத்தில் கல்லுளிச் சித்தர் குகையு மிருக்கிறது. அக் குகையிலிருந்து அரை நாழிகை வழி தூரத்தில் அவுனிமலை யிருக்கிறது. அம்மலை யோரமிருக்கும் உதகச் சுனைக்குக் கீழ் பக்கம் அம்பிடு தூரத்தில் மண் மேட்டில் சதுரக்கள்ளி யிருக்கிறது. அந்தக்கள்ளி ஒரு ஆள் உயர மிருக்கும் அதன் புட்பம் பல வர்ணமாகவும் காய் சுண்டக்காய் போற் சிறிதாயு மிருக்கும். இந்தக் கள்ளிமரத்தைத் துளைத்து அதற்குள் வீரத்தை வைத்துக் கள்ளிச் சதையினால்மூடி ஒரு மாதஞ்சென்று எடுத்துப் பார்க்கக் கட்டிப் போகும். அதை எடுத்து இந்தப் பாலை விட்டரைத்து வில்லை செய்து காயவைத்து இருபது எருவில் புடமிடப் பற்பமாகும் இதைத் தேனிற் குழப்பிச் சாப்பிடத் தேக சித்தி யாகும்.

## தேவி மலை எக்கிய மகா முனிவர் ஆச்சிரமம்

### 167. வெள்ளைக் கண்டங் கத்திரிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மண் மேட்டுக்கு வட பக்கமாகப் போகிற பாதையில் ஒரு நாழிகை வழிதூரம் போனால் சிற்றாறு வருகிறது. அந்த ஆற்றுக்கு வடபக்கம்போகிற பாதை வழியிலிருக்கும் மிருகப் புடவுக்குக் கிழக்காக வருகிற பாதையிலிருந்து இரண்டு நாழிகை தூரத்திற் கப்பால் புத்தன் சேரி யிருக்கிறது. அதிலிருந்து வடபக்கம் போகிற பாதை வழியே போனால் அங்கொரு ஓடையும் அவ்வோடைக்கு வட பக்கம் பெரிய கானலும் அக் கானலுக்குள் எக்கிய முனிவர் ஆச்சிரமமும் இருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்கு மேல் பக்கம் போகிற பாதை வழி போனால் கோம்பை மலை இருக்கிறது. அந்தக் கோம்பை மலையின் மேலே நின்று பார்த்தால் அங்

குள்ள ஊர்கள் தெரியும். அந்த மலைக்கு மேற்கே போகிற பாதையில் போனால் தேவார மலைக்குப் போய்ச் சேரலாம். அதிலிருந்து தெற்கே போகிற பாதையில் அம்பிடு தூரத்தில் கசிவுத்தரையில் வெள்ளைக் கண்டங் கத்திரிச்செடி ஏராளமாயிருக்கிறது. அந்தச்செடி கண்டங்கத்திரிச் செடிபோ லிருந்தாலும் புட்பம் வெண்மையா யிருக்கும். அதைச் சமூலம் பிடுங்கிச் சாறெடுத்துத் தாமிரத்தை உருக்கிச் சாய்க்கக் களிம்பற்றுப்போம். அதை எடுத்துச் செந்தூரம் செய்து சாப்பிடக் குட்டரோகம் நீங்கும் காயசித்தி யாகும் யானைப் பெல முண்டாகும்.

( இது வரையிலும் தேவி மலை எல்லை )

## போடிநாயக்கனூர் மலை சமதக்கினி மகாரிசி ஆச்சிரமம்.

## 168. சோதி விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கசிவுத்தரைக்குக் கீழ் பக்கம் வருகிற பாதையில் மூன்று நாழிகை வழி தூரம் போனால் போடிமலை இருக்கிறது. அந்த மலை மேல் மேற்கே போகிற பாதையில் ஒரு ஆறு வருகிறது. அந்த ஆற்றைக்கடந்து ஒரு நாழிகை வழிதூரம் போனால் சரளைத்தரை யிருக்கிறது. அந்த இடங் கழித்து வட பக்கம் போகிற பாதையில் சமதக்கினி மகா ரிசி வன மிருக்கிறது. அந்த வனத்திற்குப் பக்கத்திலுள்ள ஓடையிலிருந்து மூன்று நாழிகை வழி தூரத்திலுள்ள கருங்கானலுக்குள் சோதி விருட்ச மிருக்கிறது. அந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 65 நிர். ல் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்

( இது வரையிலும் போடிநாயக்கனூர் மலையின் யெல்லை )

## கொட்டைகுடி மலை இடைக்காட்டுச் சித்தர் ஆச்சிரமம்,

## 169. தேற்று விரைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கருங் கானலுக்கு வடமேற்காக மூன்று நாழிகை வழிதூரம் போனால் அவுணி மலை யிருக்கிறது. அந்த மலைக்குத் தென் பாரிசமாக வருகிற பாதையில் அரை நாழிகை வழி தூரத்தில் மறக்கால் மலை இருக்கிறது. அதில் அநேக மூலிகைகளுண்டு. அவை யாவையும் பார்த்துக் கொண்டு அதன் தென் பக்கம் பாதையில் இரண்டு நாழிகை வழி தூரம் வந்தால் அங்கிருக்கும் ஆற்றுக்குக் கீழ் பக்கமாகப் போனால் கொட்டைக்குடி மலை யிருக்கிறது. அந்த மலைக்குத் தென் பக்கம் இடைக்காட்டுச் சித்தர் குகையும், அதன் நேராக அம்பிடு தூரத்தில் தேற்று மரங்களும் ஏராளமா

ருக்கிறது. இந்த மரத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளை யும், 150 நிர் ல் கூறி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

( இது வரையிலும் கொட்டை குடி மலை எல்கை )

## எட்டூர் மலை மவுத்கல்ய மகா ரிஷி ஆச்சிரமம்,

### 170. கருமருது மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குகைக்குக் கீழ்பக்கம் பாதை யில் இரண்டு நாழிகை வழி தூரம் வந்தால் கசிவுத்தரை யிருக்கிறது. அந்தக் கசிவுத் தரையைத் தாண்டி ஒரு நாழிகை வழி தூரத்தில் எட்டூர் மலை இருக்கிறது. அந்த மலைக்கு வட பக்கம் வருகிற பாதை வழியில் பெரிய கான விருக்கிறது. அதற்குள் மவுத் கல்ய மகா ரிஷி ஆச்சிரம மிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்கு மேற்கே யுள்ள பூஞ் சுனைக்குக் கிழக்கே பேச்சி கோவிலிருக்கிறது. அந்தக் கோவிலுக்கு மேல் பக்கம் சதம்புத் தரையில் கருமருது மரங்கள் ஏராளமா யிருக் கிறது. அந்தக் கருமருது மரம் மருதமரம் போல் சகலமும் இருந் தாலும், மரமும் புட்பமும் கருப்பா யிருக்கும். இதன் பட்டையை நருக்கிச் சட்டியில் போட்டு ஒரு படி தண்ணீர் ஊற்றி, அதில் சுக்கு, மிளகு, சீரகம், நிலவாகை, தாமரைக் கிழங்கு இவை வகைக்குக் கால் பலம் போட்டு அரைப்படி தண்ணீர் விட்டு வற்ற வைத்து வீசம்படி வீதம் சாப்பிட்டு வர அதிமூத்திரப் பிரமியம் நீங்கிக் காயசித்தியாகும்.

( இது வரையிலும் எட்டூர் மலை எல்கை )

## கொடைக்கானல் மலை சிவ வாக்கியர் ஆச்சிரமம்

### 171. கல்தாமரைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தப் பேச்சி கோவிலுக்கு வட பக்கம் வருகிற பாதையில் ஒரு நாழிகை வழி தூரம் போனால் கொடைக்கானல் மலை யிருக்கிறது. அந்த மலை மேலே போனால் நடு மத்தியில் சமவெளியாயும் மண் கண்ட மாயுமுள்ள செல்வி மலை யிருக்கிறது. அதில் மலை வேடுவர்கள் குடிசை கட்டிக் கொண்டிருப் பார்கள். அநேக வருக்கக் கனிகள் மிகுதியாயும், நறுமணம் வீசக் கூடிய புட்பசாதிகளு மிருக்கிறது. அந்தச் செல்விமலைக்கு வட பக்கம் ஒரு நாழிகை வழிதூரம் போனால் கூப்பிடு தூரத்திலுள்ள கருங்கான லுக்குள் சிவவாக்கிய முனிவர் ஆச்சிரமமும், அதன் பக்கத்தில் சதம்புத் தரையு மிருக்கிறது. அதில் கல் தாமரை இருக்கிறது. அந்தத் தாமரை யின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 44 நிர். ல் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

### கொடைக்கானல் மலை பரத்துவாச ரிசி ஆச்சிரமம்,

### 172. சிறியானங்கைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சமம்புத் தரையைக் கழித்துக் கீழ் பக்கம் ஒரு நாழிகை தூரம் போனால் கருங்கான லிருக்கிறது. அந்தக் கானலுக்குள் பரத்துவாச ராச்சிரமமும் அதன் மேல் பக்கம் மண் திட்டுமிருக்கிறது. அதன் பக்கத்தில் சிறியானங்கை மிகுதியா யிருக்கிறது. அதனாலே விசப்பாம்புகள் அந்தயிடத்தில் இருப்பதில்லை. அந்தச் சிறியானங்கை சிறு செடியாயிருக்கும் முள உயரம் வளர்ந் திருக்கும் இலை துளசி இலைபோல் கொஞ்சம் பெரிதாயும், புட்பம் நாக படம் போலும், அதற்குள் லிங்க மிருப்பது போலு மிருக்கும். அந்த இலையை அரைத்து மிளகு போற் குளிகைசெய்து காய்ந்த பின் தினம் ஒரு குளிகையாகச் சாப்பிட்டு வந்தால் விசப்பாம்புகள் ஒரு போதும் கடியாது. கடித்தாலும் விசம் ஏறாது. கடித்த பாம்பும் இறந்து போய்விடும்.

☞ கருவூரார் வாதகாவியம் 700 ல் இதன் விபரங்களைக் கூறி யிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

### கொடைக்கானல் மலை கூர்மானந்தர் ஆச்சிரமம்,

### 173. ஆயில்ய மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மண் திட்டுக்குத் தென் பக்கம் ஒரு நாழிகை வழி தூரத்திலுள்ள சருவி மலையோரமாய் வட பக்கம் ஒரு சுனை இருக்கிறது. அந்தச் சுனை எப்பொழுதும் வற்றாது. அந் தச் சுனைக்கு வட பக்கம் அம்பிடு தூரத்தில் கூர்மானந்தர் ஆச்சிரம மும் அந்த ஆச்சிரமத்திற்குத் தென் புரம் அரை நாழிகை வழி தூரத் தில் சதம்புத் தரையுமிருக்கிறது. அவ்விடத்தில் ஆயில்ய மர மிருக் கிறது. அம் மரம் தூர் பெரியதாயும், இலை நவ்வல் இலைபோல் சற்று பெரிதாயும், புட்பம் கொத்துக் கொத்தாய் சிறியதாயும், காய் இலந் தைக் காய் போல் கொஞ்சம் பெரிதாயு மிருக்கும். இதன் பட்டையை வெட்டி இடித்துச் சாறெடுத்து லிங்கத்திற்குச் சுருக்குக் கொடுக்கக் கட்டும். அதைச் செந்தூரம் செய்து சாப்பிடக் காயசித்தி யாகும்.

(இது வரையிலும் கொடைக்கானல் மலையின் எல்கை.)

### தாண்டிக்குடி மலை கற்க மகா முனிவர் ஆச்சிரமம்,

### 174. மயிலை மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சதம்புத் தரைக்குக் கிழக் காக வருகிற பாதையில் மூன்று நாழிகை வழி தூரம் போனால் நாடு

கண்டான் மலையில் போய்ச் சேரும். அதில் நின்று நாலு திசையும் பார்த்தால் பக்கத்திலுள்ள ஊர்கள் தெரியும். அம் மலைக்கு வடபக்கம் ஒரு நாழிகை வழி தூரம் போனால் சமதளப் பாதையில் அகமலை தெரியும் அந்த அக மலைக்குக் கீழ் பக்கமாகக் கரட்டு மலை யிருக்கிறது. அந்த மலையைக் கடந்து போனால் பல சாதி மரங்கள் சூழ்ந்த வனத்திற்குள் கற்க மகா முனிவர் ஆச்சிரம மிருக்கிறது. அதைக் கடந்து கீழ் பாரிசமாக இரண்டு நாழிகை வழி தூரம் போனால் தாண்டிக்குடி மலையில் போய்ச் சேரும். அந்த மலைக்குத் தென் கிழக்காக மரங்க ளடர்ந்த வனமிருக்கிறது. அந்த வனத்திற்குள் மயிலைமர மிருக்கிறது அந்த மரம் தூர் பெரிதாயும், இலை முக்கவராயும், புட்பம் வெண்மை யாய்ச் சிறிதாயும், காய் நெல்லிக்காய்ப் பருமனு மிருக்கும். இதன் காயைப் பிடுங்கி இடித்துச் சாறெடுத்து வைத்துக்கொண்டு சங்குப் பாசாணத்திற்குச் சுருக்குக் கொடுக்கக் கட்டும். அதைப் பற்பம் செய்து சாப்பிடக் காயசித்தி யுண்டாகும்.

( இது வரையிலும் தாண்டிக்குடி மலையின் யெல்லை )

## பூலத்தூர் மலை குமர சுந்தரர் ஆச்சிரமம்,

## 175. பிராய் மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த வனத்திலிருந்து தென்பக்கம் போகிற பாதையில் ஒரு நாழிகை தூரத்தில் மணலூற் றிருக்கிறது. அந்த ஊற்றுக்கு மேல் பக்க முள்ள ஓடைக்கு வட பக்கம் ஒரு நாழிகை வழி தூரம் போனால் பூலத்தூர் மலையில் கொண்டு வந்து விடும். அம் மலைக்கு வட பக்கம் போகிற பாதையில் ஒரு நாழிகை வழி தூரத்திலிருக்கிற பெரிய காவுக்குள் குமர சுந்தரர் ஆச்சிரமும் அதற்கு வட பக்கம் கூப்பிடு தூரத்தில் ஒரு ஆறும் வருகிறது. அந்த ஆற்றுக்கு மேல் பக்கம் சதம்புத் தரையில் பிராய் மர மிருக்கிறது. அந்த மரம் சிறிதாயிருக்கும். இந்த மரத்தின் வேர்ப் பட்டையை எடுத்து இடித்துச் சாறெடுத்துத் தாளகக் கட்டிக்கு இருபது தடவை சுருக்குக் கொடுக்கக் கட்டும். அதை இந்தச் சாறு விட்டு அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து பத்தெருவில் புடம்போடப் பற்பமாகும். இதை நெய்யில் குழப்பிச் சாப்பிடக் காய்சித்தியாகும்

☞ ஞான சாத்திரத்திரட்டு 9 வது பாகத்திலுள்ள கருவூரார் குரு நூல் சூத்திரம் 150ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

( இது வரையிலும் பூலத்தூர் மலையின் எல்லை )

## அய்யம் பாளையம் பூரணச் சித்தர் ஆச்சிரமம்,

### 176. கேந்திரவல்லிக் கொடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த ஆற்றுக்குத் தென்புரம் போகிற பாதையில் ஒரு நாழிகை வழிதூரம் போனால் அங்கே பெருங்கான லிருக்கிறது. அந்தக் கானலுக்குள் நுழையாமல் கானலின் வடபக்கம் போகிற பாதையில் இரண்டு நாழிகை தூரம் போனால் வியல மலையில் கொண்டுவந்து விடும். அந்த மலையில் வெள்ளைப் பாறையிருக்கிறது. அந்தப் பாறைமேல் நின்று பார்த்தால் கங்குவார்பட்டி தெரியும். அதைப் பார்த்துக் கொண்டு வட பக்கம் வருகிற பாதையில் ஒரு நாழிகை வழி தூரம் போனால் குமிளமலையில் கொண்டு வந்து விடும். அந்த மலையில் உச்சப்பாறை யிருக்கிறது. அதில் நின்று பார்த்தால் அய்யம் பாளையம் தெரியும். அந்தப் பாறைக்கு வட பக்கம் பெரிய கானலும், அதற்கு வட பக்கம் பூரணச்சித்தர் ஆச்சிரமமு மிருக்கிறது. அந்த ஆச்சிரமத்தி லிருந்து அரை நாழிகை தூரத்தில் கேந்திர வல்லிக் கொடிக ளிருக்கிறது. அந்தக் கொடி விரல் பருமன் வெண்மை யாய்ப் படர்ந்திருக்கும். இலை வட்டமாயிருக்கும் இதன் சமூலம் இடித்துச் சாறு வாங்கி வைத்துக்கொண்டு இரும்பை லேசாய்த் தகடு தட்டிப் பழுக்கக் காய்ச்சி அதில் பத்துத் தடவை சுருக்குக் கொடுத் தெடுத்துக் கல்வத்தில் வைத்து இந்தச் சாறை விட்டரைத்து வில்லை தட்டிக் காயவைத்து 20 எருவில் புடமிடப் பற்ப மாகும். அதை நெய்யிற் குழப்பிச் சாப்பிடக் காய சித்தியாகும்.

(இது வரையிலும் அய்யம்பாளையம் மலையின் யெல்லை)

## தொட்டப்பனூர் மலை ஆத்ம ஞானச் சிததர் ஆச்சிரமம்,

### 177. கெட்டிவஞ்சி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! இது வரை அய்யம் பாளையம் மலை எல்லை வரை சொல்லி வந்தேன்; இனித் தொட்டப்ப நாயக்கனூர் தொடர்பு சொல்லுகிறேன் கேளுங்கள். ஆண்டிபட்டி வாசி மலை மேலேறிக் கூப்பிடு தூரத்தில் நந்தி மலை யிருக்கிறது. அந்த மலைக்கு வடபுரம் பாதையில் ஒரு நாழிகை வழி தூரத்தில் ஆத்ம ஞானச் சித்தர் குகையும் அதற்கு மேல் பக்கம் போகிற பாதையில் மூன்று நாழிகை வழி தூரம் போனால் ஏத்தக் கோவில் மலையு மிருக்கிறது. அந்த மலையில் வட பக்கம் போகிற பாதையில் அம்பிடு தூரம்போனால் காளி கோவிலிருக்கிறது அதன் தென் பக்கம் போகிற பாதையில் இரண்டு நாழிகை தூரம் போனால் பாலைக் கோம்பை மலை யிருக்கிறது.

அந்த மலைக்கு வடபக்கம் அரை நாழிகை வழி தூரத்தில் மாவூற்று வேலப்பர் மலை இருக்கிறது. அங்கே வேலப்பர் கோவிலைக்கண்டு தெரிசித்து அந்தக் கோவிலுக்கு வடபக்கம் கூப்பிடு தூரத்தில் கெட்டி வஞ்சி மர மிருக்கிறது. அந்த மரம் கப்புங் கவருமாகப் பெரியதா யிருக்கும். புட்பம் வெண்மையா யிருக்கும். இலை முக்கவரா யிருக்கும். இதன் பட்டையைச் சாறெடுத்துச் சூதத்திற்குச் சுருக்குக் கொடுக்கக் கட்டும். அதைச் செந்தூரம் செய்து சாப்பிடக் காயசித்தி யாகும்.

(இது வரையிலும் தொட்டப்பனூர் மலை எல்லை)

## கண்டமனூர் மலை சவுனக முனிவர் ஆச்சிரமம்,

## 178. கொஞ்சி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த வேலப்பர் கோவிலுக்கு வடபுறம் போகிற பாதையில் மூன்று நாழிகை வழி தூரத்தில் பெருமாளூற்று மலை யிருக்கிறது. அந்த மலைச் சருவிலே வந்தால் அரியூற்றிருக்கிறது. அந்த ஊற்றுக்கு வட பக்கம் வருகிற பாதையில் ஒரு நாழிகை தூரத்தில் ஒண்டிக் காட்டு மலை யிருக்கிறது. அந்த மலைக்குத் தென் பக்கம் போகிற பாதை வழியில் கண்டமனூர் மலை இருக்கிறது. அந்த மலைக்குப் பொன் மலை என்றும் பெயர். இந்த மலைத் தொடர்பானது மலையாள மலை எல்லை வரை யிருக்கிறது. இந்த மலையில் முளைத்திருக்கிற கற்ப மூலிகைகளை யெல்லாம் மலையாள எல்லையிலே சேர்த்து முன்னம் சொல்லி இருக்கிறேன். இந்தப் பொன் மலையில்முளைத்திருக்கிற கற்ப மூலிகைகளை மட்டுங் கேளுங்கள் இந்த மலைமேல் போகிற பாதையில் ஒரு நாழிகை வழி தூரம் போனால் சவுனக முனிவர் ஆச்சிரம மிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்கு மேல் பக்கம் சமதளமான இடத்தில் கொஞ்சி மர மிருக்கிறது. அதன் தூர் பெரிதாயும், இலை முக்கவராயு மிருக்கும். இதன் பட்டையைச் சூரணம் செய்து தாளகத்திற்குக் கீழு மேலும் போட்டுச் சேலை மண் செய்து பத் தெருவிற் புடமிடப் பற்பயாகும். அதை நெய்யிற் குழப்பிச் சாப்பிடக் காசம் நீங்கும் காயசித்தியாகும்.

## கொம்புதூக்கி மலை அறிவானந்தச் சித்தர் ஆச்சிரமம்,

## 179. தொனியா மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சமதளமான பாதைக்கு வடமேற்காகப் போகிற பாதையில் கருமலை யிருக்கிறது. அந்த மலைக்குத் தென்பக்கம் போகிற பாதையில் இரண்டு நாழிகை வழி தூரம் போனால்

கொம்பு தூக்கி மலையில் கொண்டு போய் விடும். அந்த மலைக்குக் கீழ் பக்கம் போகிற பாதையில் இரண்டு நாழிகை வழிதூரம் போனால் இராமக்கல் வெள்ளைப் பாறையில் கொண்டுபோய்ச் சேர்க்கும். அந்த மலைக்குத் தென் பக்கம் பல மரங்கள் சூழ்ந்த கருங்கானலுக்கு மேல் பக்கமாக அரிவானந்தச் சித்தர் ஆச்சிரமமிருக்கிறது. அதன் வட பக்கம் தொனியா மரமிருக்கிறது. அந்தமரத்தின் தூர் பெரிதாயும், இலை மூக்கவராயும் புட்பம் சிறிதாய் வெண்மையாயு மிருக்கும். அம்மரத்தினிடத்திலே போய் நிற்கப் பெரிய காற்றடித்த போதிலும் மரத்தில் தொனி கொடாது. இந்தமரத்தின் இலையைப் பிடுங்கிக் கிசாயம் போட்டுச் சாப்பிடக் காயசித்தி யாகும். இந்த மரத்தை வெட்டினால் பால் வடியும் அந்தப் பாலைக் காசிடை காலை, மாலை, சாப்பிட்டு வர யானைப் பெல னுண்டாகும்.

( இது வரையிலும் கண்டனூர் மலை எல்கை. )

## மதுரை

கேளுங்கள் முனிவர்களே! இதுவரை மேற்குப்பக்க மலையாவுஞ் சொன்னேன் இனிக் கன்னிவாடி மலையிலிருந்து சொல்லுகிறேன் அதனைச் சொல்லிக் கொண்டு போனால் மதுரை எல்லையிலிருக்கிற சில மலைகளின் விசித்திரங்களையும் மூலிகை கற்பங்களையுஞ் சொல்ல முடியாது ஆகையால் மதுரையி லிருந்து கொல்லி மலை வரை சொல்லுகிறேன். கேட்பீராகவும் திருவாலவாய்ச் சேத்திரமென்னும் மதுரையில் அறுபத்தி நான்கு திருவிளையாடல் நடந்திருக்கிறது. ஆதியில் சுந்தரேசுவரர் கடம்பவனக் காட்டில்வந்து திருவுருக்கொண்டனர் இவர்திருவுருவைக் கண்ட பாண்டியர்கள் மீனாட்சி யம்மைக்கும், சோமசுந்தரருக்கும், அற்புதமான கோவிலுங் கோபுரமுங் கட்டிச் சகல பாவங்களையும் தீர்க்கக் கூடிய பொற்றாமறைப் பொய்கையையுங் கருங்கல்லுகளால் கட்டி முடித்தனர். மேலும் இதில் முத்தமிழ் சங்கத்தார்களும் வாசஞ்செய்த நகர மாகையால் இது ஒரு முக்கியமான தலமாகும். இங்கே அம்மனையும், சுவாமியையும் தெரிசித்துக் கொள்ளவும்.

## பசுமலை பவணிச் சித்தர் ஆச்சிரமம்,

### 180. பொன் மணல் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! இந்த மதுரைக்குத் தென் பக்கம் திருப்பரங் குன்றத்திற்குப் போகிற பாதையில் 2 நாழிகை வழி தூரத்தில் பசுமலை யிருக்கிறது. அந்த மலையானது கிழக்கே ஒரு மலையும்,

மேற்கே ஒரு மலையுமாக யிருக்கிறது. மேற்கே யிருக்கிற மலையில். உச்சத்தில் பவணிச் சித்தர் ஆச்சிரம மிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்குப் பக்கத்தில் கருப்பணசாமி கோவிலிருக்கிறது. அத்தக் கோவிலுக்கு வட பக்கம் அம்பிடு தூரத்தில் ஒரு முள ஆழம் வெட்டினல் அங்கே பொன்னிறமான மண் உண்டு. அந்த மண் வரும்வரை வெட்டி எடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து வில்லை தட்டிக் காயவைத்து 30 எருவில் புடமிடக் களங்காகும் அந்தக் களங்கைக் கல்வத்திலிட்டு ஷை சாறு விட்டரைத்து வில்லை தட்டிக் காயவைத்து 30 எருவில் புடமிடச் செந்தூரமாகும் அதை நெய்யிற் குழப்பிச் சாப்பிடக் காயசித்தியாகும்.

## திருப்பரங்குன்றம் காசி விசுவ நாதர் மலை ஆச்சிரமம்,

### 181. பிரம தருக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தப் பசுமலைக்குத் தென் பக்கம் பாதை வழி போனல் பரம்பு மலை யிருக்கிறது அந்த மலைக்குத் தென் பக்கம் திருப்பரங் குன்ற மலை யிருக்கிறது. அந்த மலைக்கு வட பக்கம் சுப்பிரமணியர் கோவி லிருக்கிறது. அந்தச் சந்நிதிக்குக் கீழ் பக்கம் சரவணப் பொய்கை இருக்கிறது ஷை சந்நிதிக்கு மேல் பக்கம் மலை மேல் போகிற பாதையில் ஒரு நாழிகை வழி தூரம் மலை மேலே ஏறிப் போனல் அங்கே சமதளமான இட மிருக்கிறது அந்த இடத்தில் சில மரங்களும் மூலிகைகளு முண்டு. அதைக் கடந்து தென் பக்கம் போகிற பாதை வழியில் அரை நாழிகை வழி தூரத்தில் மலைச் சருவு ஓரமாய் காசி விசுவநாதர் ஆச்சிரமமும், அதன் வடபக்கம் எந்நாளும் வற்ருத சுனையு மிருக்கிறது. அந்தச் சுனையில் தீர்த்தமாடிக் கொண்டு காசி விசுவநாதரைத் தெரிசித்துக் கோவிலுக்குக் கீழ் பக்கமாக வந்தால், அம்பிடு தூரத்தில் பிரம தரு இருக்கிறது. இதன் தூர் பெரிதாயும், இலை முக்கவராயும் புட்பம் நான்குவித இதழ்களோடு வாசனையா யிருக்கும். இந்தப் பூவைப் பாலில் போட்டுக் காய்ச்சிச் சாப்பிட்டு வரக் காயசித்தி யாகும்.

## நாகமலை கெவுனச் சித்தர் ஆச்சிரமம்,

### 182. தைலக் கிணறுக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தத் திருப்பரங் குன்றம் மலையிலிருந்து வட பக்கம் 5 நாழிகை வழி தூரத்தில் நாகமலை இருக்கிறது. அந்த மலை அடிவாரத்தில் தாடகை நாச்சியம்மன் கோவிலிருக்கிறது. அந்த அம்மனைத் தெரிசித்துக் கொண்டு மலை ஏறினல் 5 தலை நாகம்

போல் மலை யிருக்கும். அந்த மலை மேல் ஒரு நாழிகை வழி தூரம் போனால் கெவுனச் சித்தர் ஆச்சிரம மிருக்கிறது. அதன் பக்கத்தில் குகை போலத் தைலக் கிணர் இருக்கிறது. அந்தக் குகை யோரமா யிருந்து பஞ்சாட்சர மந்திரத்தை 1008 உருச் செபிக்கத் தைலக் கிணர் தெரியும். அந்தத் தைலத்தை இரும்புக் கிண்ணத்தில் எடுத்துச் செம்பு உருக்கு முகத்தில் கொடுக்கப் பத்து வயதாகும். அதைச் செந் தூரம் செய்து தேனிற் கொள்ள நரை திரை மாறும். அந்தக் குகைக்கு வடபுரம் புல்லூற்றுச் சுனை ஓடுகிறது. அதற்கு நேர் மேற்காகப் பாவ கிரி தீர்த்தம் வடக்கே வந்து விழுகிறதைப் பார்த்துக் கொண்டு திரும் பவும் கிழக்கே ஏழு நாழிகை தூரத்திலுள்ள மதுரை வந்து சேர வேண்டியது.

## யானை மலை பண்டரி நாதர் ஆச்சிரமம்,
## 183. கருக்கு வாச்சி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மதுரையிலிருந்து கிழக்கேஐந்து நாழிகை தூரம் போனால் அங்கே யானையைப் போல் ஒரு மலையிருக் கிறது. அதன் வாயில் சித்தர்கள் வாசஞ் செய்யும் குகை யிருக்கிறது. அந்த மலையோரமாக அரை நாழிகை தூரம் போனால் நரசிங்கப் பெரு மாள் சந்நிதியும், அதனருகில் பொய்கையு மிருக்கிறது. அந்த நரசிங் கப்பெருமாள் சந்நிதிக்குப் பக்கத்தில் பண்டரி நாதச் சித்தர் ஆச்சிரம மிருக்கிறது. அவரைத் தெரிசித்த பின் மலைமேலேறிக் கிழக்கே வால் பக்கமாய் ஒரு நாழிகை தூரம் வந்தால் அந்த யிடத்தில் கருக்கு வாச்சி மர மிருக்கிறது. அந்த மரத்தின் இலை மூன்று விர லகலத்தில் இலை யைச் சுற்றிக் கருக்கு களாயும், புட்பம் வெண்மை நிறமாயும், காய் சிறி தாயுமிருக்கும். அக் காயைப் பிடுங்கி இடித்துச் சாறெடுத்து வெள்ளித் தகடு தட்டி அதற்கு 20 தடவை சுருக்குக் கொடுத்துக் கல்வத்தில் வைத்து அந்தச் சார் விட்டரைத்து வில்லை தட்டிக் காய வைத்துக் கெசபுடம் போட்டெடுக்கப் பற்பமாகும். அதை நெய்யிற் குழப்பிச் சாப்பிடக் காய சித்தியாகும்.

## நரசிங்க மலை சிவனேசச் சித்தர் ஆச்சிரமம்,
## 184. ஊக்குணு மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த யானை மலைக்குக் கிழக்கே போகிற பாதையில் இரண்டு நாழிகை தூரம் போனால் அங்கே நரசிங்க மலை யிருக்கிறது. அதன் ஓரமாக அரை நாழிகை தூரத்தில் சிவனேசச் சித்

தர் குகை யிருக்கிறது. அதைக் கடந்து மலை மேலே 2 நாழிகை தூரம் வந்தால் அப்பால் வால்போலே சிறு குண்டுகளிருக்கும். அங்கே போகாமல் குகைக்கு வட பக்கமாக வந்தால் சரிவுப் பாதையில் ஊக்குணு மர மிருக்கிறது. இந்த மரத்திற்கு நக்கிஞு மரமென்றும் ஒரு பெயருண்டு. இதன் பட்டை நாலு விரற்கடைக் கனமாயும், சிவப்பாயு மிருக்கும். அந்தப் பட்டையை உதறினுல் தண்ணீர் விழும். இதனிலை வட்டமாயும், புட்பம் சிவப்பாயும், சிறியதாயு மிருக்கும். இதன் பட்டையை வெட்டிச் சாறு வாங்கிப் பசுவின் பாலில் கலந்து சாப்பிட மேக ரோகங்களைக் கண்டிக்கும், காய சித்தியாகும்.

## கிடாரி மலை சிவப்பிரகாசச் சித்தர் குகை,

## 185. தைலக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த நரசிங்க மலைக்கு வட பக்கம் இரண்டு நாழிகை தூரம் போனுல் கிடாரி மலையிருக்கிறது. அந்தமலை மேல் அரை நாழிகை தூரம் போனுல் அங்கே சிவப்பிரகாசத் சித்தர் குகையும், அக் குகைக்குள் சுனையும், தைலக் கிணறு மிருக்கிறது. அந்தக் குகைக்குள்ளே போய்ப் பஞ்சாட்சர மந்திரத்தை 1008 தடவை உருச் செபித்தால் தைலக் கிணற்றுக்குப் போக இடங்கொடுக்கும். அந்தக் கிணற்றில் இரும்புக் கிண்ணத்தால் தைலம் எடுத்துக் கொண்டு செம்புத் தகட்டைப் பழுக்கக் காயவைத்துக் சுருக்கிடப் பழுக்கும். இதைச் செந்தூரமாக்கிச் சாப்பிட நரை,திரை மாறிக் காயசித்தியாகும்.

( இது வரையிலும் கிடாரி மலை எல்லை )

## அழக மலை மேரு கிரிச் சித்தர் ஆச்சிரமம்,

## 186. சோதி விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கிடாரி மலைக்கு வடக்காக இருக்கிற அழகர் மலையானது வடக்கே குறுகியும் மேற்கே நீண்டு மிருக்கிறது. அந்த மலைமேல் அனேக மரஞ்செடிகள் சூழ்ந்த இருண்ட கான விருக்கிறது. அந்தக் கானலுக்கு நேர் வடக்காக இருக்கிற மலைமேல் அத்திக் கோம்பை யிருக்கிறது. அதற்கு வடபக்கம் கூப்பிடு தூரத்தில் மேரு கிரிச் சித்தர் குகையும், அக் குகைக்கு அம்பிடு தூரத்தில் சோதி விருட்சமு மிருக்கிறது. இந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 65 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது அந்தப்படி செய்யச் சித்தியாகும். இந்த அத்திக் கோம்பைக்குத் தென் பக்கம் போகிற பாதை வழியே போனுல் அழகர்

கோவிலிற் கொண்டுவந்து விடும். அந்தக் கோவிலுக்குக் கிழக்கே வந்தால் காவல் கருப்பன் சந்நிதி யிருக்கிறது. அதன் பக்கம் சந்திர புட்கரணி யென்னும் பொய்கை யிருக்கிறது. அதனேரம் மேற்கே கெவிக்குள்ளே போகிற பாதை வழியே அரை நாழிகை தூரம் போனால் அழகர் மலைமேல் கொண்டு போய்ச் சேர்க்கும்.

## அழகர் மலையில் வெள்ளி மலை கடைப்பிள்ளை ஆச்சிரமம்,

### 187. கைவளாக்கை மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த அழகர் மலைக்கு மேல் பக்கம் ஒரு நாழிகை தூரம் போனால் வெள்ளி மலை யிருக்கிறது. அம் மலை மேலேறிப் போனால் அவ்விடத்தில் வருக்கை மலை யிருக்கிறது. அம் மலைக்கு வடபுரம் வன்னியூற்றும் அவ்வூற்றுக்கு கீழ்புரம் கடைப்பிள்ளைச் சித்தர் குகையுமிருக்கிறது. அந்தக் குகைக்கு கிழக்கே அம்பிடு தூரத்தில் களாவன மிருக்கிறது. அந்த வனத்திற்கு மேற்காக அனுமார் தீர்த்தமும், கெருடாழ்வார் தீர்த்தமும், வயிரவன் கானலு மிருக்கிறது. அக்கானலுக்கு வடபுரம் சதம்புத்தரையில் கைவளாக்கை மர மிருக்கிறது. இந்த மரம் தூர் பெரிதாயும், கணுக்கணுவாயும், கணுக்கள் தோறு முள்ளுக ளாயும், இதன் இலை காசகலமாயும், புட்பம் சிறிதாயு மிருக்கும். இதன் இலையை இடித்துத் தாரத்திற்குக் கவசஞ் செய்து ஏழு சீலை மண் செய்து புடமிடப் பற்ப மாகும். அந்தப் பற்பத்தை நெய்யிற் குழப்பிச் சாப்பிடக் காய சித்தி யாகும்.

## அழகர் மலையில் இடபமலை சிபிச் சித்தர் ஆச்சிரமம்,

### 188. முண்டக விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த வெள்ளி மலைக்கு மேல்புரம் இரண்டு நாழிகை வழி தூரம் போனால் இடப மலை யிருக்கிறது. அந்த மலை மேல் வட பக்கம் போகிற பாதையில் அம்பிடு தூரத்தி லுள்ள குளிர் கானலுக்குக் கீழ்பக்கம் போனால் கசிவுத்தரை யிருக்கிறது. அந்தக் கசிவுத் தரைக்கு மேல் பக்கம் ஓடை வருகிறது. அந்த ஓடைக்கு வட பக்கம் சிபித் சித்தர் குகையும், அந்தக் குகைக்கு முன் பக்கம் அம்பிடு தூரத்தில் முண்டக விருட்சமு மிருக்கிறது. அந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 46 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தி யாகும்.

## அழகர் மலையில் சோலை மலை ஞானச் சித்தர் ஆச்சிரமம், 189. செங்கொடி வேலிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த இடப மலைக்கு மேல் புரம் ஒரு நாழிகை தூரம் போனால் சோலை மலை யிருக்கிறது. அந்த மலை மேல் தென் பக்கம் போகிற பாதையில் அரைநாழிகை தூரத்திலுள்ள கானலுக்கு வட பக்கம் போகிற பாதையில் ஞானச் சித்தர் குகையும், அந்தக் குகையிலிருந்து கூப்பிடு தூரம் போனால் பன்னிப் பாறையு மிருக்கிறது. அந்தப் பாறைக்கு மேல் பக்கமுள்ள பாம்பூற்றுக் கேணி யைக் கடந்து மேடேறினால் சமதளப் பாதை யிருக்கிறது. அந்தப் பாதையில் அம்பிடு தூரத்தில் செங்கொடி வேலிச் செடிகள் பூத்திருக் கிறது. அந்தச் செடியின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 27 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித் தியாகும்

## அழகர் மலையில் கோம்பை மலை அகப்பைச் சித்தர் ஆச்சிரமம், 190. கருநெல்லி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சோலை மலைக்கு மேல் பக்கம் அரை நாழிகை தூரம் போனால் கோம்பை மலை யிருக்கிறது. அந்த மலை மேல் ஒரு நாழிகை தூரம் போனால் குண்டாறு வருகிறது. அந்த ஆற் றுக்கு மேல் புரம் போனால் செங்களா வன மிருக்கிறது. அந்த வனத் திற்கு வட பக்கம் அகப்பைச் சித்தர் குகையும், அந்தக் குகைக்கு நேர் மேற்காக ஓசிவுத் தரையுமிருக்கிறது. அங்கிருந்து அம்பிடு தூரத்தில் கருநெல்லி மர மிருக்கிறது. அந்த நெல்லி மரத்தின் குணங்களையும், சாப்பிடு முறைகளையும், 105 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## அழகர் மலையில் அருவி மலை உலூகமா முனிவர் ஆச்சிரமம், 191. சுணங்க விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கோம்பை மலைக்கு மேல் பக் கம் ஒரு நாழிகை வழிதூரம் போனால் அருவி மலை யிருக்கிறது. அந்த மலையடி வாரத்தில் மலையிலிருந்து எக்காலமும் தீர்த்தம் விழுந்து கொண்டே யிருக்கும். அதற்கு மேலாக ராக்காயம்மன் கோவி லிருக் கிறது. அந்தக் கோவிலுக்கு வடபுரம் போகிற பாதையில் அரை நாழிகை தூரம் போனால் அங்கே உலூக மாமுனிவ ராச்சிரம மிருக் கிறது. அந்த ஆச்சிரமத்திற்குத் தெற்குப் பாதையிலுள்ள மலைமே லேறினால் பெருங் கானலிருக்கிறது. அந்தக் கானலுக்கு வட பக்கம்

ஒரு சுனையும் அந்தச் சுனைக்கு மேல் பக்கம் சுணங்க விருட்சமு மிருக்கிறது. அந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும் 131 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## அழகர் மலையில் பண்ணை மலை சலர்க்கார முனிவர் ஆச்சிரமம், 192. கரு நாரத்தைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த அருவி மலைக்கு மேல் பக்கம் பெரிய கெவி யிருக்கிறது. அந்தக் கெவிக்குள்ளே வருகிற ஆற்றுக்குள் அப்பிரகம் போல் மண லிருக்கிறது. இந்த மணல் வகார வேலைக்காகும் அதைப் பார்த்துக்கொண்டு மேடேறினால் கூப்பிடு தூரத்தில் பண்ணை மலை யிருக்கிறது. அந்த மலைக்கு மேல் பக்கம் போனால் காளி கானலும் அந்தக் கானலுக்கு வட பக்கம் அநேக மூலிகைகளடர்ந்த வனமு மிருக்கிறது. அந்த வனத்திற்குத் தென் பக்கம் சலர்க்கார முனிவர் ஆச்சிரம மிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்கு மேல் பக்கம் கரு நாரத்தை மர மிருக்கிறது அந்த மரத்தின் குணங்களையும். சாப்பிடு முறைகளையும் 137 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## அழகர் மலையில் வன்னி மலை அசமாருத மகா முனிவர் ஆச்சிரமம், 193. பொற் சீந்திக் கொடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தப் பண்ணை மலைக்கு மேல்புறமுள்ள கேணியை விட்டு மேடேறி ஒரு நாழிகை தூரம் வந்தால் அங்கே வன்னிமலை யிருக்கிறது. அந்த மலை மேல் இரண்டு நாழிகை தூரம் போனால் மண் கண்டமான மலையும், அந்த மலைக்கு வட பக்கம் போகிற பாதையில் அரை நாழிகை தூரத்தி லொரு சுனையும், அந்தச் சுனைக்கு மேல் பக்கம் அசமாருத மகா முனிவர் குகையு மிருக்கிறது. அந்தக் குகைக்கு எதிராக அம்பிடு தூரத்தில் பொற் சீந்திற் கொடிகள் படர்ந்திருக்கிறது. இந்தக் கொடி சீந்திற் கொடி போலவே சகலமு மிருந்தாலும், புட்ப மட்டும் மஞ்சள் நிறமாயிருக்கும். இதைச் சமூலமிடித்துச் சாறு வாங்கி ஒரு கோப்பையில் ஊற்றி வைக்க அடியில் பொன்னிறம் போலச் சர்க்கரை உரைந்திருக்கும். அதை யெடுத்துக் காயவைத்துச் சீனிச் சர்க்கரை சேர்த்து வெருகடி வீதம் காலை மாலை சாப்பிட்டு வரக் காயசித்தி யாகும்.

☞ போகர் செனன சாகரம் என்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## அழகர்மலையில் விமல மலை பூவாடைச் சித்தர் ஆச்சிரமம், 194. கணை விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த வன்னி மலைக்கு மேற்காக ஒரு நாழிகை தூரம் போனால் விமல மலை யிருக்கிறது. அந்த மலையின் மேல் பெருங் கான விருக்கிறது அந்தக் கானலுக்கு மேல் பக்கம் பூவாடைச் சித்தராச்சிரம மிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்குப் போனால் புட்பங்களின் வாடைகளும், சந்தனம், புனுகு, கஸ்தூரி, சவ்வாது வாடைகள் வீசிக் கொண்டிருக்கும். அந்த ஆச்சிரமத்திற்கு வட பாரிசம் போகிற பாதை வழியே போனால் அம்பிடு தூரத்திலுள்ள சுதம் புத்தரைக்கு மேல் பக்கம் கணை விருட்ச மிருக்கிறது. அந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 54 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

( இது வரையிலும் அழகர் மலை எல்லை )

## சிறுமலைத் தொடர்பு கொடுவா மலை லலாடச் சித்தர் குகை, 195. வெண்துத்திச் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த விமலை மலை வரையிலும் அழகர் மலையைச் சார்ந்தது இனிமேற் சொல்லப் போகிற மலையானது சிறு மலையைச் சார்ந்த தாகும். அந்த விமல மலைக்கு மேற்கே ஒரு நாழிகை தூரம் போனால் கொடுவா மலை யிருக்கிறது. அந்த மலைமேலேறி அம்பிடு தூரம் வந்தால் அங்கே அரளி யூற்றிருக்கிறது. அந்த ஊற்றுக்கு மேல் பக்கம் லலாடச் சித்தர் குகையும், அக் குகைக்கு மேல் பக்கம் வெண் துத்திச் செடியு மிருக்கிறது. அந்தச் செடி இடுப்புயரம் வளர்ந்து துத்திச் செடியைப் போலவே சகலமு மிருந்தாலும் புட்ப மட்டும் வெண்மையா யிருக்கும். இந்தச் செடியைச் சமூல மிடித்துச் சாறு வாங்கி வைத்துக் கொண்டு லிங்கத்திற்குச் சுருக்குக் கொடுக்கக் கட்டும். கட்டின லிங்கத்தைச் செந்தூரஞ் செய்து சாப்பிடக் காய சித்தியாகும்.

☞ புலத்தியர் கற்பம் 300 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்.

## சிறுமலைத் தொடர்பு அவுணி மலை கபாடச் சித்தர் குகை 196 திருகு கள்ளிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த அரளியூற்றுக்கு மேல் பக்கம் போகிற பாதையில் ஒரு நாழிகை தூரம் போனால் அவுணி மலை யிருக்

கிறது. அந்த மலை மேலே ஒரு நாழிகை தூரம் போனால், சதம்புத் தரையும், அந்தச் சதம்புத் தரைக்கு வட பக்கமாக அம்பிடு தூரத்தில் கபாடச் சித்தர் குகையு மிருக்கிறது. அந்தக் குகைக்கு வட பக்கம் அம்பிடு தூரத்தில் திருகுகள்ளி ஏராளமாய் முளைத்திருக்கிறது. அந்தக்கள்ளி ஆளுயரம் வளர்ந்து கொப்புகளெல்லாந் திருகிக்கொண்டே யிருக்கும், புட்பம் கொத்துக் கொத்துகளாயும், காய் சுண்டக்காய் போலவு மிருக்கும். இந்தக் கள்ளி மரத் தூரில் துளையிட்டு அத்துளையில் ரசம் விட்டு அந்தக் கள்ளிச் சதையால் மூடி 45 நாள் கழித்தெடுத்துப் பார்க்க ரசம் கட்டி யிருக்கும். அந்த ரசத்தைப் பற்பமாக்கிச் சாப்பிடத் தேக சித்தியாகும்.

☞ கருவூரார் வாத காவியம் 700 என்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறி யிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்,

## சிறுமலைத் தொடர்பு சுடர்க் கோம்பை மலை பவனந்தி முனிவர் ஆச்சிரமம், 197. மிளகரணைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த அவுணி மலைக்கு மேல் பக்கம் இரண்டு நாழிகை வழி தூரம் போனால் சுடர்க் கோம்பை மலை யிருக்கிறது. அந்த மலை மேல் நின்று பார்த்தால் மலையடி வாரத்தில் சுப்பிரமணியர் கோவிலுங் குளமுந் தெரியும். அதைப் பார்த்துக் கொண்டு கூப்பிடு தூரம் போனால் குண்டு மலை யிருக்கிறது. அந்த மலைக்கு வட பக்கம் அரை நாழிகை தூரத்தில் பவனந்தி முனிவர் ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்கு வட பக்கமுள்ள ஓடையின் ஓரமாய்க் கசிவுத் தரையு மிருக்கிறது. அந்த ஓடைக்கு தென் பக்கம் மிளகரணைச் செடிகளிருக்கிறது. இதற்கு மிளகு சாரணை யென்றும் பெயர். இந்தச் செடி முள உயரமாயும், இலை, பூ, காய் யாவும் மிளகாய்ச் செடியைப் போல் கொஞ்சம் சிறியதாயு மிருக்கும். இந்தச் செடியை சமூலமரைத்து இரும்புத் தகட்டிற்குக் கவசஞ் செய்து அதற்கு மேல் சீலை மண் செய்து இருபது எருவில் புடமிட நொறுங்கும் அதைக் குளியம்மியில் போட்டு எலுமிச்சம் பழச் சாறு விட்டரைத்து வில்லை தட்டிக் காயவைத்துப் புடமிடப் பற்பமாகும் அந்தப் பற்பத்தை நெய்யிற் குழப்பிச் சாப்பிடக் காய சித்தியாகும்.

## சிறுமலைத் தொடர்பு அடவிமலை குருபா முனிவர் ஆச்சிரமம், 198. கானற் பலாக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த ஓடையையும் கசிவுத்தரையையுந் தாண்டி இரண்டு நாழிகை தூரம் வந்தால் அடவி மலை யிருக்கிறது.

அதற்கு வட பக்க மிருக்கிற ஓடைக்கு வட பக்கம் ஒரு கெவி யிருக்கிறது. அந்தக் கெவிக்குள் ளிறங்கி மேடேறினல் குருபர முனிவர் ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்கு மேல் பக்கமாய் வருக்கை மலையு மிருக்கிறது. அந்த மலையிலிருந்து அரை நாழிகை தூரம் போனல் அனேக மரங்களில் கனி வர்க்கங்கள் பழுத்து உதிர்ந்து கிடக்கும். அந்தக் கானலுக்குள் கானற் பலா மர மிருக்கிறது. அந்த மரத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 41 நிர். ல் விபர மாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படிச் செய்யச் சித்தியாகும்.

## சிறுமலைத் தொடர்பு பருவத மலை தவநாத முனிவர் ஆச்சிரமம், 199. கருடக் கொடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த வருக்கை மலைக்கு நேர் மேற்காக வந்தால் பருவத மலை யிருக்கிறது. அதன் பக்கத்தில் வாழை மரங்கள் விசேடமா யிருக்கும். அந்த வாழைக் கனிகளைச் சாப்பிட்டால் சரீர சித்தியாகும். இந்த வாழை மரத்தைக் கடந்து அரை நாழிகை தூரம் வந்து பார்த்தால், அம்மைய நாயக்கனூர் தெரியும். அதைப் பார்த்துக்கொண்டு வட மேற்காக வருகிற பாதை வழியே வந்தால் கூப்பிடு தூரத்தில் தவநாத முனிவர் ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்குக் கீழ்பக்கம் கசிவுத்தரையில் கெருடக் கொடிகளும் படர்ந்திருக்கிறது. இதன் கொடி இரண்டு விரல் பருமனுள்ள தாயும், இலை சீந்தியிலைபோலும், புட்பம் மஞ்சள் நிறமாயும், கொடியை வாயிலிடக் கசப்பாயு மிருக்கும். இந்தக் கொடியைத் தூள் செய்து அத்துடன் மிளகு, சீரகம், அரத்தை யாவும் சமனிடை யெடுத்துச் சூரணஞ் செய்து அரைப் பங்கு சீனிச் சர்க்கரை சேர்த்துக் காலை வெருகடி வீதம் சாப்பிட்டு வரச் சரீரத்திலுள்ள விடம் நீங்கிக் காயசித்தி யாகும்.

☞ ஞான சாஸ்திரத் திரட்டு 4 வது பாகத்திலுள்ள சூரியானந்தர் கற்ப ஞான சூத்திரம் 25 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது.

## சிறுமலைத் தொடர்பு மந்தி மலை சுகாதாரச் சித்தர் குகை, 200. வஞ்சிக் கொடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கசிவுத் தரைக்கு வட மேற்குப் பக்கத்தில் மந்தி மலை யிருக்கிறது. அந்த மந்தி மலைமேலேறி அதிலிருந்து இரண்டு நாழிகை தூரம் வந்தால் காஞறு வருகிறது. அந்தக் காஞறுக்கு வட பக்கம் வருகிற பாதை வழியில் ஒரு நாழிகை தூரம்

வந்தால் அங்கே சுகாதாரச் சித்தர் குகை யிருக்கிறது. அந்தக் குகைக்கு வட பக்கம் பாலூற்று இருக்கிறது. அப் பாலூற்றைக் கடந்து இரண்டு நாழிகை தூரத்தில் கருமலை யிருக்கிறது. அக் கரு மலைக்கு வட பக்கமாக வருகிற பாதையில் மூன்று நாழிகை தூரத்தி லுள்ள பாம்பூற்றுக்கு வட பக்கம் வஞ்சிக் கொடிகள் படர்ந்திருக் கிறது. அந்தக் கொடி சிறிதாயும், அழகாயும், இலை பொடி யிலையாயு மிருக்கும். இதைப் பிடுங்கிச் சமூலம் காயவைத்துச் சூரணித்து அதற்குச் சமன் சர்க்கரை சேர்த்துக் காலையில் வெருகடிப் பிரமாணஞ் சாப்பிட்டு வரக் காயசித்தி யாகும்.

( இது வரையிலும் சிறு மலையின் எல்லை )

## திருச்சிராப்பள்ளி தாயுமானவர் மலை சிவந்தீசுபரார் ஆச்சிரமம், 201. தில்லை விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! இது வரையிலும் மதுரை எல்லை யில் தனித்தனியா யிருந்த மலை வளங்களையும், சேர்க்கையா யிருந்த மலை வளங்களையும், சொல்லி வந்தேன். இனிமேல் திருச்சிராப்பள்ளியி லிருக்கிற மலை வளங்களைச் சொல்லுகிறேன் கேட்பீர்களாகவும். திருச்சிராப்பள்ளிக்குத் தென்புரமாகப் பொன்மலை என்றொரு மலையும், வட புரமாகத் தாயுமான சுவாமி மலையு மிருக்கிறது. அந்த மலை மேலேறிப் பார்த்தால் தாயுமான சுவாமி கோவிலும் உச்சிப் பிள் ளையார் கோவிலு மிருக்கிறது. அந்தத் தாயுமான சுவாமி கோவிலுக் குள் சிவந்தீசுபரார் ஆச்சிரம மிருக்கிறது. அதைப் பார்த்துக்கொண்டு கீழே யிறங்கி வடக்கு முகமாய் ஒரு நாழிகை தூரம் போனால் காவேரி நதி வருகிறது. அந்த நதியின் வட கரையில் தில்லை விருட்ச மிருக் கிறது. இந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளை யும், 55 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

( இது வரையிலும் திருச்சிராப்பள்ளி மலையின் எல்லை )

## கொல்லிமலைத் தொடர்பு கைலையங்கிரிச் சித்தர் ஆச்சிரமம், 202. செங்கொடி வேலிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் காவேரி நதிக்கு மேற்கே முப்பது நாழிகை வழி தூரத்தில் கொல்லி மலையிருக்கிறது அந்த மலை யடிவாரத்தில் செல்வியம்மன் கோவிலிருக்கிறது. அந்த அம்மனைக் கண்டு போற்றித் துதித்துக் கொண்டு அதன் பக்கத்திலிருக்கிற பாதை

வழியாக மலைமேலேறி மூன்று நாழிகை தூரம் போனால் உச்சி மலைக்குப் போய்ச்சேரலாம். அந்த மலையின் மேலாகக் கீழ் பக்கம் கூப்பிடு தூரத்தில் அரப்பளீசுரர் சந்நிதி யிருக்கிறது. அவரைக் கண்டு தெரிசித்துக்கொண்டு அதற்குக் கிழக்கே அம்பிடு தூரம் போனால் கைலையங்கிரிச் சித்தர் குகை யிருக்கிறது. அந்தக் குகைக்குக் கீழ் பக்கம் அறுபது நாள் வேதி உதகச்சுனையும், அச் சுனைக்குக் கீழ் பக்கமாக அம்பிடு தூரத்தில் செங்கொடி வேலிச் செடிகளு மிருக்கிறது. இந்தச் செடிகளின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 27 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## கொல்லிமலைத் தொடர்பு பள்ளி நாதர் கோயில் சம்பு மகா ரிசி ஆச்சிரமம். 203. கெவுன குளிகைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த அறுபது நாள்வேதிச் சுனைக்கு வட பக்கமாய்க் குமண மலையும், அம் மலைக்கு வடபக்கமாகச் சம்பு மகா ரிசி ஆச்சிரமமு மிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்குக் கீழ் பக்கமாகப் பள்ளி நாதர் கோவிலும் பலி பீடமு மிருக்கிறது. அந்தப் பீடத்தி னடியில் கெவுன குளிகை யிருக்கிறது. அக் குளிகையை யெடுக்கவேண்டு மானால், அந்தப் பீடத்திற்குத் தென் பக்கம் வடக்கு முகமாயிருந்து தேங்காய் பழம் உடைத்துத் தீப தூபங் கொடுத்துச் செவ்வரளிப் புட்பத்தால் நூற்றெட்டு உருச் செய்து, ஒரு உளியால் அந்த யிடத்தில் ஒரு கல்லை நகட்டக் கல்விலகும் அங்கே குடுக்கை போலக் கல்லடித்து அதற்குள் குளிகையைப் போட்டு மேலே மூடி யிருக்கும். அதைத் திறந்து இரண்டு குளிகை மட்டும் எடுத்து வாயி லடக்கிக் கொண்டு பழையபடி கல்லை மூடி வைத்துத் தீப தூபங் கொடுக்க முன்போலக் கற்குற டாகும். இக் குளிகையை வாயி லடக்கக் காயசித்தி யாகும். கெவுனம் போகலாம். அட்டமா சித்தியும், ஞான திருட்டியும் வாயு வேகம் மனோ வேகமு முண்டாகும். பத்தியம் பச்சரிசியும், பாசிப் பயறும் கலந்து சமைத்துச் சாப்பிடவும். அறுசுவையை நீக்கி நெய், பால் சேர்த்துக் கொள்ளவும்.

## கொல்லிமலைத் தொடர்பு கருமலை உதரகிரிச் சித்தர் ஆச்சிரமம், 204. வெள்ளைவேம்பு மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தப் பள்ளி நாதர் கோவிலுக்கு வட பக்க மிருக்கும் பெரிய கானலுக்கு மேல் பக்கமாக உதரகிரிச் சித்தர் ஆச்சிரம மிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்குக் கீழ் பக்கம் கரு

மலை யிருக்கிறது. அக் கரு மலைக்கு மேல் பக்கமாக ஒரு கெவி யிருக்கிறது. அந்தக் கெவிக்குள்ளிறங்கிப் போனாற் குங்கிலிய மரத் தோரமாக யிருக்கும் பீடத்தில் கொல்லியம் பாவை யென்றொரு தெய்வ மிருக்கிறது. அந்தத் தெய்வத்தை எந்தத் திக்கிலிருந்து பார்த்தாலும் நேர் முகமா யிருப்பது போலவே தெரியும். ஆகையால் நாம் மேற்கு முகமாக நின்று கிழக்கு முகமாக அம்மையை யிருக்கச் செய்து அந்த அம்மனுக்கு அபிசேகஞ் செய்து தேங்கா பழ முடைத்துத் தீப தூபங் கொடுத்து அரளிப் பூவினால் (அர்ச்சனை செய்து) மாயாரூபி மகா மந்திர ரூபி தாயே சுவாகா) வென்று நூற்றி யெட்டு உருச் செபிக்கவும். அம்மன் பிரசன்னமாகி வேண்டிய வரங்களைக் கொடுப்பாள். அவ் வரத்தைப் பெற்றுக் கொண்டு அக் கோவிலுக்கு வட பக்கம் போகிற பாதை வழியாக்க் கெவியை விட்டு மேடேறிக் கூப்பிடு தூரம் வந்தால், கசிவுத் தரையில் வெள்ளை வேம்பு மர மிருக்கிறது. இந்த மரத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 79 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## கொல்லிமலைத் தொடர்பு சிறுமலைக் குண்டு கமலாசனச் சித்தர் குகை, 205. சுணங்க விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கசிவுத் தரைக்கு மேல் பக்கம் ஒரு நாழிகை தூரத்திலுள்ள சிறு மலைக் குண்டுக்கு வட பக்கமாகப் போகிற பாதையில், அரை நாழிகை தூரம் போனால், அங்கொரு ஆறு வருகிறது. அந்த ஆற்றுக்கு வடபுறம் சமதளமான இடமும், கசிவுத்தரையு மிருக்கிறது. அந்தக் கசிவுத் தரைக்கு மேல் பக்கம் கமலாசனச் சித்தர் குகையும், அந்தக் குகைக்கு நேர் கிழக்காக அம்பிடு தூரத்தில், அநேக மரங்கள் சூழ்ந்த கருங் கானலுக்குத் தென் பக்கமாகச் சுணங்க விருட்சமு மிருக்கிறது. இந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 131 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## கொல்லிமலைத் தொடர்பு கஞ்ச மலை சுழிமுனைச் சித்தர் குகை, 206. உரோம விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கருங் கானலுக்கு வட மேற்கு மூலையில் கஞ்ச மலை யிருக்கிறது. அந்த மலைமே லேறிக் கூப்பிடு தூரம் போனால் அங்கே மண வூற்றும் அவ் வூற்றுக்குத் தென் பக்கமாகச் சுழி முனைச் சித்தர் குகையு மிருக்கிறது. அந்தக் குகைக்கு,

நேர் கிழக்காக அரை நாழிகை தூரத்திற் காளி கானலிருக்கிறது. அக் கானலுக்கு மேல்புற மிருக்கும் மூங்கில் வனத்திற்கு வட பக்கமாக அரை நாழிகை தூரம் போனால் சிற்ருறு வருகிறது. அந்த ஆற்றுக்குக் கீழ் புறமா யிருக்குஞ் சுனைக்கு அம்பிடு தூரத்தில் ரோம விருட்ச மிருக்கிறது. இந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறை களையும், 104 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## கொல்லிமலைத் தொடர்பு குமுளி மலை தபோதனச் சித்தர் குகை, 207. சோதி விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சுனைக்கு வட பக்கம் போகிற பாதையில் இரண்டு நாழிகை தூரம் போனால் குமுளி மலை யிருக்கிறது. அம் மலைக்குத் தென் புறம் போகிற பாதையில் கௌமாரி கோவி லிருக்கிறது. அக் கோவிலுக்குக் கீழ் பக்கம் தபோதனச் சித்தர் குகை யிருக்கிறது. அக் குகைக்கு வட பக்கமாக வுள்ள ஆற்றுக்கு மேல் பக்கம் அரை நாழிகை தூரத்தி லிருக்கும் மண் தரையில் சோதி விருட்ச மிருக்கிறது. இந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடு முறைகளையும், 65 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப் படி செய்யச் சித்தியாகும்.

## கொல்லிமலை, குடகு மலை ஆராதாரச் சித்தர் ஆச்சிரமம், 208. கரு நெல்லி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மண் கண்டத்திற்கு வட பக் கம் அரை நாழிகை தூரத்தில் குடகு மலையும், அம் மலைக்கு வட பக் கங் குளிர் கானலும், அக் கானலுக்குத் தென் பக்கமாக அம்பிடு தூரத்திற் கசிவுத் தரையும், அத் தரைக்குக் கீழ் பக்கமாகப் பூஞ்சுனை யும், அச் சுனைக்கு வட பக்கமாக ஒரு நாழிகை தூரத்தில் ஆரா தாரச் சித்தர் குகையும் இருக்கிறது. அக் குகையின் முகத்துவாரஞ் சிறிதாகவும் உட் பாகம் விலாசமாகவு மிருக்கும். அதற்குள் அநேக சித்தர்கள் வாசஞ் செய்வார்கள். அவர்களைத் தெரிசித்துக் கொண்டு குகையை விட்டு வெளியே வந்து வட பக்கமாகப் பார்த்தால் கரு நெல்லி மர மிருக்கிறது. இம் மரத்தின் குணங்களையும், உபயோகிக் கும் முறைகளையும், 105 நிர். ல் விபரமாகச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## கொல்லிமலைத் தொடர்பு குருமலை கூணக் கண்ணர் ஆச்சிரமம், 209. இரத்தப் பலாசு மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குகைக்குத் தென் பக்கம் அரை நாழிகை தூரம் போனால் குரு மலை யிருக்கிறது. அக் குரு மலைக்கு மேல் பக்கமாகக் கூப்பிடு தூரம் போனால் ஓடை வருகிறது. அவ் வோடையைக் கடந்து வடக்கே அரை நாழிகை தூரம் போனால் வயிரவன் கானலும், அதற்கு மேல் பக்கம் அரளியூற்று மிருக்கிறது. அவ்வூற்றுக்குக் கீழ் பக்கம் அம்பிடு தூரத்திலுள்ள கூணக் கண்ணர் ஆச்சிரமத்திற்குப் பக்கத்தில் வெள்ளைப் பாறையு மிருக்கிறது. அப் பாறைக்கு வடபக்கமா யுள்ள கானாற்றுக்குத் தென்புறமா யிருக்கும் மண் கண்டத்தில் இரத்தப் பலாசு மர மிருக்கிறது. இந்த மரத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 82 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

( இது வரையிலும் கொல்லி மலையின் யெல்லை )

## கன்னிவாடி மலை அரிகேசர் பருவதம் மெய்கண்ட சித்தர் குகை, 210. உரோம வேங்கைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! இது வரை கொல்லி மலையின் விர்த் தாந்தங்களை விபரமாகச் சொல்லி வந்தேன். இனிக் கன்னிவாடி மலையி லிருந்து மேற்கே போகிற மலை வளங்களைச் சொல்லுகிறேன் கேட் பீர்களாக. கன்னிவாடி மலைமேலேறி அரை நாழிகை தூரம் போனால் அவ்விடத்தில் வாழை மரங்களும், ஏலக்காய்ச் செடிகளு மிருக்கிறது. அதற்கு வட மேற்காகப் போனால் அங்கே ஒரு சுனை இருக்கிறது. அச் சுனைக்கு மேல் பக்கம் ஒரு நாழிகை தூரத்தில் மெய்கண்ட சித் தர் குகை யிருக்கிறது. அக் குகைக்கு முன்பாக உரோம வேங்கை விருட்ச மிருக்கிறது. இந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 128 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது அந்தப் படி செய்யச் சித்தியாகும்.

## கன்னிவாடி மலை அரிகேச பருவதம் குண்டலிச் சித்தர் ஆச்சிரமம், 211. ஏரழிஞ்சி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மெய்கண்டச் சித்தர் குகைக்கு வட பக்கம் அரை நாழிகை தூரம் போனால் அவ்விடத்திற் படுக்கை மலை யிருக்கிறது. அந்த மலைக்குக் கீழ் பக்கமாகப் போகிற பாதையில்

கூப்பிடு தூரத்தில் கரும் பாறை யிருக்கிறது. அப் பாறை யோரமாக வட பக்கம் பாதாள கெவி யிருக்கிறது. அந்தக் கெவியைக் கடந்து மந்தி மலையிலேறி அம்பிடு தூரம் போனால் பூஞ் சுனை யிருக்கிறது. அந்தச் சுனைக்கு வட கிழக்கு மூலையில் மலட்டாறு வருகிறது. அந்த ஆற்றைக் கழித்து அரை நாழிகை தூரம் போனால் ஒரு ஓடை யிருக்கிறது. அந்த ஓடைக்குக் கிழக்கே போகிற பாதையில் அம்பிடு தூரம் போனால் கல்லூற்றிருக்கிறது. அந்தக் கல்லூற்றுக்குத் தென் புறம் போகிற பாதை வழியே போனால் கூப்பிடு தூரத்தில் குண்டலிச் சித்தர் ஆச்சிரமமும், அதன் பக்கத்தில் செவல்த் தரையில் ஏழிஞ்சி மரமு மிருக்கிறது. அம் மரத்தின் குணங்களையும், சாப்பிடும் முறை களையும் 49 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## கன்னிவாடி மலை அரிசேச பருவதம் வாலையானந்தர் ஆச்சிரமம், 212. முப்பிரண்டைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குண்டலிச் சித்தர் ஆச்சிர மத்திற்குத் தென் பக்கம் அரை நாழிகை தூரம்போனால் எணி சாத்து மலை யிருக்கிறது. அம் மலைக்கு வட பக்கம் போகிற பாதையில் ஒரு நாழிகை தூரத்தில் வெள்ளைப் பாறை யிருக்கிறது, அப் பாறைக்குக் கீழ் பக்கம் கூப்பிடு தூரம் போனால் அங்கே வட்டச் சுனை யிருக் கிறது. அந்த வட்டச் சுனைக்கு மேல் பக்கமாக வாலை யானந்தர் ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்கு மேல் பக்கம் மந்தி யோடையும், அவ் வோடைக்கு வடபுரம் பலாவூற்று மிருக்கிறது. அந்த வூற் றுக்குக் கிழக்காக அம்பிடு தூரத்தில் செடிகளடர்ந்த காடுகளிருக் கிறது. அதில் முப்பிரண்டைக் கொடிகள் படர்ந்திருக்கிறது. இந்தப் பிரண்டையின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 110 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## கன்னிவாடிமலை அரிகேச பருவதம் முத்தானந்தர் ஆச்சிரமம், 213. கருநொச்சிச் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் செடிகளடர்ந்த காட்டுக்கு மேல் பக்கம் போகிற பாதை வழியே போனால் அம்பிடு தூரத்தில் மஞ்சணைப் பாறை மலையிருக்கிறது. அப்பாறையிலிருந்து கூப்பிடுதூரம் போனால் முத்தானந்தர் ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்குக் கீழ் புறம் மயிலோடையு மிருக்கிறது. அவ் வோடைக்கு கீழ் பக்கம்

போகிற பாதையிலிருந்து அரை நாழிகை தூரத்தில் பாலூற்று இருக்கிறது. அந்த ஊற்றுக்கு மேல்புறம் போகிற பாதையில் ஒரு நாழிகை தூரத்தி லிருக்கும் மண் கண்டத்திற் கருநொச்சி யிருக்கிறது. இந்த நொச்சிச் செடியின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 136 நிர்.ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## வேட செந்தூர் மலை வாமன பருவதம் சமைய நாதர் ஆச்சிரமம், 214 இருப்பவல் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மண் கண்டத்திற்கு மேற்கே போனால் கூமா மலை யிருக்கிறது. அந்த மலை மேலேறி அரை நாழிகை தூரம் போனால் அங்கொரு செம்பாறை யிருக்கிறது. அப் பாறையின் மேலேறிப் பார்த்தால் வேட செந்தூர் தெரியும். அந்தப் பாறைக்கு மேற்காகப் போகிற பாதையில் அரை நாழிகை தூரம் போனால் அங்கே பாறைச் சுனையும், அச் சுனைக்கு வட பக்கம் போகிற பாதையில் கானலோடையு மிருக்கிறது. அவ்வோடைக்குக் கீழ்பக்கம் போகிற பாதை வழியில் ஒரு நாழிகை தூரத்தி லிருக்கும் பலா ஆற்றிற்கு மேல்புரம் கூப்பிடு தூரம் போனால் சமைய நாதர் ஆச்சிரமும், அந்த ஆச்சிரமத்திற்குக் கீழ்புறம் அம்பிடு தூரத்தில் புல் தரையில் இருப்பவல் செடியு மிருக்கிறது. இந்தச் செடியின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 129 நிர்.ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## வேட செந்தூர் மலை வாமன பருவதம் சந்திர நாதர் ஆச்சிரமம், 215. சேந்தாடு பாவைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தப் புல் தரைக்கு மேல் பக்கம் போகிற பாதை வழியே போனால் உச்ச மலை யிருக்கிறது. அந்த உச்ச மலைக்கு வட பக்கம் பாம்புப் புட விருக்கிறது. அதற்குக் கிழக்கே போகிற பாதையில் அம்பிடு தூரம் போனால் காளி கானலும், அக் கானலுக்கு மேல் பக்கம் மண் கண்டமான தரையு மிருக்கிறது. அதற்கு நேர் மேற்குப் பக்கமாகப் போனால் அம்பிடு தூரத்தில் சந்திர நாதர் ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்குத் தென்பக்கம் செடிகளும், அனேக மரங்களு மடர்ந்த காட்டிற்கு மேல் பக்கத்தில் சேர்ந்தாடு பாவைச் செடிகளு மிருக்கிறது. இந்தச் செடியின் குணங்களையும், சாப்பிடு முறைகளையும், 121 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

( இது வரையிலும் வேடசெந்தூர் மலையின் எல்லை )

## சத்திரப்பட்டி மலை வாமனு பர்வதம் பூதானந்தர் ஆச்சிரமம், 216. நேத்திரஞ் சிமிட்டிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தஅடர்ந்த காட்டுக்கு மேல் பக்கமாய் ஒரு நாழிகை தூரம் போனால் அருவி மலை யிருக்கிறது. அம்மலைக்கு வடபக்கத்தி லிருந்து மேல் புறமாகப் போகிற பாதைவழியே போனால் சிவந்திப் பாறை யிருக்கிறது. அந்தப் பாறையை விட்டு மேல் பக்கம் போனால் பாம்புச் சுனையும், அச் சுனைக்குத் தென் பக்கம் பூசனிக்காய் மேடும் இருக்கிறது. அந்த மேட்டில் நின்று பார்த்தால் சத்திரப்பட்டியூர் தெரியும். அதைப் பார்த்துக் கொண்டு மேட்டை விட்டுக் கீழிறங்கி மேற்கே அரை நாழிகை தூரம் போனால் பூதானந்தர் ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்குக் கீழ்பக்கத்தில் புடவுச்சுனையு மிருக்கிறது. அந்தச் சுனைக்குப் பக்கத்தில் அம்பிடு தூரத்திலிருக்குஞ் சமதளப் புல் தரையில் நேத்திரஞ் சிமிட்டிச் செடிகளிருக்கிறது. இந்தச் செடி முள உயரமிருக்கும். இலை முருங்கை யிலை போல் கொஞ்ச முனையாயும், புட்பம் வெண்மையாயும், சிறிதாயு மிருக்கும். இந்தச் செடியைத் தொட்டால் அதனிலை கண் சிமிட்டினது போல் சிமிட்டிக் கொண்டே யிருக்கும். இந்தச் செடியைச் சமூலம் பிடுங்கிச் சூரணஞ் செய்து அரைக்கால் படி பாலில் வெருகடித் தூளும் சீனிச் சர்க்கரையும் போட்டுக் கலந்து சாப்பிடக் காயசித்தி யாகும்.

## சத்திரப்பட்டிமலை வாமனு பர்வதம் கடம்ப நாதர் ஆச்சிரமம், 217. வல்லாரைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த சமதளப் புல் தரைக்கு மேற்கு முகமாக அரை நாழிகை தூரம் போனால் கூண மலை யிருக்கிறது. அந்த மலைக்கு மேல் பாரிசமாகப் போகிற பாதையில் ஒரு நாழிகை தூரம் போனால் கல் சுனை யிருக்கிறது. அந்தச் சுனையைக் கடந்து அரை நாழிகை தூரத்தில் காறு வருகிறது. அந்த ஆற்றுக்கு மேல் பக்கம் போகிற பாதையில் முக்கால் நாழிகை தூரம் போனால் நொச்சி யூற்றும், அந்த ஊற்றிலிருந்து ஒரு நாழிகை வழி தூரம் போனால் கவுபாலச் சித்தராச்சிரமமு மிருக்கிறது. அதற்கு நேர் மேற்கே அரை நாழிகை தூரத்திலிருக்குஞ் சதம்புத் தரையில் வல்லாரைக் கொடிகள் படர்ந்திருக்கிறது. இதன் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 40 நிர். ல் கூறியிருக்கிறது அதன்படி செய்யச் சித்தியாகும்.

( இதுவரையிலும் சத்திரப்பட்டி மலையின் எல்லை )

## பழனி வராககிரி தாருகாவன ரிசி ஆச்சிரமம், 218. சிவனார் வேம்புக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சதம்புத் தரைக்கு மேல் பக்க மிருந்து அரை நாழிகை தூரத்தில் வராககிரி யிருக்கிறது. அந்த வராக கிரிக்கு மேலே வந்தால் ஒரு நாழிகை தூரத்தில் பூங்காவன மிருக் கிறது. அவ்வனத்திற்கு மேல் பக்கம் இரண்டு நாழிகை தூரத்தில் குடப்பாறையும், அப் பாறைக்கு மேற்காக அரை நாழிகை தூரம் போனால் தாருகாவனமு மிருக்கிறது. அந்த வனத்தின் மத்தியில் தாருகாவனத்து ரிசிகளின் ஆச்சிரம மிருக்கிறது. அதற்குத் தென் பக் கம் கூப்பிடு தூரத்தில் சேங்கைச் சுனையும், அச்சுனைக்கு மேற்காக ஒரு ஓடையு மிருக்கிறது. அந்த ஓடைக்குப் பக்கத்தில் உதகக் குகையிருக் கிறது. அக் குகைக்குள் நுழையாமல் நேரே மேற்கே போகிற பாதை வழியே போனால் கூப்பிடு தூரத்தி லிருக்குங் கசிவுத் தரையில் சிவனார் வேம்புச் செடிகளிருக்கிறது. அந்தச் செடியானது இரண்டு முள உயரமாயும். அதனிலை முருங்கையி னிலையைப்போலும், புட்பம் சிறிதாயு மிருக்கும். இதைச் சூரணஞ் செய்து சமனிடை சர்க்கரை சேர்த்து வெருகடிப் பிரமாணஞ் சாப்பிட்டு வரக் காயசித்தி யாகும்.

☞ கருவூரார் வாத காவியம் 700 என்னும் நூலில் இதன் விபரங்களைக் கூறி யிருக்கிறது பார்த்துக் கோள்ளவும்,

## பழனி வராககிரி மார்க்கண்டேய மகா முனிவர் ஆச்சிரமம், 219. வெள்ளை நீர் முள்ளிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கசிவுத்தரைக்கு மேல் பக் கம் போகிற பாதையில் ஒரு நாழிகை தூரம் போனால் அரளி யூற் றிருக்கிறது. அவ் வூற்றுக்கு வட மேற்காகப் போகிற பாதை வழியே போனால் கடம்ப மலை யிருக்கிறது. அதன் கீழ் பக்கம் அம்பிடு தூரத் தில் மார்க்கண்டேய மகா முனிவர் குகையும், ஆச்சிரமமு மிருக்கிறது. அந்த ஆச்சிரமத்திற்கு மேற்காக ஒரு நாழிகை தூரத்தில் கருங்கான லிருக்கிறது. அக் கானலுக்கு வட பக்க மிருந்து மேற்கே போகிற பாதையில் அம்பிடு தூரம் போனால் மண்டல வேதி உதகச் சுனையும், அந்தச் சுனைக்கு வட பக்கம் அம்பிடு தூரத்திலிருக்கும் வேலவர் கோவிலுக்கு மேற்காகச் சதம்புத்தரையில் வெள்ளைநீர்முள்ளிச் செடியு மிருக்கிறது. இந்தச் செடி நீர் முள்ளிச் செடி யைப்போ லிருந்தாலும் தண்டும், பூவும், வெண்மையா யிருக்கும். இந்தச் செடியை சமூலம்

பிடுங்கி அரைத்துச் சிறு கண் நாகத்திற்குக் கவசஞ் செய்து அதற்கு மேல் சீலை மண் செய்து கனபுடமிட நொறுங்கும். அதைக் கல்வத்திற் போட்டு எலுமிச்சம் பழச் சாறு விட்டரைத்து வில்லை தட்டிக் காயவைத்து இருபது எருவில் புடமிடப் பறபமாகும். அந்தப் பற்பத்தை நெய்யிற் குழப்பிச் சாப்பிடக் காய சித்தியாகும்.

☞ போகர் கற்பம் 300 ல் இதன் விபரங்களைக் கூறியிருக்கிறது பார்த்துக் கொள்ளவும்.

## ஆண்டவன் வராககிரி பழனிமலை புலிப்பாணி முனிவர் ஆச்சிரமம் 220. சோதி விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சதம்புத் தரைக்கு மேல் பக்கம் போகிற பாதையில் அரை நாழிகை தூரம் போனால் குத்துப் பாறை யிருக்கிறது. அப் பாறையின் மேலே ஏறிப் பார்த்தால் பழனி மலை தெரியும். அதிலிருந்து கிழிறங்கி நேர் வடக்காக வந்து சந்நிதிக்கு நேராக யேறினால் தண்டாயுதபாணி சந்நிதிக்குப் போய்ச்சேரும். அச் சந்நிதிக்குள் பழனியாண்டவரைத் தெரிசித்துக்கொண்டு வருகிற வழியில் போகர் புலிப்பாணி முனிவர்களின் ஆச்சிரமமுமிருக்கிறது. அந்த ஆச்சிரமத்தில் போய் அவர்களையுங் கண்டு தெரிசித்துக் கீழே யிறங்கினால் வையாபுரிக்குள மிருக்கிறது. அதற்கு வடபக்கமிருக்கிற பழனி யூரையுந் தாண்டி அந்தப் பாதை வழியாகப் போனால் வராக கிரியில் குத்துப் பாறை யிருக்கிற இடத்திற்குப் போய்ச் சேரும். அந்தப் பாறைக்கு மேற்காகப் போனால் அங்கே சோதி விருட்ச மிருக்கிறது. அந்த விருட்சத்தின் குணங்களையும்,சாப்பிடும் முறைகளையும், 65 நிர்.ல் விபரமாகச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## பழனி வராககிரி தேசிக முனிவர் ஆச்சிரமம், 221. ஓரிலைத் தாமரைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குத்துப் பாறைக்கு மேற்கே ஒரு நாழிகை தூரம் போனால் உச்சமலை யிருக்கிறது. அந்த மலைக்கு வடபுற மிருந்து மேற்கே போகிற பாதையில் அம்பிடு தூரம் போனால் மயிலாடும் பாறையும், அப் பாறையைக் கடந்து ஒரு நாழிகை தூரம் போனால் பெரிய கெவியுமிருக்கிறது. அந்தக் கெவியைவிட்டு மேடேறினால் அங்கிருக்கும் குமரி மலைமேல் அரை நாழிகை தூரத்தில் தேசிக முனிவர் ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்குக் கீழ் பக்கம் அம்பிடு தூரத்தில் ஒரு ஆறு மிருக்கிறது. அந்த ஆற்றைக் கடந்து மேற்காகப்

போகிற பாதையில் அம்பிடு தூரத்திலிருக்குஞ் சுனைக்குப் பக்கத்தில் ஓரிலைத் தாமரைச் செடி யிருக்கிறது. இந்தச் செடியானது அரை முள உயரத்தில் துளசிச் செடியைப் போலிருக்கும். இந்தச் செடியைச் சமூலம் பிடுங்கி உலர்த்திச் சூரணித்து இதற்குச் சமன் சர்க்கரைசேர்த்து வெருகடிப் பிரமாணஞ் சாப்பிட்டுவரக் காயசித்தியாகும்.

## பழனி வராககிரி கச்சியப்ப மாமுனி ஆச்சிரமம், 222. வெண் துத்திச் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சுனைக்கு மேற்காகப் போகிற பாதையில் கோம்பை மலை இருக்கிறது. அம் மலையிலிருந்து விழுகிற அருவி யானது பெரிய ஆறுகப் போகிறது. அதற்கு மேல் பாரிசமாக ஐந்து ஆறு வருகிறது. இந்த ஆறுகளைக் கடந்து வட மேற்காக வந்தால் குடப்பாறையும், அப் பாறைக்கு வடக்காக அரை நாழிகை தூரத்தில் புடவுச் சுனையு மிருக்கிறது. அப் புடவுக் குள்ளிருந்து எப்போதுந் தண்ணீர் வந்து கொண்டே யிருக்கும். அந்தச் சுனையிலிருந்து வட பக்கம் அம்பிடு தூரத்தில் கச்சியப்ப மாமுனிவர் ஆச்சிரமும், அந்த ஆச்சிரமத்திற்கு மேல் பக்கம் அம்பிடு தூரத்தில் போகிற ஓடைக்கு வட பக்கம் அரை நாழிகை தூரத்தி லிருக்கும் கசிவுத்தரையில் வெண் துத்திச் செடியு மிருக்கிறது. இந்தச் செடியின் குணங்களையும், சாப்பிடு முறைகளையும் 195 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

(இது வரையிலும் வராககிரி மலையின் யெல்லை)

## பழனி வராககிரி சண்முக நதி பிருகு மகா ரிசி ஆச்சிரமம், 223. பூமி சர்க்கரைக் கிழங்குக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த ஒசிவுத் தரைக்கு வட பக்கம் அரை நாழிகை வழி தூரம் போனால் மலையடி வாரத்தில் ஆறு நதிகள் சேர்ந்த சண்முக நதி யிருக்கிறது. அதைப் பார்த்துக் கொண்டு மலை மேலே அம்பிடுதூரம் போனால் அடர்ந்த வனமும், அவ் வனத்திற்குள் பிருகு மகா ரிசி ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்கு வட பக்கம் வயிரவன் கானலு மிருக்கிறது. அந்தக் கானலுக்கு வடக்காக இருக்குங் கல் தரைக்கு வடக்காக அம்பிடு தூரத்தில் கசிவுத் தரையில் பூமிச் சர்க்கரைக் கிழங்குச் செடிகளிருக்கிறது. அந்தச் செடியின் தூரில் கிழங்குகளிருக்கும். அந்தக் கிழங்கை யெடுத்துப் பால் விட்டரைத்துக் கலக்கிச் சாப்பிடத் தேகம் பொன்னிறமாகும். காயசித்தி யாகும்.

## வன்னிமலை காஞ்சன பருவதம் சுவர்க்க மகா முனிவர் ஆச்சிரமம், 224. பயற்றங்காய்க் கள்ளிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கசிவுத் தரைக்கு வட பக்கம் பாதையில் ஒரு நாழிகை தூரத்தில் முசுண்டகிரி மலை யிருக்கிறது. அந்த மலைமேல் வட பக்கம் போகிற பாதையில் கூப்பிடு தூரத்தில் வன்னி மலை யிருக்கிறது. அதன் வட பக்கம் மணியடிப் பாறையும் அப் பாறைக்கு மேல்புறம் வடக்கே அரை நாழிகை தூரத்தில் உதகச் சுனையு மிருக்கிறது. அந்தச் சுனையில் தண்ணீர் குடியாமல் சுனைக்கு வட பக்கம் போகிற பாதையில் அம்பிடு தூரம் போனால் சிற்றாறு போகிறது. அந்த ஆற்றைக்கடந்து வடக்கு முகமாய் கல்லெறி தூரத்தில் மாவூற்று இருக்கிறது. அந்த ஊற்றுக்குத் தென் பக்கம் ஒரு நாழிகை தூரத்தில் சுவர்க்கபத மகா முனிவர் ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்கு வடபுறம் கூப்பிடு தூரத்திலிருக்குஞ் சதம்புத் தரையிலுள்ள கள்ளிச்செடிகளுக்கு மத்தியில்பயற்றங்காய்க் கள்ளிமரமு மிருக்கிறது. அந்த மரத்தின் பாலெடுத்து சங்குப் பாசாணத்தைச் சுருக்கிட்டு எடுக்கக் கட்டிப்போகும் அதைக் கல்வத்திலிட்டு இந்தப் பாலை விட்டரைத்து வில்லை செய்து காயவைத்து பத் தெருவில் புடமிடக் கற்பமாகும். அதைத் தேனிற் குழப்பிச் சாப்பிடக் காயசித்தியாகும்.

## சுவாமிமலை காஞ்சன பருவதம் விண்ணேக்கிச் சித்தர் குகை, 225. செங்கொடி வேலிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கள்ளிக்காட்டுக்கு வட பக்கம் ஒரு நாழிகை தூரத்தில் கருப்ப நாச்சி முந்த விருக்கிறது அந்த முந்தலுக்கு வட பக்கம் போகிற பாதையில் அரை நாழிகை தூரத்தில் சுவாமி மலை யிருக்கிறது. அதற்கு மேற்காகக் குளிர் வனமும் அவ் வனத்திற்கு வட பக்கம் அம்பிடு தூரத்தில் சதாசிவன் கோவிலுமிருக்கிறது. அந்த கோவிலுக்கு மேல் பக்கம் போகிற பாதையில் விண்ணேக்கிச் சித்தர் குகை யிருக்கிறது. அக் குகைக்கு மேல் பக்கம் சுனையும், அதற்கு வட பக்கம் அகத்தியர் ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்குத் தென்பக்கத்தில் புலத்திய ராச்சிரமமு மிருக்கிறது. அதன் வட பக்கம் கசிவுத்தரையில் செங்கொடி வேலிச் செடிகளிருக்கிறது. இந்தச் செடியின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 27 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## காஞ்சன பருவதம் மலை கொங்கு கொங்கண முனிவர் ஆச்சிரமம், 226. கல்தாமரைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த ஆச்சிரமத்திற்கு வட பக்கம் அரை நாழிகை தூரத்தில் வெள்ளோடை யிருக்கிறது. அந்த ஓடைக்கு மேல் பக்கம் போகிற பாதையில் கல்லெறி தூரத்தில் தேவி பாறையும், அப்பாறைக்கு வட பக்கம் பருவத மலையும், அம் மலைக்கு வட பக்கம் போகிற பாதையில் அம்பிடு தூரத்தில் கொங்கண முனிவ ராச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்குத் தென் பக்கம் தொழுகண்ண ராச்சிரமமு மிருக்கிறது. அந்த ஆச்சிரமங்களுக்கு வட பக்கம் போகிற பாதை வழியே போனால் அங்கே ஒரு குகை யிருக்கிறது. அக் குகைக்கு வட பக்கம் சதம்புத் தரையில் கல் தாமரை யிருக்கிறது. இந்தத் தாமரையின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 44 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## காஞ்சன பருவதம் கொங்கு மலை சங்கிலிச் சித்தர் ஆச்சிரமம், 227. முண்டக விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சதம்புத் தரைக்கு வட பக்கம் போகிற பாதையில் கொங்குநாட்டு மலை யிருக்கிறது. அம்மலைக்குப் பக்கத்தில் காலாஞ்சிப் பாறை யிருக்கிறது. அந்தப் பாறையின் மேலேறிப் பார்த்தால் பக்கத்தி லிருக்கிற நாடுக ளெல்லாந் தெரியும். அந்தப் பாறைக்கு வட பக்கம் ஒரு நாழிகை தூரத்தில் காளுறு வரு கிறது. அந்த ஆற்றைக் கடந்து அம்பிடு தூரம் போனால் சங்கிலிச் சித்தராச்சிரம மிருக்கிறது அந்த ஆச்சிரமந்தான் கொங்கண முனிவ ருக்கு ஆதியில் வாசஞ் செய்த இடமாகும். அதன் பின் சதுரகிரி மலைக்கு வந்தார். அந்த ஆச்சிரமத்திற்கு வட பக்கம் காற்றுடி வன மும், அவ் வனத்திற்கு தென் பக்கம் சித்தர் குகையும், அக் குகைக்கு வட பக்கமாக முண்டக விருட்சமு மிருக்கிறது. இந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 46 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## காஞ்சன பருவதம் உடுமலை கருவூரார் குகை, 228. கருநெல்லிமரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சித்தர் குகைக்கு வட பக்கம் போகிற பாதையில் அரை நாழிகை தூரத்தில் உடுமலை யிருக்கிறது. அந்த மலைமேல் ஒரு நாழிகை தூரத்தில் பிளவுப் பாறை யிருக்கிறது.

அதில் நின்று பார்த்தால் உடுமலைப் பேட்டை தெரியும். அந்தப் பாறைக்கு மேல் பக்கம் போகிற பாதையில் அம்பிடு தூரத்தில் மலைக் குவடு யிருக்கிறது. அக் குவட்டிற்கு தென்புரமாகக் கீழேயிறங்கி அரை நாழிகை தூரம் போனால் கருவூரார் குகையும், அக் குகைக்கு வட பக்கம் கூப்பிடு தூரத்தில் செவல் தரையில் கருநெல்லி மரமு மிருக்கிறது. இந்த மரத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 105 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## காஞ்சன பருவதம் பூலூற்று மலை அகிலாண்டச் சித்தர் குகை, 229. சுணங்க விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் செவல்த் தரைக்கு வட பக்கம் பாதை வழியே போனால் பூலூற்று மலை யிருக்கிறது. அந்த மலை மேல் அம்பிடு தூரத்தில் பாம்புகளிருக்கும் கெவி யிருக்கிறது. அந்தக் கெவிக்குப் போகாமல் அதற்கு மேல் பக்கம் போகிற பாதை வழியே போய் மேடேறி மலைமேல் வந்தால் அம்பிடு தூரத்தில் அகிலாண்டச் சித்தர் குகையிருக்கிறது. அந்தக் குகைக்கு வட பக்கம் பாம்பாட்டிச் சித்தர் ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்குத் தென் பக்கம் போகிற பாதையில் அரை நாழிகை தூரத்தில் துற்கா கானலு மிருக்கிறது. அந்தக் கானலுக்குள் நுழையாமல் வடக்கே போகிற பாதையில் அம்பிடு தூரம் போனால் அங்கே சுணங்க விருட்ச மிருக்கிறது. இந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 131 நிர். ல் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## காஞ்சன பருவதம் மஞ்ச மலை வால்மீக மகா ரிசி ஆச்சிரமம், 230. சாயா விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த துற்கா கானலுக்கு வடபுரம் ஒரு நாழிகை தூரத்தில் மஞ்ச மலையும் அதற்கு ஒரு நாழிகை தூரத்தில் சவுக்கப் பாறையு மிருக்கிறது. அதற்கு மேல் பக்கம் அம்பிடு தூரத்திலுள்ள ஆற்றுக்கு வட பக்கம் போகிற பாதையில் கூப்பிடு தூரத்தில் பாலோடையும், அந்த ஓடைக்கு மேல் பக்கம் அரை நாழிகை தூரத்தில் கல்லூற்றும், அந்தக் கல்லூற்றுக்கு மேல் பாரிசமாக இரண்டு நாழிகை தூரத்திலுள்ள வால்மீக மகாரிசி ஆச்சிரமத்திற்குப் பக்கத்தி லிருக்கிற கருங் கானலுக்கு வடபுறம் சாயா விருட்சமு மிருக்கிறது. இதன் விபரங்களை 120 நிர். ல் கூறி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## காஞ்சன பருவதம் பொள்ளாச்சி மலை விளையாட்டுச் சித்தர் குகை, 231. கணை விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கருங்கானலிலிருந்து வடக்கு முகமாய் ஒரு நாழிகை தூரத்தில் பொள்ளாச்சி மலையிருக்கிறது. அந்த மலைமேல் அரை நாழிகை தூரம் போனால் வயற்றுப் பாறையிருக்கிறது. அந்தப் பாறைமேலே நின்று பார்த்தால் பொள்ளாச்சியென்ற ஊர் தெரியும். அப் பாறைக்கு மேல் பக்கமிருந்து கூப்பிடு தூரத்தில் பாலாறு வருகிறது. அந்த ஆற்றுக்கு மேல் பக்கமாக அரை நாழிகை தூரத்தில் கானலோடையும், அவ் வோடைக்கு அம்பிடு தூரத்தில் அத்தி ஊற்றும், அந்த ஊற்றுக்கு மேல்புறம் விளையாட்டுச் சித்தர் குகையும், அந்தக் குகைக்குக் கூப்பிடுதூரத்தில் கணையெருமை விருட்சமுமிருக்கிறது. இந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையம், 54 நிர் ல் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## காஞ்சன பருவதம் பொள்ளாச்சி மலை விமலச் சித்தர் குகை, 232. கரு நாரத்தை மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குகைக்கு மேல் பக்கமாக ஒரு நாழிகை தூரத்தில் தந்திமலையும், அம் மலைக்கு வட பக்கமாகக் கூப்பிடு தூரத்தில் உதகச் சுனையுமிருக்கிறது. அச்சுனைக்கு வட பக்கமாக அரை நாழிகை தூரத்தில் கல்லாறும், அந்த ஆற்றுக்கு வட பக்கமிருந்து கூப்பிடு தூரத்தில் பாலூற்றும், அந்தப் பாலூற்றுக்கு மேல் பக்கமிருந்து இரண்டு நாழிகை தூரத்தில் விமலச் சித்தர் குகையும் இருக்கிறது. அந்தக் குகைக்கு வட பக்கமிருக்கும் மணல் தரையில் கரு நாரத்தை மரமிருக்கிறது. இந்த மரத்தின் குணங்களையும், சாப்பிடு முறைகளையும், 137 நிர். ல் விபரமாய்ச் சொல்லியிருக்கிறது அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## பொள்ளாச்சி தேவி மலை திரிகோணச் சித்தர் ஆச்சிரமம், 233. வெண்ணாவல் மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த விமலச்சித்தர் குகைக்குத் தென் பக்கமிருந்து இரண்டுநாழிகை தூரத்தில் தேவிமலையும், அந்த மலைக்குத் தென்புறத்தில் ஒரு சுனையும், அச் சுனைக்கு மேல் பக்கம் போகிற பாதையிற் குண்டாறுமிருக்கிறது. அந்த ஆற்றுக்கு வடபுறமிருந்து

அரை நாழிகை தூரத்தில் மந்தி யோடையும், அந்த ஓடையைக் கடந்து அம்பிடு தூரத்தில் திரிகோணச் சித்தர் ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்கு வட கிழக்கு மூலையில் வெண்ணாவல் மரமு மிருக் கிறது. இந்த மரத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 37 நிர். ல் கூறியிருக்கிறது அதன்படி செய்யச் சித்தியாகும்.

### வெள்ளியங்கிரி கைலாய பருவதம் அமுர்தச்சித்தர் குகை, 234. உரோம விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த ஆச்சிரமத்திற்கு வட பக்க மிருந்து இரண்டு நாழிகை தூரத்தில் வெள்ளியங்கிரி மலை யிருக்கிறது. அந்த மலை மேலேறி அரை நாழிகை தூரம் வந்தால் நடராசர் கோவி லிருக்கிறது. அக் கோவிலுக்கு மேல் பக்கம் ஒரு நாழிகை தூரத்தில் அமுர்தச் சித்தர் ஆச்சிரமமும், அந்த ஆச்சிரமத்திற்கு மேல் பக்கம் ஒரு குகையும், அக் குகைக்கு வட பக்கம் அம்பிடு தூரத்தில் கருங் கானலும், அக் கானலுக்கு மேல் பக்கம் உரோம விருட்சமும் இருக் கிறது. இந்த விருட்சத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளை யும், 104 நிர். ல் விபரமாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

### வெள்ளிளங்கிரி செம்பாயி மலை மிருகண்ட மகா ரிசி ஆச்சிரமம், 235. உதிர வேங்கை மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் கருங்கானலுக்கு வட பக்க மிருந்து இரண்டு நாழிகை தூரத்தில் செம்பாயி மலை யிருக்கிறது. அந்த மலை மேல் ஒரு நாழிகை தூரம் போனால் ஒரு ஆறு வருகிறது. அந்த ஆற்றுற்கு வட பக்கம் கூப்பிடு தூரத்தில் பாலோடையும் அந்த ஓடைக்கு மேல் பக்கம் பாம்புற்று மிருக்கிறது. அந்தவூற்றுக்கு அரை நாழிகை தூரத்தில் மிருகண்ட மகா ரிசி ஆச்சிரமமும், அந்த ஆச்சிர மத்திற்கு வட பக்கமாக ஒரு நாழிகை தூரத்தில் பேச்சி கானலும், அக் கானலுக்கு மேல் பக்கம் உதிரவேங்கை மரமு மிருக்கிறது. அந்த மரத்தின் குணங்களையும், சாப்பிடும் முறைகளையும், 134 நிர். ல் விபர மாய்ச் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

### கைலையங்கிரி இமைய மலை பாராபரச் சித்தர் குகை, 236. சோதி விருட்சக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தப் பேச்சி கானலிலிருந்து வடக்கே போகிற பாதையில் அரை நாழிகை தூரத்தில் கைலையங்கிரி

மலை யிருக்கிறது. அம் மலைமேல் கூப்பிடு தூரத்தில் வடக்கே ஒரு ஓடையும். அதற்குப் பக்கத்தில் மாவூற்றும், அந்தவூற்றுக்கு வடபுறம் சதுரக் கல் பாறையு மிருக்கிறது. அப் பாறைக்கு வட பக்கம் பராபரச் சித்தர் குகையும், அந்தக் குகைக்கு வடக்கேயுள்ள பெருங்கானலுக்கு மேல்புறம் சோதிவிருட்சமு மிருக்கிறது. இதன் விபரங்களை 65 நிர். ல் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## கைலையங்கிரி சித்தர் மலை பிடி நாக்கீசர் குகை, 237. ஏரழிஞ்சி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தப் பெருங்கானலுக்கு வடபக்கம் ஒரு நாழிகை தூரத்திலுள்ள சித்தர் மலை மேல் அரை நாழிகை தூரத்தில் வருகிற ஆற்றுக்கு வட மேற்காக அரை நாழிகை தூரத்தில் ஒரு ஓடையும், அதற்கு வடக்கே கூப்பிடு தூரத்தில் மணலூற்றும், அந்தவூற்றுக்கு வடபக்கம் அம்பிடு தூரத்தில் பிடிநாக்கீசர் குகையு மிருக்கிறது. அக்குகைக்குள் அநேக சித்தர்கள் தவசு செய்து கொண்டிருப்பார்கள். அக் குகைக்கு வட பக்கம் ஏரழிஞ்சி மர மிருக்கிறது. இதன் விபரங்களை 49 நிர். ல் சொல்லி யிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

(இது வரையிலும் கைலையங்கிரி மலையின் எல்லை)

## பாலக்காடு மலை, திரிகூட பருவதம் பரஞ்சோதி முனிவர் ஆச்சிரமம், 238. சோதிப்புல் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தக் குகைக்கு வடபக்க முள்ள கொஞ்சி மலைமேல் ஒருநாழிகை தூரத்திலுள்ள கரும்பாறை மேலேறிப் பார்த்தால் பாலக் காட்டைச் சேர்ந்த நாடுகள் தெரியும். அந்தப் பாறையைக் கடந்து வடக்கே ஒரு நாழிகைதூரத்தில் உதகச்சுனையும், அச் சுனைக்கு வட மேற்காயுள்ள சரளைத் தரைக்கு வடக்கே அரை நாழிகை தூரத்திலுள்ள பெரிய வனத்திற்கு மேல் பக்கத்தில் பரஞ்சோதி முனிவர் ஆச்சிரமமும், அதன் பக்கத்தில் தொறட்டிக் கானலும், அதற்கு வடபக்க முள்ள திருகைப் பாறைக்கு வடபக்கம் அம்பிடு தூரத்தில் கசிவுத்தரையில் சோதிப் புல்லும் முளைத்திருக்கிறது. அதன் விபரங்களை 23 நிர். ல் கூறி யிருக்கிறது. பார்த்துக் கொள்ளவும்.

## பாலக்காட்டுமலை திரிகூட பருவதம் சினேந்திர முனிவர் ஆச்சிரமம், 239. அழுகண்ணிச் செடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தத் திருகைப் பாறைக்கு வட பக்கம் பாதையில் ஒரு நாழிகை தூரத்திலுள்ள பெரிய கெவியைக் கடந்து குதிரை மலையும், அம்மலைக்குப் பக்கத்தில் கல் சுனையும், அச் சுனைக்கு வடக்கே கூப்பிடு தூரத்திலுள்ள ஆற்றுக்கு வடக்கே கல் லெறி தூரத்திலுள்ள சினேந்திர முனிவர் ஆச்சிரமத்திற்குத் தென் பக்க முள்ள ஓடையையும் கடந்து தெற்கே யிருக்கும் தேவி வனத் திற்கு வடமேற்கு மூலையில் அழுகண்ணிச் செடிகள் முளைத்திருக் கிறது. இந்தச் செடியின் விபரங்களை 52 நிர். ல் கூறியிருக்கிறது. அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

## பாலக்காடு திரிகூட பருவதம் அவந்திய மகா முனிவர் ஆச்சிரமம், 240. தொழுகண்ணிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த வனத்திற்கு வட மேல் பக்கம் அம்பிடு தூரத்திலுள்ள கருமலையின் மேலேறி இரண்டு நாழிகை தூரம் போனால் அங்கே சுனையும், அச் சுனைக்கு வட பக்கம் அரை நாழிகை தூரத்திலுள்ள ஆற்றுக்கு வடக்கே ஒரு நாழிகை தூரத்தில் மலையூற் றும், அந்த ஊற்றுக்கு மேல்பக்கம் அவந்தியமகா முனிவர் ஆச்சிரம மும், அந்த ஆச்சிரமத்திற்கு மேல் பக்கம் கூப்பிடு தூரத்திலுள்ள கசிவுத் தரையில் தொழுகண்ணிச் செடி யிருக்கிறது. இந்தச் செடியின் விபரங்களை 53.நிர். ல் சொல்லி யிருக்கிறது. பார்க்கவும்

## பாலக்காடு திரிகூட பருவதம் புலியானந்தர் ஆச்சிரமம், 241. ஆடுதின்னாப் பாளைக் கொடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த ஊற்றுக்கு வட பக்கம் இரண்டு நாழிகை தூரத்திலுள்ள குண்டு மலைக்கு வட பக்கம் அம்பிடு தூரத் தில் குமிளப் பாறையும், அப் பாறைக்குத் தென்மேற்காக அம்பிடு தூரத்திலிருந்து வடபக்கம் அரை நாழிகை தூரத்திலுள்ள சுனைக்கு வடமேற்கே ஒரு நாழிகை தூரத்தில் புலியானந்தர் ஆச்சிரமமு மிருக் கிறது. அதற்குப் பின் பக்கத்திலுள்ள சருவி யாற்றுக்கு வடக்கே சதம்புத் தரையில் ஆடுதின்னாப்பாளை யிருக்கிறது. அந்தக் கொடி சிறி தாயும், முள உயரமாயும், இலை வட்டமாயும், சாம்பல் நிறமாயு மிருக்

கும். இதன் இலையைச் சூரணஞ் செய்துசமன் சர்க்கரை சேர்த்து வெருகடிப் பிரமாணஞ் சாப்பிட்டு வர எந்தவிதமான விடங் கடித்தாலும் விட மிராது சரீரம் பெலக்கும்.

## பாலக்காடு திரிகூட பர்வதம் வெகுளி நாதர் ஆச்சிரமம்,

## 242. ஆடாதோடைக் கற்பம்

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சதம்புத் தரைக்கு வட பக்கம் இரண்டு நாழிகை தூரத்திலுள்ள மூவூற்று மலை மேல் ஒரு நாழிகை தூரத்திலுள்ள பெரிய கெவிக்கு மேற்கே அரை நாழிகை தூரத்திலிருக்கும் பாறையின் மேலேறி வடபக்கம் வருகிற பாதையில் ஒரு நாழிகை தூரம் போனால் வெகுளிநாதர் ஆச்சிரமமும். அதற்கு கீழ் பக்கமுள்ள சுனையையும், ஆற்றையுங் கடந்து வடக்கே வந்தால் சதம்புத் தரையில் ஆடாதோடைச் செடிகளிருக்கிறது. இந்தச் செடி ஆளுயரமாயும், மாவிலைபோல் நீண்டும், புட்பம் வெண்மை நிறமாயும், சிறிதாயு மிருக்கும். இந்த யிலையின் சாரெடுத்துச் சலாசத்தில் விட்டரைத்து வில்லை தட்டிக் காயவைத்துப் பத்தெருவில் புட மிடப் பற்பமாகும். இந்தப் பற்பத்தைத் தேனிற் குழப்பிச் சாப்பிட்டு வரக் காயசித்தி யாகும்

(இது வரையிலும் பாலக்காடு மலையின் எல்லை)

## நீலகிரி சிவிங்கிய பருவதம் தத்துவ நாதர் ஆச்சிரமம்,

## 243. முப்பிரண்டைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சதம்புத் தரைக்கு வட பக்கம் இரண்டு நாழிகை தூரத்திலுள்ள நீலகிரி மலைக்குத் தென் பக்கம் ஒரு சுனையும், அந்தச் சுனைக்கு அம்பிடு தூரத்திலுள்ள பெரிய கானலுக்குள் தத்துவ நாதர் ஆச்சிரமமும், அவ்வாச்சிரமத்திற்கு மேல்புறம் மண் கண்டத் தரையில் முப்பிரண்டைக் கொடிகளும் படர்ந்திருக்கிறது. அதன் விபரங்களை 110 நிர். ல் சொல்லியிருக்கிறது பார்க்கவும்.

## நீலகிரி சிவிங்கிய பருவதம் நாரத முனிவர் ஆச்சிரமம்,

## 244. புளியம் பிரண்டைக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மண்கண்ட தரைக்கு வடக்கேயுள்ள பெரிய கான லுக்கு மேல்புறம் செடிகளடர்ந்த காடும் அக் காட்டுக்கு மேல் பாரிசம் ஒரு நாழிகை தூரத்தில் நாரத முனிவர்ஆச்சிரமமும், அதற்கு மேல் பக்கம் சதம்புத்தரையும், அந்தத் தரைக்கு வட

பக்கம் கரும்பாறையும், அந்தப் பாறைக்கு மேல் புறமாக மண்கண்ட மலையிருக்கிறது. அம்மலையில் அப்பிரேகம் பாறை பாறையாயிருக்கிறது அதற்கு அம்பிடு தூரத்தில் புளியம் பிரண்டைக் கொடியிருக்கிறது. அந்தக் கொடி சிறிதாயும், இலை இரண்டு விரற்கடை யகலமாயும், இலை, கொடி, யாவுஞ் சுனையுடனிருக்கும். இதைச் சமூலம் பிடுங்கிச் சாறெடுத்துப் பசுவின் பாலிற் கலக்கிச் சாப்பிடக் காயசித்தி யாகும்.

## நீலகிரி சிவிங்கிய பருவதம் காயசித்தி நாதர் ஆச்சிரமம்,

## 245. சீதா செங்கழுநீர்க் கொடிக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்த மண் கண்ட மலைக்குத் தென் பக்கம் அரைநாழிகை தூரம் போனால் சவ்வாது மலையிருக்கிறது. அந்த மலையில் சவ்வாதுப் பூனைகள் ஏராளமா யிருப்பதால் எப்பொழுதும் சவ்வாது வாடை வீசிக்கொண்டிருக்கும் அவ்விடத்திற்கு வடமேற்கே நாலு நாழிகை தூரத்தில் சிறு வாய்க்கால் போல் தண்ணீர் ஓடிக்கொண்டேயிருக்கும் நச்சுப்பொய்கை யிருக்கிறது. அதில் தண்ணீர் சாப்பிட்டால் உடனே மயக்க முண்டாகி உயிர் நீங்கும். அதன் மேல் பக்கம் காயசித்தி நாதர் ஆச்சிரமமும் அதற்குத் தென்புறம் அம்பிடு தூரத்திலுள்ள சதம்புத் தரையில் சீதா செங்கழு நீர்க் கொடியு மிருக்கிறது. அந்தக் கொடி சிறிதாயும், அழகாயும், இலை வேலிப் பருத்தியி னிலை போலு மிருக்கும் இதன் தூரில் கிழங்கிருக்கும். இந்தக் கிழங்கைப் பால் விட்டரைத்துக் கலக்கிச் சாப்பிட்டு வரக் காயசித்தியாகும்.

## நீலகிரி சிவிங்கிய பருவதம் ஞானாநந்தச் சித்தர்

## 246. கொஞ்சி மரக் கற்பம்.

கேளுங்கள் முனிவர்களே! அந்தச் சதம்புத் தரைக்குத் தென் பக்கம் பாதையில் அரை நாழிகை தூரம் போனால் அங்கே குண்டாறு வருகிறது. அந்த ஆற்றுக்குத் தெற்கே யிருக்கிற சானல் வழியாய்ப் போனால் அங்கே பெரிய கானலிருக்கிறது. அந்தக் கானலுக்கு மேல் பக்கம் கூப்பிடு தூரத்திள்ள சுனைக்குக் கீழ்பக்கம் கொஞ்சி மரமிருக்கிறது இதன் விபரங்களை 178 நிர். ல் சொல்லி யிருக்கிறது அந்தப்படி செய்யச் சித்தியாகும்.

( இது வரையிலும் நீலகிரி மலையின் எல்லை முற்றிற்று )

மலைவாகடம் முற்றிற்று.

பரமபதி துணை.

# மலைவள சாஸ்திர மென்னும்

# மலை வாகடத்தின் அட்டவணை.

மலைவாகடம் அட்டவணை முற்றிற்று.